# ஸ்ரீஜகன்னாத தாசர்

# பற்றிய கட்டுரைகள்

கன்னடத்தில் :
பல கட்டுரையாளர்கள்

தமிழில் மொழிபெயர்ப்பு:

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# ஸ்ரீஜகன்னாததாசர்

## பற்றிய கட்டுரைகள்

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீஜகன்னாத தாசரின் ஆராதனை - 15-09-2021
அன்று வெளியிடப்பட்டது.

**தொடர்புக்கு:**

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
8904458276 haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

**சலுகை விலையில் இந்தப் புத்தகம் வெளிவருவதற்கு பொருளுதவி புரிந்த ஹரி பக்தர்கள் அனைவருக்கும் நன்றி!!!**

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

# பொருளடக்கம்

***

# முன்னுரை

ஜலஜேஷ்ட நிபா3காரம் ஜகதீ3ஷ ப1தாஸ்ரயம்
ஜகதீ1த1ல விக்2யாத1ம் ஜகன்னாத கு3ரும்ப4ஜே |
தா3சவர்யம் த3யாயுக்த1ம் து3ரீக்ருத1 து3ராஷிஷம்
ஹரிகதாம்ருத வக்தா1ரம் ஜகன்னாத கு3ரும்ப4ஜே |
ஜகன்னாத ஜகன்னாத ஜகன்னாதேதி நித்1யஷ:
ய: சதாஸ்மரதே ஸ ஸ்ரீ ஜகன்னாதம் ப்ரபத்யதே ||

தாச சதுஷ்டயர்களில் ஒருவரான ஸ்ரீஜகன்னாததாசரைப் பற்றிய கட்டுரைகளைக் கொண்ட புத்தகம் இது. ஹரிகதாம்ருத சாரம், தத்வ சுவ்வாலி போன்ற கிரந்தங்களை இயற்றிய, ஹரிதாச சாகித்யத்திற்கு பெரும் பங்காற்றி, பரம்பரையில் பல சிஷ்யர்களை வளர்த்தெடுத்து, அவர்கள் மூலமாகவும் இந்த பக்தி சாகித்யம் வளருமாறு செய்த மகானுபாவர் ஸ்ரீஜகன்னாததாசர்.

இவரது வாழ்க்கை வரலாறு, கிரந்தங்கள், தேவரநாமாக்கள் என சிலவற்றை நாம் ஏற்கனவே அறிந்திருக்கலாம். ஆனால் மிகவும் விரிவான, ஆழமான கண்ணோட்டத்துடன் கூடிய விஷயங்களைக் கொண்ட அற்புதமான கட்டுரைகளைக் கொண்ட தொகுப்பு ஒன்று கன்னடத்தில் பார்த்தவுடன், உடனடியாக இது தமிழிலும் வரவேண்டும் என்று நினைத்த தற்கு, ஸ்ரீஜகன்னாததாசரின் அந்தர்யாமியான ஜகன்னாத விட்டலனின் அருளால் இந்தப் புத்தகம் இப்போது வந்திருக்கிறது.

இந்தத் தொகுப்பில் 25 முத்தான கட்டுரைகள் உள்ளன. இவற்றை எழுதியவர்கள் அனைவரும் ஹரிதாச சாகித்யத்தில் குறிப்பிடத்தக்க ஆராய்ச்சியாளர்களே. திரு.அருளுமல்லிகெ பார்த்தசாரதி, திரு.ராமசேஷன், திருமதி. ஜெயலட்சுமி மங்களாமூர்த்தி என பலரை நாம் ஏற்கனவே அறிந்திருக்கலாம். இந்தக் கட்டுரைகளைப் படித்து, அவர்களின் ஆராய்ச்சியை, சிந்தனையை, அதன் மூலம் ஸ்ரீஜகன்னாததாசரின் மகிமையையும், அவரது கிரந்தங்களின் சிறப்பினையும், மத்வ சித்தாந்தத்தின் அருமை பெருமைகளையும் அறிவோம்.

இந்தத் தொகுப்பு வெளிவருவதற்கு பொருளுதவி செய்த ஸ்பான்ஸர்ஸ் / ஹரிபக்தர்களுக்கு கண்டிப்பாக நன்றி கூற வேண்டும். அவர்கள் உதவியின்றி இப்புத்தகம் தமிழ் அன்பர்களுக்குக் கிடைத்திருக்காது. இத்துடன் ஒரு கட்டுரையையும், தக்க முன்னுரையையும் எழுதிக் கொடுத்த திரு.லட்சுமிபதிராஜா அவர்களுக்கும் மிக்க நன்றி.

ஜகன்னாதவிட்டலனின் அருள் அனைவருக்கும் கிடைக்கட்டும்.

ஹரே ஸ்ரீனிவாஸா. ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**
**30-08-2021 கோகுலாஷ்டமி**

**நாஹம் கர்தா ஹரி: கர்தா**

## வாழ்த்துரை

ஸ்ரீ ஜகன்னாத தாஸர் பிரஸித்தியான அஷ்ட தாஸர்களில் ஒருவராக போற்றப்படுபவர். இவர் தாஸ தீக்ஷை பெறுவதற்கு முன்பு ஸ்ரீநிவாஸ ஆச்சாரியராக இருந்த போதே ஸமஸ்கிருதத்தில் மாபெரும் புலமை பெற்று ஸ்ரீமன் நியாய ஸுதா க்ரந்தத்திற்கு பாட பிரவசனங்களை இடைவிடாது கொடுத்து வந்தவர். மூலரூபத்தில் கர்மஜ தேவதையான தாஸர், ஸ்ரீ விஜய தாஸரின் ஆணைக்கிணங்க கோபால தாஸர் மூலமாக 40 வருட ஆயுட்காலத்தைத் தானமாகப் பெற்று, பண்டரிபுரத்தில் சந்திரபாகா நதிக்கரையில் பகவானே இவருக்கு 'ஜகன்னாத விட்டல' என்னும் அங்கிதத்தை அளிக்க, தமது மீதமுள்ள ஆயுட்காலம் முழுவதையுமே தாஸ மார்க்கத்தில், கன்னடத்தில் பல க்ருதிகளை ரசனை செய்வதிலேயே கழித்தவர். தாஸரின் கன்னட படைப்புகளில் மேருக்ருதியாகப் போற்றப்படுவது ஸ்ரீமத் ஹரிகதாம்ருத ஸாரம்' ஆகும். தத்வங்களின் தொகுப்பை த்ரிவிக்ரம ரூபமாக ஹரிகதாம்ருத ஸாரத்தில் அருளிய தாஸர், சுருக்கமாக அதன் வாமன ரூபமாக 'அணு ஹரிகதாம்ருத ஸாரத்தையும் (பலவிது பாள்துதக்கெ)' அருளியுள்ளார். அந்த வகையில் தாஸர், ஸ்ரீ ஹரியையும், தேவதைகளையும் ஸ்தோத்திரம் , தத்துவங்களின் சாரத்தையும் தொகுத்து நமக்கு அளித்துள்ள கன்னட கிரந்தமே 'தத்வ ஸுவ்வாலி' என்பதாகும்.

ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் வாழ்க்கை சரித்திரம் மற்றும் படைப்புகளைப் பற்றியதான பல்வேறு பண்டிதர்களின் கட்டுரைகளைத் தொகுத்து வெளிடப்பட்டுள்ள இந்த நூலில் ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் வாழ்க்கைச் சரித்திரம், சில அற்புத சம்பவங்கள், ஹரிதாஸ சாகித்யத்தில் ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் பங்கு, ஜகன்னாத தாஸரின் ஸுளாதிகள், அதிலும் குறிப்பாக ஹரிகதாம்ருத ஸாரத்தில் அமைந்துள்ள கருத்துக்களின் ஸாராம்ஸம், அதில் விளக்கப்பட்டுள்ள ஞான பக்தி வைராக்கியம், உவமான உவமேயங்கள், நீதிநெறி, மொழியின் சிறப்பு, நரஸிம்ம ஸ்துதி, சங்கீதத்தின் அம்சங்கள், தேவதா-வர்ணனை, ஹரிகதாம்ருத ஸாரம் மற்றும் தத்வஸுவ்வாலி கிரந்தங்களின் ஒப்பீடு, தாஸரின் கிருதிகளில் உள்ள சிறப்பு அம்சங்கள், தாஸரின் பாடல்களில் சுற்றுச்சூழல் பாதுகாப்பு, நாட்டுப்புற பண்களின் அம்சங்கள், தாஸரின் படைப்புகளில் ஒன்றான 'பலவிது பாள்துதக்கெ', மானவி பகுதி ஹரிதாஸர்கள் எனப் பல்வேறு சுவையான, அனைவரும் அறிய வேண்டிய, மிக அரிதான தலைப்புகளில் கட்டுரைகள் அமைந்துள்ளன.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நூலைத் தமிழில் 'ஜகன்னாத கேஸவ' திரு.சத்ய நாராயணன் அவர்கள் வெளியிட்டுள்ளார். அவர் சமீபகாலத்தில் வெளியிட்டுள்ள பல மொழிபெயர்ப்பு நூல்களின் வரிசையில், இதுவும் அவருக்கு பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஸ்ரீ ஜகன்னாத தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்மர் ஆயுள், ஆரோக்கியம், ஐஸ்வர்யம் மற்றும் மனச்சாந்தி இவைகளை அருளி, இதுபோல் இன்னும் பல மொழிபெயர்ப்பு நூல்களைத் தமிழில் வெளியிட வேண்டும் என ப்ரார்த்தனை செய்கிறேன்.

மேடவாக்கம் சென்னை
நாள் : 28-8-2021

**'பிரஸங்க பூஷணம்'**
**'பிரவசன பூஷணம்'**
**S.லக்ஷ்மிபதிராஜா**

### ஜகன்னாததாசரின்

# 1. வாழ்க்கைச் சரிதம்

**வித்யாவாசஸ்பதி**
**டாக்டர். அருளுமல்லிகெ பார்த்தசாரதி**

ஜலஜேஷ்ட நிபா$^{3}$காரம் ஜகதீ$^{3}$ஷ ப$^{1}$தாஸ்ரயம்
ஜகதீ$^{1}$த$^{1}$ல விக்$^{2}$யாத$^{1}$ம் ஜகன்னாத கு$^{3}$ரும்ப$^{4}$ஜே ।
தா$^{3}$சவர்யம் த$^{3}$யாயுக்த$^{1}$ம் து$^{3}$ரீக்ருத$^{1}$ து$^{3}$ராஷிஷம்
ஹறிகதாம்ருத வக்தா$^{1}$ரம் ஜகன்னாத கு$^{3}$ரும்ப$^{4}$ஜே ।
ஜகன்னாத ஜகன்னாத ஜகன்னாதேதி நித்$^{1}$யஷ:
ய: சதாஸ்மரதே ஸ ஸ்ரீ ஜகன்னாதம் ப்ரபத்யதே ||

கன்னட பக்தி சாகித்யத்தின் மேருமலை ஜகன்னாததாசர். ஹரிதாச சதுஷ்டயர் என்று புகழ்பெற்றவர்கள் புரந்தரதாசர், விஜயதாசர், கோபாலதாசர் மற்றும் ஜகன்னாததாசர் ஆகியோர். ஹரிதாச சாகித்யத்திற்கு தம் பங்கினை சிறப்பாகச் செய்து, சூரிய சந்திரர்கள் இருக்கும் காலம் வரை இருக்குமாறு அவர் இயற்றிய கிரந்தங்கள், தத்வசாகித்யங்கள், கன்னட பக்தர்களுக்கு ஒரு மிகப்பெரிய வரப்பிரசாதமாகும். மேலும் பற்பல ஆன்மிக பக்தர்களுக்கு சிஷ்யர்களுக்கு ஹரிதாச தீட்சையினைக் கொடுத்து தாசகூட மற்றும் ஹரிதாச பரம்பரையினை மிகச் சிறப்பாக முன்னெடுத்துச் சென்றவர் ஜகன்னாததாசர்.

அத்வைத மதத்தை நிறுவிய சங்கராச்சாரியரின் பரம்பரையில் வந்த வித்யாரண்யரைப் போல, விசிஷ்டாத்வைத மதத்தை நிறுவிய ராமானுஜாச்சாரியரின் பரம்பரையில் வந்த வேதாந்த தேசிகரைப் போல, த்வைத மதத்தை நிறுவிய ஸ்ரீமன் மத்வாசார்யரின் பரம்பரையில் வந்த ஜயதீர்த்தரைப் போல, புரந்தரதாசர் மூலமாக மீண்டும் துவங்கிய பாகவத தர்மத்திற்கு புத்தொளி ஊட்டிய மகானுபாவர் ஜகன்னாததாசர்.

பிரகலாத ராஜரின் சகோதரனான சஹ்லாதரே கலியுகத்தில் ஜகன்னாததாசராக அவதரித்திருக்கிறார் என்பது ஹரிதாசர் களிடம் வழிவழியாக வந்துகொண்டிருக்கும் நம்பிக்கை. ஹரிகதாம்ருதசார கிரந்தத்தின் 32வது சந்தியில் 34ம் ஸ்லோகத்தில் 'ஓதிசுவ குருகளனு ஜரிது சஹோதரரி குபதேஷிஸி' என்ற குறிப்பு இந்த நம்பிக்கைக்கு வலு சேர்க்கிறது. சஹ்லாதர் த்வாபர யுகத்தில் ஷல்யனாக அவதரித்தார். கர்ணனுக்கு சாரதியாக இருந்தார்.

கலியுகத்தில் கொண்டப்ப என்னும் பிராமணராக அவதரித்து, வாதிராஜரின் சிஷ்யராக இருந்து அவருக்கு சேவைகளை செய்திருக்கிறார் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. 'சூரிஜனரப்ரிய புரந்தர தாசார்யசுத' என்று ஜகன்னாததாசரின் நான்காவது பிறவியைப் பற்றி ஸ்ரீஷபிராணேசவிட்டலதாசர் பாடியிருக்கிறார். அதாவது புரந்தரதாசரின் நான்காவது மகனான அபினவ புரந்தரர் இவரே என்று தெரிவிக்கிறார். இவர் இறந்தபோதே புரந்தரதாசர் 'கிளியு பஞ்சரதொள் இல்லா' என்று பாடலைப் பாடினார். பிராணேசதாசரின் சொற்களின்படி, சஹ்லாதனின் ஐந்தாவது பிறவியே ஜகன்னாததாசர் ஆவார்.

ராய்ச்சூர் ஜில்லா, பாக்யவாட கிராமத்தில் பிறந்தார் தாசர். ஹரிதாச பரம்பரையில் அங்கிதம், ஹரிதாச தீட்சை பெற்றிருந்த நரசிம்மதாசரே இவரது தந்தை. அவரது இயற்பெயர் நரசப்பா. ஹரிதாசர்கள் எப்படி இருக்கவேண்டுமோ அதன்படியே வாழ்க்கை நடந்துவந்தது. யஜு:சாகா, ஹரிதச கோத்திரத்தைச் சேர்ந்தவர். பங்கனாமத திம்மண்ணதாசரிடமிருந்து 'நரசிம்மவிட்டலா' என்னும் அங்கிதத்தைப் பெற்றிருந்தார்.

## 1. வாழ்க்கைச் சரிதம்

ஜகன்னாததாசரின் தாய் லட்சுமம்மா, பல ஆண்டுகள் திருப்பதி ஸ்ரீனிவாசனுக்கு சேவை செய்ததன் பலனாக தாசர் பிறந்தார். அதற்காக அவருக்கு ஸ்ரீனிவாச என்றே பெயரிட்டனர். கிபி 1728ம் ஆண்டு ஜூலை 27 அன்று கீலக நாம சம்வத்சரம், சிராவண சுத்த த்விதியையன்று பிறந்தார்.

மானவி மண்ட[3]லத[3] ஷானுபோ[3]க நருசிம்ஹ
மானினி லட்சுமம்மா சூனுவாகி[3] சாலிவாக[3]ன
கீ[1]லக[1] சுத்தா[3]னுன சிராவண பிதிகெ[3] ஸ்ரீனிவாசன நாமதி --
(தந்தெ வெங்கடேசவிட்டலதாசர்)

ராய்ச்சூர் ஜில்லாவில் புகழ்பெற்ற கிராமம் பாக்யவாட. ரங்கனாத ஸ்வாமியின் நிரந்தர பக்தராக இருந்த நரசிம்மாசார்யர், எப்போதும் பக்தி காரியங்களிலேயே மூழ்கியிருந்தார். தம் தந்தை அனந்தாசார்யரிடமே கல்வியைக் கற்றார். லௌகீக வாழ்க்கையை மறந்து, ஞான பக்தி வைராக்கியத்துடன் இருந்த இவரைக் கண்ட சுமதீந்திர தீர்த்தர் இவருக்கு விசேஷ அனுக்கிரகத்தைச் செய்தார். தந்தையிடமிருந்தே வந்திருந்த விசேஷ சங்கீத ஞானம் மற்றும் பாண்டித்யம் இவைகளினால், கற்றவர் மற்றும் கல்லாதோர் இவர் இரண்டு பேர்களிடமும் நரசிம்மாசார்யர் மிக விரைவிலேயே நல்ல பெயரைப் பெற்றார். அப்போதைய உத்தராதி மடாதீசரான சத்யபூர்ண தீர்த்தர் ஒருமுறை இவரை மடத்திற்கு அழைத்து இவரை பாடவைத்து கேட்டது மட்டுமல்லாமல், 'நீங்களே பராவசு நாமம்கொண்ட கந்தர்வர். அபரோக்ஷ ஞானம் பெறுவதற்கான வழியைப் பின்பற்றுங்கள்' எனவும் தனிமையில் ஆசிர்வதித்தார். அன்றிலிருந்து ஹரிவாயுகளிடம் மிகுந்த பக்திகொண்டு, எந்நேரமும் அவரின் பூஜையில் ஈடுபட்ட நரசிம்மாசார்யரை, மந்திராலய மடாதீசரான உபேந்திர தீர்த்தர் அழைத்து, அவருக்கு தந்திரசாரத்தில் சொல்லப்பட்டிருக்கும் மந்திரங்களை உபதேசித்து நரசிம்ம சாலிக்கிராமம், கருடவாகன லட்சுமி நரசிம்ம பிரதிமைகளை ஆசிர்வதித்துக் கொடுத்தார். பின்னர் இவரே நரசிம்மதாசராக மாறி, தம் குலதெய்வமான திருப்பதி வெங்கடேசனை மனமுருகி வேண்டி, அதன் பலனாகப் பிறந்தவரே ஸ்ரீனிவாசன்.

சிறுவன் ஸ்ரீனிவாசனின் கல்வி, மந்திராலயத்திலேயே நடக்கவேண்டும் என்று பெற்றோர் விரும்பினர். அப்போது மந்திராலய மடத்தின் பீடாதிபதியாக இருந்த வரதேந்திர தீர்த்தரிடம் வித்யாப்யாசம்.

சாட்சாத் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் பூர்வாசிரம பேரரான வேணுகோபாலாசார்யரின் மகனான பலராமாசார்யரிடம், சிறுவன் ஸ்ரீனிவாசன் பன்னிரெண்டு ஆண்டுகாலம் சாஸ்திரக் கல்வியினைக் கற்றார். பின்னர் இந்த பலராமாசார்யரே, வரதேந்திரதீர்த்தர் என பீடம் ஏற்றார். தம் குருவைக் குறித்து ஸ்ரீனிவாசார்யர், வரதேந்திர பஞ்சகம் என்னும் 5 நுடிகளைக் கொண்ட ஸ்தோத்திரத்தை இயற்றினார். குருவருளுக்குப் பாத்திரரான ஸ்ரீனிவாசாசார்யர், கண்மூடி கண் திறக்கும் காலத்திலேயே, சமஸ்கிருதத்தில் மிகப்பெரிய பண்டிதர், உபன்யாசகர் ஆனார், அவருக்கு கவிகுல, பண்டிதராஜ என்னும் பட்டங்கள், அவரது இளமைக்காலத்திலேயே அவரைத் தேடிவந்தன.

பெடகேரி கிருஷ்ணசர்மா என்பவர் கர்னாடகத்தில் மிகவும் புகழ்பெற்ற எழுத்தாளர் ஆவார். ஜகன்னாததாசரைக் கண்டவர்கள், அவருடனேயே பழகியவர்கள் பலரை கிருஷ்ணசர்மா கண்டிருக்கிறார். அவர்களிடம் ஜகன்னாததாசரைப் பற்றி விசாரித்து, அவர்கள் கூறிய தகவல்களை பின்வரும் தலைப்புகளில் ஆவணப்படுத்தியிருக்கிறார்.

'ஜகன்னாததாசரின் பிறப்பிடம், அவரது பெற்றோரது விவரங்கள், பிறந்த நாள், அவரது கல்வித்திறன், விஜயதாசரிடம் அவர் காட்டிய அத்யந்த பக்தி, தாசருக்கு வந்த நோய், விஜயதாசரின் அருளால் கோலாலதாசர் இவருக்கு வந்த நோயை தீர்த்தது, பின்னர் கோபாலதாசரிடமிருந்து தீட்சை பெற்றது, பண்டரிபுரத்தில் 'ஜகன்னாத விட்டல' அங்கிதம்

கிடைத்தது, பின்னர் ஹரிகதா, தாசசாகித்யத்தைப் பரப்புவதற்காக செய்த பயணங்கள், ஹரிகதாம்ருதசாரத்தை இயற்றியது, அவரது சிஷ்யர்களைப் பற்றிய தகவல்கள், அவரது இறுதிக்காலம்'.

ஜகன்னாததாசரின் சிஷ்யர்கள் இயற்றிய பாடல்களின் மூலமும் இந்த விவரங்கள் நமக்குத் தெரியவருகின்றன.

குருவிடம் தத்வபிரகாசிகா, வியாஸ-த்ரய, நியாயசுதா இவைகளை படித்தபிறகு, அன்றைய காலகட்டத்தில் அந்த பிராந்தியத்தில் தாசரைப் போல திறன் படைத்த பண்டிதர்கள் யாருமே இல்லை என்னும் அளவிற்கு அவர் புகழ் பெற்றிருந்தார். மீமாம்ச சாஸ்திரங்களில் தலைசிறந்த பண்டிதராக தாசர் விளங்கினார். படிப்பு முடித்தபிறகு தாமரசம்மா என்னும் பெண்ணை மணம் புரிந்தார்.

**மானவியில் குருகுலம்**

மானவியிலேயே ஒரு குருகுலத்தைத் துவக்கி, சிஷ்யர்களுக்கு பாடங்களை எடுக்குமாறு, தாசருக்கு குருகளிடம் ஆணை கிடைத்தது. அதற்காக ஸ்ரீனிவாசாசார்யரும் மானவிக்கு வந்தார். பல சிஷ்யர்கள் சேர்ந்துவிட்டதால், பெரிய இடம் தேவைப்படுகிறதென்று அந்த ஊரில் இருந்த பெரிய மனிதரான கடதின்னி தேசாய் அவர்களிடம் அவரது வீட்டினை குருகுலமாகப் பயன்படுத்தவேண்டி கேட்டு அனுப்பினார். ஆனால் அந்த வீட்டில் பேய் ஒன்று இருக்கிறதென்றும், அங்கு போவோர்களுக்கெல்லாம் தீங்கு விளைகிறது என்றும், அதற்காக அந்த வீட்டினை ஆசாரியருக்குக் கொடுக்கத் தயங்கினார் தேசாய். அந்த பிரச்னையை நான் பார்த்துக்கொள்கிறேன் என்று ஆசாரியர், தேசாய்க்கு தைரியமளித்து, தன் மனைவி, சிஷ்யர்களுடன் அந்த வீட்டிற்கு வந்து தங்கினார் ஆசாரியர். பாட-பிரவசங்கள், பூஜை முதலான ஆன்ஹிகங்கள் நடைபெற்ற அந்த வீட்டில் பேயின் சாயலே தெரியவில்லை. ஆசாரியரின் மகிமையைக் கண்ட தேசாய் அந்த வீட்டினை ஆசாரியருக்கே தானம் அளித்தார்.

எவ்வளவு பெரிய மகானுபாவருக்கும் வினைப்பயன் என்று ஒன்று இருக்கிறது. அதிலிருந்து அவர்கள் தப்பவே முடியாது. கற்றறிந்தவர்களிடமிருந்து, வைதிகர்களிடமிருந்து, ஸ்வாமிகளின் சிஷ்யர்களிடமிருந்து, கிருஹஸ்தர்களிடமிருந்து என அனைவரிடமிருந்தும் கிடைத்த மரியாதையினால் ஆசாரியரின் பகட்டு, ஆடம்பரம் அதிகரித்தது. சமஸ்கிருதத்தின், சாஸ்திரங்களின் அறிவைப் பெற்றிருந்த ஸ்ரீனிவாசாசார்யருக்கு ஹரிதாசர்களைப் பற்றி, கன்னட கிருதிகளைப் பற்றிய ஒரு தவறான / கீழான அபிப்பிராயம் வரத் துவங்கியது.

இதே காலத்தில், ராய்ச்சூர் மாவட்டம் ஹரிதாசர்களின் கூடாரமாக ஆகியது. சிக்கலபரவியில் விஜயதாசர், கல்லூரில் சுப்பண்ணதாசர், ஆதவானியில் திவான் திம்மண்ணதாசர், உத்தனூரில் கோபாலதாசர், வேணிசோமபுரத்தில் வியாசதத்வக்ஞர் ஆகியோர் புகழ்பெற்றிருந்தனர். அபரோக்ஷ ஞானிகள் என்று மக்கள் இவர்களை அழைத்து, இவர்களிடம் மிகுந்த மரியாதை கொண்டிருந்தனர்.

**விஜயதாசருக்கு செய்த அவமரியாதை**

ஒரு சமயம் விஜயதாசர் மானவிக்கு வந்து, அங்கிருந்த பிராணதேவரின் கோயிலில் தங்கினார். பெரியவர்களின் விருப்பங்கள், ரகசியங்கள் சாதாரணமானவர்களுக்குப் புரிவதில்லை. ஸ்ரீனிவாசாசார்யருக்கு வரவிருந்த துர்மரணம் விஜயதாசருக்குத் தெரிந்திருந்ததோ என்று எண்ணும்படியாக, அதை தீர்த்துவைக்கும்படியாக, அதன்மூலம் சாஸ்திரங்களை கன்னடத்தில் எழுதவைப்பதற்காக, விஜயதாசர் மானவியில் சில நாட்கள் தங்கினார். ஒவ்வொரு நாளும் தாசகூடத்தவர்களின் வழக்கம்போல, யாயிவார (பிட்சை) செய்து, பிராமணர் போஜனம், விருந்தினர் உபசாரம் ஆகியவற்றை ஹரிதாசர்களில்

சிறந்தவரான விஜயதாசர் செய்துவந்தார். அப்படி இருக்கையில் ஒரு நாள் பிட்சையின்போது ஸ்ரீனிவாசாசார்யரின் வீட்டிற்கு வந்தார். தாம் பிராணதேவரின் கோயிலில் தங்கியிருப்பதைத் தெரிவித்து, ஸ்ரீனிவாசாசார்யரை தீர்த்தபிரசாதத்திற்கு வருமாறு அழைப்பு விடுத்தார்.
தாசரின் இடத்தில் பூஜை முடியும் தருணம். நைவேத்தியம் முடிந்தது. ஆசாரியர் வரவில்லை. ஆசாரியரின் வீட்டிற்கு தன் சிஷ்யரை அனுப்பி வைத்தார் விஜயதாசர்.

தாசர் செய்த நைவேத்தியத்தில் தாம் உண்பது என்பது தமக்கு அவமானம் என்று எண்ணிய ஆசாரியர், தமது வீட்டிலேயே பூஜை, நைவேத்தியம் முடித்து, உண்டு பின் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். தம்மை அழைக்க வந்த விஜயதாசரின் சிஷ்யரிடம் 'உணவு உண்ண தாமதமானால், தமக்கு வயிற்றுவலி வந்துவிடும். ஆகையால் நான் ஏற்கனவே உண்டுவிட்டேன்' என்று சொல்லுமாறு சொல்லி அனுப்பினார். சிஷ்யரும் அந்த சேதியை விஜயதாசரிடம் சொன்னார். 'ஹரிசித்த' என்ற விஜயதாசர் அனைவரையும் உணவருந்த அமர்த்தினார். ஆசாரியர் சொன்னது பொய் என்ற விஷயம் கோபாலதாசருக்கும் தெரிந்திருந்தது. 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி, அவரும் உணவருந்த அமர்ந்தார்.

**நிஜமாகவே வயிற்றுவலி வந்தது**

மானவியை விட்டு விஜயதாசர் அடுத்த ஊருக்குக் கிளம்பினார். ஆனால் மானவியில் ஸ்ரீனிவாசாசார்யருக்கு நிஜமாகவே வயிற்றுவலி வரத் துவங்கியது. மருந்து எடுத்துக் கொண்டாலும் வலி மேலும் வளர்ந்தது. பாட-பிரவசனங்கள் நின்றன. நித்யகர்மங்கள், பூஜை முதலானவை ஸ்தம்பித்தன. அன்ன ஆகாரங்களை எடுத்துக்கொள்வது கஷ்டமான செயலாக இருந்தது. நாள்தோறும் வலி அதிகரித்துக் கொண்டே போனது. நோய் தீர்வதற்காக ஸ்ரீஹரிவாயுஸ்துதி புனஸ்சரணம் செய்தார். பலன் இல்லை. நோய் தீரவில்லை. கடிகாசலத்திற்குச் சென்று பிராணதேவரின் சேவை செய்தார். பலன் இல்லை. மந்திராலயத்திற்கு வந்தார். உடல்நலம் வெகுவாக பாதிக்கப்பட்டது. மந்திராலயத்தில் சேவை செய்தார். துங்கபத்ரா நதியில் விழுந்து தற்கொலை செய்யுமளவிற்கு நோய் அவரை பாதித்தது. 'ஒடவெ எல்லி களெதிதெயோ அல்லே ஹுடுகபேகு. அல்லி நினகெ அனுக்ரஹவாகுத்ததெ' (எங்கு தொலைத்தாயோ அதை அங்கேயெ தேடவேண்டும். அங்கேயே உனக்கு அருள் கிடைக்கும்) என்று அன்றிரவு கனவில் அவருக்கு ஒரு குரல் கேட்டது.

ஆசாரியருக்கு அப்போது விஷயம் புரியத் துவங்கியது. தான் பண்டிதன் என்ற கர்வத்தினால் வந்த நோய் இது என்று புரிந்தது. நான் சிறந்த பண்டிதன், சிரத்தையுள்ளவன். செல்வந்தன். உத்தம குலத்தில் பிறந்தவன் என்னும் கர்வத்தில், பார்த்த அஞ்ஞானிகள், சஜ்ஜனர்களுக்கு துரோகம் செய்து, அவர்களின் மனதை நோகடித்து, பின் ஸ்ரீஹரியின் பூஜையை செய்கிறேன் என்று சொன்னால், அத்தகையவர்களின் பூஜையை ஸ்ரீஹரி எப்போதும் ஏற்றுக்கொள்வதில்லை என்னும் பாகவத வாக்கியம் இவருக்கு நினைவுக்கு வந்தது. தூக்கத்திலிருந்து கண்விழித்துப் பார்த்தார். ராயரின் அனுமதியைப் பெற்று, மந்திராலயத்திலிருந்து புறப்பட்டு சிக்கலபரவிக்கு வந்தார். ஸ்ரீபாதராயர் நிறுவிய அஸ்வத்த நரசிம்மரின் ஆலயத்தில் விஜயதாசர் ஜபம் செய்துகொண்டிருந்தார். அவரிடம் வந்த ஆசாரியர் - விஜயராய பாஹி பாஹி என்று சொல்லி அவர் பாதங்களில் வீழ்ந்தார். அவரின் கண்ணீரினைக் கண்ட விஜயதாசர், அவரை ஆரத்தழுவி எழுப்பி உபசரித்து - 'இங்கு எதற்கு வந்தீர்கள்? எங்கு தொலைத்தீர்களோ அதை அங்கேயே தேடவேண்டும். அங்கேயே உங்களுக்கு தீர்வு கிடைக்கும்' என்றார். இதன் பொருள் அறியாமல் ஆசார்யர் திகைத்தார். அப்போது விஜயதாசர் நடந்த விஷயங்கள் அனைத்தையும் விளக்கி, 'நாளை உத்தனூருக்குப் போய் அங்கு கோபாலதாசரின் அருளைப் பெறுங்கள். ஹரிதாசர் ஆகும் நற்காலம் தற்போது

கனிந்திருக்கிறது. கண்ணின் பொறை களையுங்கள். அகக்கண்ணின் மூலம் அபரோக்ஷம் உங்களுக்குக் கிடைக்கட்டும். போய் வாருங்கள். உங்களுக்கு மங்களம் உண்டாகட்டும்' என்று அனுப்பினார். விஜயதாசர் சொன்னதைப் போலவே, அவரின் பாதங்களைப் பற்றி அவரின் அருளைப் பெற்று அங்கிருந்து உத்தனூருக்குப் புறப்பட்டார் ஆசாரியர்.

**கோபாலதாசரே பெருக்கிக் கொண்டிருந்தார்.**

ஆசாரியர் உத்தனூருக்கு வந்து சேர்ந்தார். அவர் தம்மைத் தேடிவரும்போது அவரின் கால்களில் முள் குத்திவிடக்கூடாதென்ற நல்லெண்ணத்தில் கோபாலதாசரே துடைப்பத்தை எடுத்து, வெங்கடேசனின் ஆலயத்தின் முன் கிடந்த குப்பைகளை பெருக்கி சுத்தம் கொண்டிருந்தார்.

நோயினால் அவதியுற்ற ஸ்ரீனிவாசாசார்யர், வண்டியிலிருந்து இறங்கி, அங்கு சுத்தம் செய்து கொண்டிருந்த கோபாலதாசரிடம் – 'ஸ்வாமி, இங்கு பாகண்ணதாசரின் வீடு எங்குள்ளது?' என்று கேட்டார். 'அதோ, அதுவே கோபாலதாசரின் வீடு' என்று அவரும் தம் வீட்டினைக் காட்டினார். அங்கு மெதுவாக நடந்துபோன ஆசாரியர் வீட்டின் முன் நின்று – 'கோபாலதாசர் வீட்டில் உள்ளாரா' - என்று அழைத்தார். 'யாரோ பெரிய ஆசாரியர் வருகிறார். அவரது கால்களில் முள் குத்தக்கூடாது என்று அவரே அங்கு பாருங்கள், பெருக்கிக் கொண்டிருக்கிறார்' என்று கோபாலதாசரைக் காட்டினர் வீட்டினர்.

கண் நிறைய கண்ணீருடன் வந்து கோபாலதாசரின் பாதங்களில் விழுந்தார் ஆசாரியர். தமது அஞ்ஞானத்திற்கு மன்னிப்பே இல்லை என்று மருகினார். 'ஆசாரியர் வரவேண்டும். தங்களுக்காகவே நான் காத்துக் கொண்டிருந்தேன்' என்று அவரை ஆலயத்தினுள் அழைத்துப் போனார். 'தங்களின் குலதெய்வமான வெங்கடேசன் தங்களுக்கு அருள்வான்' என்று அவருக்கு தைரியம் சொன்னார்.

ஆசாரியர் வரும்முன்னரே, கோபாலதாசருக்கு விஜயதாசரின் குரல் மூலமாக இந்த செய்தி வந்திருந்தது. 'ஆசாரியர் மிகுந்த துக்கத்துடன் உன்னிடம் வருகிறார். அவருக்கு துர்மரணம் வரப்போகிறது. சீக்கிரமாகவே சாதனைகளை செய்து முடித்து, உன்னுடைய ஆயுளை அவருக்குக் கொடுத்து, அவருக்கு ஆயுள் தானம் செய். அவரிடமிருந்து பின்னர் மிகப்பெரிய காரியம் ஆகவேண்டியிருக்கிறது. சுபமாகட்டும். மங்களம் உண்டாகட்டும்' என்று அந்தக் குரல் சொல்லியிருந்தது.

ஆசாரியருக்கு ஸ்னான, ஆன்ஹிகங்களை செய்வதற்கு ஏற்பாடு செய்துகொடுத்தார் தாசர். கோபாலதாசரின் அன்பு, கருணை ஆகியவற்றைக் கண்ட ஸ்ரீனிவாசாசார்யர் ஆனந்தத்தில் மூழ்கினார். விஜயதாசரின் பேச்சு, மந்திராலயத்தில் வந்த கனவு இவற்றைப் புரிந்துகொண்ட ஆசாரியர் – 'ஸ்வாமி, நீங்களே என் ஸ்வரூப குரு. என்னைக் காப்பாற்றுங்கள். என் நோய்க்கு தீர்வு சொல்லுங்கள். என் அனைத்து வேண்டுதல்களும் உங்கள் மூலமாக நிறைவேறவேண்டும்' என்று அவர் பாதங்களில் வீழ்ந்தார் ஆசாரியர்.

நித்ய கர்மங்களை முடித்தபிறகு, தாசர் – ஆசாரியரே, நைவேத்தியம் தங்களின் இஷ்டப்படியே ஆகட்டும் என்றார். ஆசாரியரோ – 'ஸ்வாமி, இன்னும் என்னை பரீட்சிக்க வேண்டாம். நைவேத்தியத்தின் பலனே நான் இந்த அவஸ்தையில் விழுந்திருக்கிறேன். மறுபடி அதே பிரச்னை வேண்டாம். நான் ஒரு பண்டிதன் என்று கர்வத்தில் செய்த செயல்களின் பலனை அனுபவிக்கிறேன். தாம் எனக்கு அருளவேண்டும்' என்று வேண்டினார்.

**நாற்பது ஆண்டுகள் ஆயுள்தானம்**

தாசர், நைவேத்தியம், வைஸ்வதேவம், பலிஹரணங்களை முடித்தார். தன்வந்திரி மந்திரத்தினால் அர்க்யபிரதானம் செய்தார். வந்திருக்கும் இந்த ஜீவனுக்காக, விஜயதாசரின் ஆணைப்படி தம் ஆயுளின் 40 ஆண்டுகளை தானம் செய்வதற்காக, அமிர்தத்தை வழங்குபவனாகிய தன்வந்திரியை வணங்கி, அர்க்ய நீரை ஆசாரியரின் கைகளில் ஊற்றி, அந்த தானத்தைப் பெற்றுக்கொள்ளச் சொன்னார்.

**ரொட்டியே மருந்தாயிற்று**

சிறிதளவும் உண்ணாமல் வயிற்றுவலியால் அவதிப்பட்ட ஆசாரியரை, உணவு உண்பதற்காக இலையின் முன் அமர்த்தினார் தாசர். தம் குருகளை, தன்வந்திரியை வணங்கி, ஒரு ரொட்டியை மந்திரித்து, ஆசாரியரின் இலையில் போட்டு அதை உண்ணுங்கள் என்றார் தாசர். ஹரி பாதோதகத்தால் நைவேத்தியம் செய்யப்பட்ட ரொட்டியை மருந்தாக ஆசாரியருக்கு அளித்து, கோபாலதாசர் இந்தப் பாடலைப் பாடி, ஸ்ரீஹரியை வணங்கினார்.

என்ன பி$^{3}$ன்னப கே$^{1}$ளோ த$^{4}$ன்வந்தி$^{1}$ரி த$^{3}$யமாடோ$^{3}$
ஸன்னவனு இவ கே$^{1}$வல |ப|

ப$^{3}$ன்ன ப$^{3}$டிஸுவ ரோக$^{3}$வன்னு மோசனெ மாடி$^{3}$
சென்னாகி$^{3}$ பாலிசுவுது$^{3}$ க$^{1}$ருணி |அ.ப|

ஆரோக்ய ஆயுஷ்ய ஐஸ்வர்யவெம்புவிது$^{3}$
மூருவித$^{3}$ வஸ்து$^{1}$க$^{3}$ளு
நாராயணன ப$^{4}$ஜக$^{1}$ராத$^{3}$வர ஸாதனகெ$^{1}$
பூர்ணவாகி$^{3}$ப்புது$^{3}$
கோ$^{4}$ரவ்யபி$^{4}$சார பரநிந்தெ$^{3}$ பரவித்தா$^{1}$ப
ஹார மாடித$^{3}$ தோ$^{3}$ஷதி$^{3}$
த$^{3}$ரித்ரராகு$^{3}$வரு மூருவித$^{3}$தி$^{3}$ந்த$^{3}$லே
கா$^{1}$ரணனு நீனே து$^{3}$ஷ்க$^{1}$ர்ம பரிஹரிஸோ |1|

வசுமதி$^{1}$ய மேலின்னு அசுரஜனரே ப$^{3}$ஹள
வஷவல்ல க$^{1}$லிய பாதே$^{4}$
பி$^{3}$ஸிலிந்த$^{3}$ பீ$^{1}$டித$^{1}$வாத$^{3}$ ஸஸிக$^{3}$ளந்தெ$^{1}$
சிசுகளு நாவிப்பெ$^{1}$வோ
அசுராரி நின்ன கருணாம்ருதவ மளெக$^{1}$ரெது
கு$^{1}$ஷலத$^{3}$லி பாலிசுவுது$^{3}$
கெ$^{1}$சரிந்த$^{3}$ கெ$^{1}$சருதொளெதந்தெ$^{3}$ க$^{1}$ர்மத$^{3}$ ப$^{2}$லவு
அசுனாத ஹரியெ பொரெயோ ஸ்வாமி |2|
அன்யரனு ப$^{4}$ஜிசலதெ நின்னன்னு பஜிசுத்த
நின்ன சின்னெகள த$^{3}$ரிஸி
நின்னவரவனெனிஸி நின்ன நாமோச்சரிஸி
நின்னிந்த$^{3}$ உபஜீவிஸி
அன்ன ஆரோக்ய அல்பவு ஆகெ$^{3}$ அன்யரிகெ$^{3}$
இன்னு அல்பரியபேகே$^{3}$
நின்ன சங்க$^{1}$ல்ப ப$^{4}$கு$^{1}$த$^{1}$ரனு போ$^{1}$ஷிப$^{1}$னேனு
க$^{3}$ன்ன பிருத$^{3}$னு உளுஹோ ஸ்வாமி |3|

ஆதி3 வியாதி3க3ள உன்மாத3 விப்ரம நானா
பாதெ4கௌ3ஷத3வு நீனே
ஹே தே3வ நின்ன க1ரக1லஷ சுதெ3யனு எரெது3
சாது4க3ள சந்தை1சுவி
மோத3படிசுவி நின்ன சாதி4சுவ ஜனகெ1 சு
போ4த3யங்க3ளனெ நீடி
ஆத3ரிஸி இவகெ3 த1வ பா3தத்3யானவனித்து1
சாது4க3ளொளகி3ரிஸி மோத3கொ1டு சர்வதா3 |4|

நின்னவரல்லிவகெ3 இன்னு ரதி1யன்னு கொட்டு1
நின்னவனெந்து அரிது3
நின்ன நா பி1ரார்த்தி1ஸிதெ அன்யரிகெ3 அல்பரியே
என்ன பாலிஸுவ தொ3ரெயே
என்ன மாத1ல்லவிது3 என்ன ஹிரியர மாது1
மன்னிசபே3கோ1 க1ருணி
அனந்தகுணபூர்ண கோபாலவிட்டலனே
இன்னிதகே1 பாலிஸய்யா ப்ரபுவே |5|

இந்த ஆயுள்தானம் நடந்தது கிபி 1754 அதாவது சக 1676 பாவ நாம சம்வத்ஸரம் ஆஸ்வீஜ மாதத்தில்.

சில நாட்களிலேயே ஆசாரியரின் நோயின் தீவிரம் குறைந்தது. ஹரிதாசர்களின் மகிமையை கண்ணாரக் கண்ட ஆசாரியர், கோபாலதாசரை விழுந்து வணங்கி, தமக்கு ஹரிதாச அங்கித தீட்சை வழங்குமாறு கேட்டுக்கொண்டார். ‘உங்களுடைய கர்மபலன் விலகியது. பாண்டுரங்கனின் கருணைப்பார்வை உங்கள் மேல் விழ இருக்கிறது. நீங்கள் பண்டரிபுரத்துக்குச் செல்லுங்கள். பீமரதி நதியில் குளித்துவிட்டு, விட்டலனின் தரிசனத்தைப் பெறுங்கள். முன்னர் என்ன செய்யவேண்டும் என்று அங்கு உங்களுக்கு ஆணை வரும்’ என்று கோபாலதாசர் ஆசாரியரை ஆசிர்வத்து அனுப்பி வைத்தார்.

**அங்கிதம் கிடைத்தது**

பண்டரிபுரத்திற்கு வந்த ஸ்ரீனிவாசாசார்யார், பக்தியுடன் விட்டலன் சேவையைச் செய்தார். ஒரு நாள் சந்திரபாகா அல்லது பீமரதி நதியில் குளித்துக்கொண்டிருந்தார். திடீரென்று ஒரு மரப்பலகை வந்து அவர் தலையில் இடித்தது. அதை எடுத்துப் பார்த்தார். அதில் சமஸ்கிருதத்தில் ‘ஸ்ரீ ஜகன்னாத விட்டலா’ என்று எழுதியிருந்தது. அதை ஸ்ரீவிட்டலனின் செய்தியாகவே, அங்கிதமாகவே நினைத்தார் ஆசாரியர். மிகவும் மகிழ்ச்சியடைந்த தாசர், அந்த பலகையை கையில் பிடித்தவாறு ‘பிடி என்ன கைய ரங்கையா’ என்ற பாடலைப் பாடினார். பிறகு ‘தடிகோடி நிபகாய ஜகன்னாத விட்டலய்யா, விட்டலய்யா’ என்றும் பிறகு ‘எந்து காம்பேனோ பாண்டுரங்கா மூருதிய, இந்து பாக நிவாசா நரனா சாரதியா’ என்றும் பிறகு ‘நோடிதே விட்டலன நோடிதே’ என்றும் பாடி ஸ்ரீஹரியை வேண்டினார். ‘பாலிஸோ பண்டரிபுரிரேயா, பாவனகாய, பீமரதி கூல நிலயா’ என்ற சாஸ்திரங்களின் சாரத்தை உள்ளடக்கிய ஸ்தோத்திரத்தையும் தாசர் இயற்றினார். இதுவே ’பாண்டுரங்க பாரிஜாத’ எனப்படுகிறது. ஸ்ரீஜகன்னாததாசர் இந்த ஐந்து பாடல்களையும் பண்டரிபுரத்தில் பாடியதால், இவை ‘பஞ்சரத்ன’ என்று அழைக்கப்படுகின்றன.

பண்டரிபுரத்தில் ஸ்ரீஹரியின் அருளால் கிடைத்த ‘ஜகன்னாதவிட்டலா’ என்பதையே தனது அங்கிதமாகக் கொண்டு, தனது அனைத்து பாடல்களின் இறுதியிலும் அதைப் பயன்படுத்தி, அதன் மூலமாகவே ஸ்ரீனிவாசாச்சார், ஜகன்னாததாசர் ஆனார். அங்கிதம் கிடைத்தவுடன்,

அதை தன் குருகளான கோபாலதாசருக்குத் தெரிவிக்கவேண்டும் என்ற ஆவலுடன், கொல்லாபுர், குல்பர்கா, ராய்ச்சூர் மூலமாக வேணிசோமபுரத்திற்கு வந்தார். கோபாலதாசர் தனது பயணத்தில் அங்கு வந்திருக்கிறார் என்ற செய்தி தாசருக்கு வந்திருந்தது. அங்கிருந்த ஐஜி வெங்கடராமாச்சார் மற்றும் கோபாலதாசரைக் கண்ட தாசர், தமக்கு அங்கிதம் கிடைத்த தகவலைக் கூறினார். 'உங்களுக்குக் கிடைத்தது மிகப்பெரிய அருள். விஜயதாசரின் விசேஷ த்ருஷ்டி, பாண்டுரங்கன் கொடுத்த அங்கிதம், கோபாலதாசர் போன்ற மகானின் திருவருள், இவை அனைத்தும் தமக்குக் கிடைத்திருக்கின்றன. தங்களின் பாண்டித்யத்துடன் இந்த இரு அபரோக்ஷ ஞானிகளின் அருட்பார்வையும் சேர்ந்திருக்கின்றன. எவ்வளவு பிறவிகளின் சாதனைகளின் பலனோ, சூரிய சந்திரர்கள் இருக்கும்வரை இருக்கத்தக்க, லட்சோபலட்சம் மக்களை சாதனை செய்விப்பதற்கான ஒரு அபூர்வமான சாகித்யத்தை, ஜகன்னாதன் தங்கள் மூலமாக செய்விக்கப்போகிறார். நீங்கள் மிகவும் தன்யர்' என்று மனப்பூர்வமாக ஸ்ரீஐஜி வெங்கடராமாச்சார் கூறினார்.

ஹரிதாசர் ஆனபிறகு ஜகன்னாததாசர், கோபாலதாசரின் சுற்றத்தாரின் அன்பிற்குப் பாத்திரமானார். கோபாலதாசரின் சகோதரரான குருகோபாலதாசர் 'ஆசார்யரே, விஜயதாசரின் அருள். கோபாலதாசரின் ஆயுள்தானம் இவ்விரண்டும் நீங்கள் ஸ்ரீஹரியின் அருள்பார்வையில் இருக்கிறீர்கள் என்பதற்கு சரியான சாட்சியாகும். காவிய உலகம் எப்போதும் நினைவில் வைக்கும்படியான ஒரு பெரிய வேலை தங்களால் நடக்கவிருக்கிறது' என்றார்.

பிறகு, கோபாலதாசருடன் ஜகன்னாததாசர் திருப்பதிக்கு வந்தார். இன்னும் அந்த நோயின் தாக்கம் முழுதாகப் போயிருக்கவில்லை. வெங்கடேசனின் தரிசனம் ஆனபிறகு, மிகவும் சோர்வடைந்திருந்த ஜகன்னாததாசரை, தாம் தங்கியிருந்த இடத்தில் அவரைத் தங்கவைத்து, அவருக்கு ஏதேனும் சாப்பிடக் கொண்டு வருவதற்காக கோபாலதாசர் மறுபடி கோயிலுக்கு அருகில் வந்தார்.

**ஸ்ரீஹரியே தாசராகி வந்தார்**

சில நிமிடங்களிலேயே கோபாலதாசர் திரும்பி வந்தார். கோயிலின் பிரசாதம் மற்றும் ஒரு கிண்ணத்தில் பரிமள-உதக (தீர்த்தம் / தண்ணீர்) கொண்டுவந்து ஜகன்னாததாசருக்கு தந்தார். அதை வாங்கிக்கொண்ட ஜகன்னாததாசர், தம் வாழ்நாளில் இதுவரை இதுபோன்ற சுவையான பிரசாதத்தை சாப்பிட்டதேயில்லை. இத்தகைய சுவையான தீர்த்தத்தைக் குடித்ததேயில்லை. என்னே திருப்பதியின் மகிமை என்று கோபாலதாசருக்கு மனதிலேயே நன்றி தெரிவித்தார்.

பக்கத்து மண்டபத்தில் வேறு சிலர் இருப்பதாகவும் அவர்களைப் பார்த்து வருவதாகவும் சொல்லிய கோபாலதாசர், அங்கிருந்து வெளியேறினார்.

ஆனால் உண்மையான கோபாலதாசர் கோவிலிலேயே அதிக நேரம் காத்திருந்து, சிறிது பிரசாதத்தை வாங்கி, திரும்பிவரும்போது புஷ்கரிணியிலிருந்து சிறிது தண்ணீரை பிடித்து, வெகு நேரம் ஆகிவிட்டதே என்றவாறு ஜகன்னாததாசர் காத்திருந்த மண்டபத்திற்கு வந்து சேர்ந்தார். 'நேரமாகிவிட்டது ஆசாரியரே, இந்தப் பிரசாதத்தை சாப்பிட்டு, நீரையும் குடிக்கவும்' என்றார். ஜகன்னாததாசர் வியப்புடன் 'மறுபடி எதற்கு இந்தப் பிரசாதம்? இப்போதுதானே நீங்கள் சுவையான பிரசாதத்தையும், தீர்த்தத்தையும் கொடுத்தீர்கள்?' என்றார். 'நான் எப்போது கொடுத்தேன்? நீங்கள் எப்போது உண்டீர்கள்? உடல்நலப் பிரச்னையில் தங்களுக்கு பிரமை ஏற்பட்டிருக்கிறது' என்றார் கோபாலதாசர். அதற்கு ஜகன்னாததாசர், 'குருகளே, எனக்கு தற்போது எந்தப் பிரச்னையும் இல்லை. சோர்வு இல்லை. உற்சாகம் வந்திருக்கிறது. நீங்கள் கொடுத்த பிரசாதத்தின் வாசம் இன்னும் என் கையில் இருக்கிறது பாருங்கள்' என்று

கைகளைக் காட்டினார். கோபாலதாசருக்குப் புரிந்தது. ‘ஆசாரியரே, நீங்கள் தன்யர். தங்களின் பிறவி அர்த்தமுள்ளதாக ஆயிற்று. ஸ்வாமி ஸ்ரீனிவாசனின் தரிசனம் தங்களுக்குக் கிடைத்துள்ளது. தங்களுக்கு பிரசாதத்தைக் கொண்டு வந்தவர் சாட்சாத் ஸ்ரீனிவாசனே. என் உருவில் வந்து தங்களுக்கு அருளியிருக்கிறார். வந்தது நான் அல்ல. பிரசாதம் தந்தது நான் அல்ல. இதெல்லாம் ஸ்ரீனிவாசனின் மகிமை’ என்றார்.

ஜகன்னாததாசரின் வாழ்க்கையில் இந்த நாள் ஒரு சிறப்பான நாளாயிற்று. முன்னர் செய்யவேண்டிய வழி என்னவென்று தாசருக்கு தெளிவாகத் தெரிந்தது.

இதேபோல் பண்டரிபுரத்தில் தாசருக்கு நடந்த இன்னொரு சம்பவத்தை பலர் சுட்டிக் காட்டுகின்றனர். ஒருமுறை தாசர் பண்டரிபுரத்தில் தங்கியிருந்தபோது காலை வேளையில் கோயிலுக்கு வந்தார். விட்டலனின் தரிசனத்தால் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். கோயிலைச் சுற்றி வரும்போது ஒரு பிராமணர் தாசரிடம் வந்து ‘தாசரே, தாங்கள் இன்று எங்கள் வீட்டிற்கு தீர்த்தபிரசாதத்திற்கு வந்து உணவு உண்டு, எங்களை மகிழ்விக்கவேண்டும்’ என்றார். ’முதலில் நீங்கள் யார் என்று சொல்லுங்கள்’ என்றார் தாசர். ’நான் ஒரு பயணி. வைகுண்டபுர அக்ரஹாரத்திலிருந்து இங்கு வந்துள்ளேன். ருக்மிணி தேவாலயத்தின் பின் இருக்கும் ஒரு மண்டபத்தில் தங்கியுள்ளேன். தங்களைப் போன்ற சஜ்ஜனர்களுக்கு சேவை செய்யவேண்டுமென்று எனக்கு ஆணை வந்துள்ளது. ஆகவே தயவு செய்து தாங்கள் வரவேண்டும்’ என்று அந்த பிராமணர் கூறினார். அந்த பிராமணரின் தேஜஸ்ஸினைக் கண்டு வியப்புற்ற தாசர், தாம் மதிய வேளையில் வருவதாகக் கூறி அங்கிருந்து புறப்பட்டார்.

தம் பூஜைகளை முடித்த தாசர், அந்த பிராமணர் கூறிய இடத்திற்கு வந்தார். சிலர் ஏற்கனவே அங்கு வந்திருந்தனர். தேவதை-பெண்களைப் போன்றிருந்த சிலர் அங்கு நடமாடிக் கொண்டிருந்தனர். அந்த பிராமணர், தாசரை அமர்த்தி, தீர்த்தம் கொடுத்து, கிருஷ்ணார்ப்பணம் சொல்லி உணவருந்தச் சொன்னார். அவர் செய்த உபசாரமும், உணவின் சுவையும் சாதாரணமானதாக இருக்கவில்லை. மிகவும் சுவையான உணவு என்று தாசர் பிராமணரிடம் கூறினார்.

சிறிது நேரம் ஓய்வெடுக்கலாம் என்று கண்ணை மூடினார் தாசர். கண் திறந்து பார்த்தபோது அங்கு யாருமே இருக்கவில்லை. இலை, சமையல், மக்கள், அந்த பிராமணர் எதுவுமே இல்லை. ’ஸ்ரீஹரியே, புரந்தரருக்கு உன்னுடைய சிறந்த ரூபத்தைக் காட்டிய கதையை கேட்டுள்ளேன். என் குருகளான கோபாலதாசருக்கு நீல குதிரையில் ஏறி வந்து அவரிடம் ‘ஆலே நாஹி’ அதாவது இன்னும் ஏன் பண்டரிபுரத்திற்கு வரவில்லை என்று நீ கேட்ட கதையையும் கேட்டுள்ளேன். ஆனால் வறியவனான எனக்கு உன் கையால் அருமையான பிரசாதத்தை உண்ணவைத்து அருள் புரிந்ததை தற்போது கண்ணாரக் கண்டேன். ’பிரபோ பாண்டுரங்கா, பக்தவத்சலா, கிருபாசாந்த்ரா, பதிதபாவனா, நானே உன் தாசன் என்று நினைத்தால், நீ தாசனுக்கு தாசன் என்று சொல்லி எனக்கு பாடம் கற்பித்தாயே, ஸ்வாமி’ என்று கண்ணீர் மல்க பக்தியுடன் ஸ்ரீஹரியின் பாதங்களில் வீழ்ந்தார்.

பின்னர் தாசர் பயணத்தில் மலகேடா வந்தார். ஜயதீர்த்தரின் தரிசனத்தைப் பெற்று புனிதரானார். மந்திராலயத்திற்கு வந்து ராகவேந்திர ஸ்வாமிகளின் தரிசனத்தைப் பெற்று - எனக்கு அருளி என்னைக் காப்பாற்றினாய் என்று மனமுருகினார். அங்கிருந்து வேணிசோமபுரத்திற்கு வந்தார். கோபாலதாசர், வியாசதத்வக்ஞருடன் அங்கு வந்து தரிசனம் கொடுத்தார். இரு குருகளின் கால்களிலும் ஜகன்னாததாசர் விழுந்து வணங்கினார். மூவரும் பிரம்மஞானிகள் ஆவர். தங்களின் அனுபவங்கள், அனுபாவங்கள் என அனைத்தையும் மூவரும் பகிர்ந்து கொண்டனர்.

தனக்கு ஆயுளையும், இத்தகைய அனைத்து பாக்கியங்களையும் வழங்கிய தன் ஸ்வரூப குருகளான கோபாலதாசரை, ஜகன்னாததாசர் மனமுருகி, கண்ணீர் மல்க கீழ்வரும் பாடலில் புகழ்ந்து பாடினார்.

கோபாலதாசராய நின்னய பா1த3
நா பொ1ந்தி3தே3னோ நிஸ்சய |ப|

ஈ பீ1டி3சுவ த்ரய தா1ப1ங்க3ளோடி3ஸி
கை1பி1டி3தெ3ன்னனு நீ பா1லிஸனுதி3ன |அ.ப|

கோ4ரவ்யாதி4க3ள நோடி விஜயராய
பூ4ரிக1ருணவ மாடி
தோ1ரித3ரிவரே உத்தா3ரக ரெந்த3ந்தி3
நாரப்3ய த1வபா3த ஸோரிதெ3 சலஹெந்து3
சூரிஜன சம்ப்1ரீய சுகு3ணோதா3ர
து3ருளன தோ3ஷ நிசயவ
தூரகைஸி த3யாம்புனிதி4 நி
வாரிசதெ க1ரபிடிது3 க1ருணதி
அப1 ம்ருத்யுயவனு த1ந்தெ3 என்னொளகி3த்த1 |1|

அபராத4கள மரெதெ3
சப1ல சித்த1னிகொலிது3 விபுல மதி1யனித்து1
நிபுணனெந்தெ3னிஸிதெ3 த1ப1ஸிக3ளிந்த3லி
க்1ருபணவத்1ஸல நின்ன கருணெகெ3
உபமெகா3ணெனோ ஸந்த1த1வு கா
ஷ்யபி1யொளகெ புத4ரிந்த3 ஜகதா3
தி4பன கிங்கரனெனிஸி மெரெயுவ |2|

என்ன பா1லிஸித3ந்த3தி3 ஸக1ல ப்1ர
ப1ன்னர ஸலஹோ மோதி3
அன்யரிகீ3ப1ரி பி3ன்னப1கை3யெ ஜ
கன்னாத விட்டலன்னு சம்ஸ்துதி1சுவ தீ4ர
நின்ன நம்பி3த3 ஜனரிகெ3ல்லிய
ப3ன்னவே ப4க்தா1னுக1ம்பி ச
ரண்ய ப3ந்தெ3னோ ஈ சமயதி அ
ஹர்னிஷி த்4யானிசுவே நின்னய |3|

மகிழ்ச்சியடைந்த கோபாலதாசர் ஜகன்னாததாசரைக் குறித்து மனப்பூர்வமாக பேசத்துவங்கினார். ‘ஜகன்னாததாசரே, இன்று நீங்கள் தன்யரானீர்கள். உங்கள் வாழ்க்கை அர்த்தமுள்ளதாக ஆயிற்று. ஸ்திதப்ரக்ஞர் ஆனீர்கள். பிறப்பு இறப்பு ஆகியவை உங்கள் வசமாயின. பரமாத்மனின் பிரசாதத்திற்கு பாத்திரரானீர்கள். உங்கள் மூலமாக மிகப்பெரிய சாதனைகள் செய்ய வேண்டும் என்பது ஸ்ரீஹரியின் விருப்பம். ஸ்ரீஹரியின் சேவைக்காகவே உங்களின் மிச்ச வாழ்க்கை இருக்கிறது. தர்மத்தை பரப்பும் வேலைகள், தத்வங்களை பரப்பும் வேலைகள், முக்கியமாக சாதாரண மக்களை, பாமரர்களை, பக்திப் பாதையின் மேல் கொண்டுவந்து அவர்களுக்கு அருளவேண்டிய பெரிய வேலை உங்களுக்கு இருக்கிறது. நமது தர்மம் பாகவத தர்மம். பாகவதமே நமக்கு மூலாதாரம். பக்தர்களை காப்பாற்றுவதே, பக்தர்களுக்கு அறிவுறுத்துவதே பாகவதம் சொல்லும் செய்தியாகும். மற்ற அனைத்து தர்மங்களும் பாகவதத்தின் ஒரு அங்கமே ஆகும். பக்தி இல்லையென்றால்

தர்மம் இல்லை. முக்தியும் இல்லை. நரஹரிதீர்த்தர், ஸ்ரீபாதராஜர், வியாசராஜர், வாதிராஜர் ஆகிய யதிகள் அனைவரும் பாடல்கள் மூலமாக பக்தியை பரப்பினர். தற்போது அந்த பாக்கியம் தங்களுக்கு வந்திருக்கிறது. தமக்கு விஜயராயரின் பரிபூர்ண அருள் கிடைத்திருக்கிறது. அவரே உங்களுக்கு நல்வழியைக் காட்டியிருக்கிறார். நீங்கள் ஒரு பெரிய கிரந்தத்தை இயற்றவேண்டும். நமது அனைத்து புண்ணியங்களும் தம்மை வந்து சேரும். சிகலபரவிக்குப் போய்வாருங்கள். விஜயபிரபுகளின் தரிசனம் கிடைக்கட்டும். அவரின் தவம், நமது புண்ணியம் இவ்விரண்டும் சேர்ந்து, தங்கள் மூலமாக வரலாறு போற்றும் நிகழ்வு நிகழட்டும்' என்று ஆசிர்வதித்தார்.

தங்களின் ஆணை என்று ஜகன்னாததாசர், கோபாலதாசர் மற்றும் வியாசதத்வக்ஞரின் கால்களில் விழுந்து வணங்கினார்.

சிகலபரவிக்கு வந்து விஜயதாசரைக் கண்ட ஜகன்னாததாசர் அவர் பாதங்களில் விழுந்தார். அவரை மிகுந்த பாசத்துடன் எழுப்பி தன் அருகில் அமர்த்திக்கொண்டார் விஜயதாசர். 'ஸ்ரீபாதராஜர், வியாசராஜர், வாதிராஜர், புரந்தரதாசர் ஆகியோர் உங்களில் இருந்து பெரிய சேவையை செய்விப்பார்கள். ராகவேந்திர ஸ்வாமிகளின் அனுக்கிரமோ உங்களுக்கு ஏற்கனவே இருக்கிறது. கோபாலதாசரின் ஆயுள்தானம் தங்கள் வாழ்வில் ஒளியேற்றியிருக்கிறது. முந்தைய கர்மபலன்கள் அனைத்தும் தீர்ந்துவிட்டன. இனி எல்லாம் சுகமே. அரசர்கள், பண்டிதர்கள், பாமரர்கள், சன்யாசிகள், பீடாதிபதிகள் என அனைவரும் தங்களை மரியாதை கொடுத்து கௌரவிப்பார்கள். தங்கள் வாக்கினில் பாரதிதேவி, சரஸ்வதிதேவி நின்று, தங்கள் எழுத்துக்களில் ஜயலட்சுமி நின்று, தங்களுக்கும் நம் ஹரிதாச பரம்பரைக்கும் என்றும் நிலைத்திருக்கும் புகழினைக் கொடுப்பார்கள்' என்று அருளினார். அதனைக் கேட்டு மனமுருகிய ஜகன்னாததாசர், மிகுந்த பக்தியுடன் விஜயதாசரின் முன்னிலையிலேயே இந்தப் பாடலை இயற்றி குருகளுக்கு சமர்ப்பித்தார்.

ரது1ன தொ3ரகி1த1ல்லா எனகொ3ந்து3
ரது1ன தொ3ரகி1த1ல்லா |ப|

ரது1ன தொ3ரகி1து என்ன ஜென்ம ப1
வித1ரவாயிது இந்தி3ன தி3ன
யதன கை3யுத1 ப3ருதி1ரலு ப்ர
யத1னமாட3தே3 விஜயராயரெம்போ |அ.ப|

பத4தீ3 நா ப3ருதி1ரலு த4ளத4ளவெந்து3
அதிகா1ந்தி1 யுளபி1ஸலு பெ3ரகா3கு3த1
அதி1 சோத்3யவ கா1ணலு ஸேவிசுதி1ரெ
சத1த1 க1ரபி1டி3தா3த3ரிஸி மனோ
ரத2வ பூரைசுத1லி ச
ந்மதி1ய பாலிஸி மோக்ஷபத3வனெ
அதி1ஷயதி3 தோ1ருத1லி பொரெயுவ |1|

ஞானவெம்போ புத்த1ளி க1ம்பி3யல்லி
ஆணெ முத்தி1ன ப4க்திலி சுக்1ருத1மாலா
நானா வித3ங்களலி சேரிசுதி1ரெ
ப்ராண பத3க1வெம்போ மாலெ அனு
மானவில்லதெ கொ1ரளிகா3கு1த1
கா3னதி3ந்த3 கு1ணிது1 பா1டு3த1
தீன ஜனருத்தா4ரகை3யுத1 |2|

ஷோதி3ஸி கி3ரந்த2க3ள சுளாதி3ய
மோத3தி3ந்த3லி ப3ஹள க1விதா1 மாடி3
சாது4ஜனகெ1 சுகா1ல ஆனந்தவித்து1
வாதிஜனரனு கெத்து3 வாதி3ஸி
மாதவ ஜகன்னாதவிட்டலன
பாத கமலக்கெ மதுபநந்த3தி3
சாத3ரதி3 தோரிஸுத1 மெரெயுவ |3|

கோபாலதாசர் மற்றும் விஜயதாசரின் அருளினைப் பெற்று, மிகுந்த மகிழ்ச்சியுடன் ஜகன்னாததாசர் மானவிக்கு திரும்பி வந்தார். தமக்கு உபதேசம் ஆனதைப் போல, தாம் கற்றிருந்த சாஸ்திர ஞானத்தை, கீர்த்தனைகளின் மூலம் இயற்றத் துவங்கினார். தாசரிடம் கல்வி கற்பதற்காக பல்வேறு ஊர்களிலிருந்து பலர் வரத் துவங்கினர். பாட–பிரவசனம், பாடல்கள் இயற்றுவது, உபதேசம், தத்வ பிரசார காரியம் – ஆகியன மானவியில் தாசர் மூலமாக தினந்தோறும் நடைபெற்று வந்தன. அற்புதமான சாஸ்திர ஞானம் மற்றும் பக்தியுடன் திகழ்ந்த ஜகன்னாததாசரின் புகழ் ராய்ச்சூரில் வேகமாக பரவத் துவங்கியது.

**நரசிம்ம சுளாதி**

தர்மத்தை பிரசாரம் செய்வதற்கும், தீர்த்தக்ஷேத்ர யாத்திரைக்காகவும், தாசர் பயணத்தை மேற்கொண்டு வருகையில், சுரபுரம் என்னும் ஊருக்கு வந்தார். அங்கு ஒரு பிராமணன் தாசரின் காலில் விழுந்து, தன்னுடைய ஏழ்மையைப் போக்குமாறு வேண்டினார். அந்த பிராமணனின் முகத்தைப் பார்த்த தாசர் – 'முந்தைய ஏழேழு பிறவிகளிலும், உன்னால் ஒரு நற்காரியமும் ஆகவில்லை. அப்படியிருக்கையில், ஸ்ரீஹரி உனக்கு ஏன் அருளவேண்டும்' என்றார். 'இப்பிறவியில் ஏதேனும் தான தர்மங்கள் செய்' என்றார். கையில் இருக்கும் ஒரு சொம்பு, உடுத்திய உடை இவ்விரண்டையும் தவிர என்னிடம் வேறு எதுவுமே இல்லையே ஸ்வாமி என்று அந்த பிராமணர் மருகினார். அந்த சொம்பையே ஏதாவது ஒரு சஜ்ஜனருக்கு தானம் செய்யலாமே என்றதற்கு – தங்களைவிட சஜ்ஜனர்கள் வேறு யார் இருக்கிறார்கள் ஸ்வாமி என்றவாறு, அந்த சொம்பினை தாசரின் முன் வைத்து, கிருஷ்ணார்ப்பணம் என்றார் அந்த பிராமணர். அந்த சொம்பில் பானகம் செய்வித்து, அந்த பிராமணரின் கையால் கிருஷ்ணார்ப்பணம் செய்வித்து, தானம் கொடுக்கச் செய்தார். தாசரின் ஏழ்மை தீரட்டும் என்று வேண்டியவாறு நரசிம்ம சுளாதியை இயற்றி அவருக்கு உபதேசம் செய்தார். 'துரிதவன குடாரி, துர்ஜன குலவைரி' என்னும் அந்த சுளாதியை பாராயணம் செய்து, சில நாட்களிலேயே அந்த பிராமணர் செல்வந்தன் ஆனார்.

இதே போல் தாசர் மானவியில் இருந்தபோது அவரின் மகன் இறந்தும், மகள் துக்கத்தினால் திரும்ப வீட்டிற்குத் திரும்பியதாலும், அவளின் அமைதிக்காக தாசர் 'தத்வசுவ்வாலி'யை இயற்றி அவளுக்கு அருளினார். அதை தினந்தோறும் பாராயணம் செய்து, ஞான பக்தி வைராக்யங்களைப் பெற்று அவள் பெரிய ஞானி ஆனார். இதைப் பற்றி இன்னொரு அபிப்பிராயமும் இருக்கிறது. தன்னுடைய சிஷ்யரான பிராணேசதாசரின் மனைவி வெங்கடம்மா மூலமாக, அனைத்து சஜ்ஜனர்களுக்கும் முக்கியமாக பெண்களுக்கு, ஹரிகதாம்ருதசார பாராயணத்தின் பலன் முழுவதுமாக கிடைக்கவேண்டும் என்பதற்காக தத்வசுவ்வாலியை இயற்றினார். தன் சிறுவயதிலிருந்தே தனக்கு அறிவு புகட்டிய இடம் என்று மந்திராலயத்தின் மேல் தாசருக்கு விசேஷமான பாசம் இருந்தது. பிருந்தாவனத்திற்கு எதிரே நின்று வணங்கினால், சாட்சாத் ராகவேந்திர ஸ்வாமிகளையே தரிசனம் செய்துகொண்டிருந்தார். கண்ணீர் நிறைந்து வழிந்துகொண்டிருந்தது. தம்முடனே வந்துவிடுமாறு ராயரை நேராகவே கேட்டுக்கொண்டிருந்தார்.

ராயபா[3]ரோ தந்தெ[3] தா[1]யி பா[3]ரோ நம்மனு கா[1]யோபா[3]ரோ
மாயிக[3]ள மர்தி[4]ஸித[3] ராகவேந்திர ராய பாரோ
பூ[4]த[1]ளனாதன பீ[4]திய பி[3]டிசிதெ
ப்ரேத[1]த்வகளெதெ மஹிஷிய ராயபாரோ
ப்ரேத[1]த்வகளெதெ மஹிஷிய மஹமஹிம ஜக
ந்னாதவிட்டலன ப்ரீதி[1]பா[1]த்ர ராயபாரோ

என்று மிகுந்த பக்தியுடன் ராகவேந்திரரை வேண்டி வணங்கினார். 'ஞானக்கடலே, சரணடைந்தவர்களைக் காக்கும் காமதேனுவே, எப்போதும் உன்னை வணங்குவேன்' என்று ஸ்ரீராகவேந்திரரை 'ஸ்ரீநிகேதன பாலயமாம்' என்னும் பாடலின் மூலம் வேண்டினார்.

அங்கிருந்து புறப்பட்டு தாசர் சாவனூருக்கு வந்தார். அப்போதைய உத்தராதி மடாதீசரான ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள், ஒன்பது தங்க பாத்திரங்களில் நவரத்தினங்களை நிரப்பி, ஸ்ரீராமதேவருக்கு ரத்னாபிஷேகம் செய்த காட்சியை கண்டுகளித்தார். ஸ்ரீமடத்தின் சிஷ்யர்கள் மைசூர், சாவனூர், தஞ்சாவூர், அனந்தசயன ஆகிய ஊர்களில் திவானாக இருந்தனர். தூரத்தில் இருந்த ஊரான கயாவிலும் ஸ்ரீமடத்து சிஷ்யர்கள் முக்கிய பதவிகளில் இருந்தனர். நடுஇரவில் சூரியதரிசனத்தைக் காட்டிய சத்யபோத தீர்த்தரைக் கண்ட ஜகன்னாததாசர் மிகவும் மகிழ்ச்சியடைந்து ஆனந்தக்கண்ணீர் வடித்தார். 'அத்யதிக சந்தோஷதலி ப்ரத்யர்திகளனுத்தரிஸி மிகெ புருஷோத்தமனெ பரனெந்து டங்குர ஹொய்ஸி கிருதார்த்தரெனிஸித' என்று சத்யபோத ஸ்வாமிகளை 'வாதிவாரண பஞ்சவதன சத்யபோத சத்குருஜித மதன' என்னும் பாட்டில் வர்ணித்து கௌரவித்தார். சத்யபோதரின் விசேஷ அருளுக்கு பாத்திரரானார் தாசர்.

**ஸ்ரீசத்யபோதருடன்**

ஸ்ரீசத்யபோத ஸ்வாமிகள் தனது பூர்வாசிரமத்தில் பூவராக சேவையினை செய்துவந்தார். சன்யாச ஆசிரமம் கொண்டபிறகு ஸ்ரீமடத்தின் மூலஸ்வாமியான ராமதேவரை பூஜிக்க வேண்டியிருந்தது. ராமதேவரை பூஜிக்க அமர்ந்தால், ஸ்வாமிகளுக்கு முந்தைய பூஜையின் பலனாக பூவராகனே மனதில் தோன்றியவாறு இருந்தது. தமக்கு ராமரூபம் தரிசனம் ஆகட்டும் என்று தலையை ஆட்டினார் ஸ்வாமிகள். அதற்கு ஜகன்னாததாசர் 'ராமனையே பூவராகனாக நினைத்தால் ஆயிற்று' என்றார். கண் திறந்து பார்த்த ஸ்வாமிகள் 'நீங்கள் என்னில் அந்தர்யாமியாக இருக்கிறீரா? உங்களுக்கு என் பூர்வாசிரமத்திலிருந்து செய்யும் வணக்கங்கள்' என்றார். தமது பக்தியின் காணிக்கையாக, ஜகன்னாததாசர் 'ஸ்ரீநிவாசா' என்று பொறிக்கப்பட்ட ஒரு பித்தளைத் தட்டினை ஸ்வாமிகளுக்கு அர்ப்பணித்தார்.

இன்றும்கூட சாவனூர் சத்யபோதரின் சன்னிதியில், இந்த இரு மகான்களின் சந்திப்பினை நினைவுகூறும் விதமாக, அந்த பித்தளைத் தட்டிலேயே, அங்கு வரும் பக்தர்களுக்கு மந்திராட்சதை வழங்கப்பட்டு வருகிறது. அப்போதே ஸ்வாமிகள் ஜகன்னாததாசருக்கு பல்லக்கு, தீவட்டிகளால் மரியாதை செய்வித்து அருளினார். உத்திராதி மடத்தின் சத்யசந்த தீர்த்தர், சத்யவர தீர்த்தர், சத்யதர்ம தீர்த்தர் மற்றும் ராகவேந்திர மடத்தின் வரதேந்திர தீர்த்தர், தீரேந்திர தீர்த்தர், புவனேந்திர தீர்த்தர், வாசுதேவ விட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்ற வியாசதத்வக்ஞ தீர்த்தர், மாதனூர் விஷ்ணு தீர்த்தர் ஆகிய சமகாலத்திய அனைத்து ஸ்வாமிகளின் அருளுக்குப் பாத்திரரானவர் ஜகன்னாததாசர். ரித்தி'யின் தீரேந்திர தீர்த்தருடன் ஹரிகதாம்ருதசார கிரந்தத்தை இயற்றுதல், அவருடன் சந்திப்பு பேச்சு என தன் நேரத்தை மிகவும் பயனுள்ளதாக கழித்தார் தாசர்.

அடுத்ததாக தன் பயணத்தில் ஹரிஹர, பேலூர், மேல்கோடே ஆகிய இடங்களை தரிசித்து, ஸ்ரீரங்கபட்டணத்திற்கு வந்தார் தாசர். அங்கு பௌஜுதார வெங்கடசுப்பையா அவர்களின்

வீட்டில் தங்கினார். அப்போது திவான் பூர்ணய்யா அவர்கள் ஸ்ரீரங்கபட்டணத்தில் அதிகாரியாக இருந்த காலம். பூர்ணையா அவர்களே பெரிய வித்வானாக இருந்தார். பண்டிதர்களுக்கு நண்பராக இருந்தவர். தாசர், ஹரிகதை சொல்பவராக இருந்ததால் பூர்ணய்யா, அவரை பெரிய ஆளாகக் கருதவில்லை. தாசரும் பூர்ணையாவைப் பார்க்கவேண்டும் என்று எந்த முயற்சியும் எடுக்கவில்லை.

பௌஜுதார வெங்கடசுப்பையா அவர்களின் வீட்டில் ஜகன்னாததாசர் தினப்படி செய்துகொண்டிருந்த கச்சேரியில் அதிக மக்கள் வரத் துவங்கினர். வெங்கடசுப்பையா அவர்கள் பூர்ணய்யா அவர்களிடம் வந்து, தாசரின் சாதனை, பாடல்கள், தத்வபிரசாரங்களின் சிறப்பு என்று அனைத்தையும் சொல்லி, அத்தகையவரின் கச்சேரியைக் கேட்க ஒரு நாளாவது வரவும் என்று அழைப்பு விடுத்தார். ஆனால் பூர்ணய்யா அவர்களுடன் இருந்த பண்டிதர்கள் 'நீங்களே ஒரு பெரிய பண்டிதர். இன்னும் ஒரு தாசரிடமிருந்து கற்கவேண்டிய சாஸ்திர ஞானம் என்ன இருக்கிறது? தங்களின் அரசு வேலையில் இத்தகைய சந்தர்ப்பங்கள் தினந்தோறும் வரும். ஆகவே இதை / இவரைப் பற்றி நீங்கள் அதிகம் கவனிக்கத் தேவையில்லை' என்று தங்கள் கருத்துகளைக் கூறினர். ஆனால் வெங்கடசுப்பையா மட்டும் பிடிவாதத்தை விடாமல் தினமும் வந்து 'ஜகன்னாததாசர் மற்ற ஹரிகதை தாசர்களைப் போல அல்ல. ஸ்ரீஹரியின் அருளைப் பெற்று, நமக்கு அருள்வதற்காக வந்திருக்கும் அபரோக்ஷ ஞானிகள் அவர். தாங்கள் தயவு செய்து உபன்யாசத்திற்கு வரவேண்டும்' என்று வேண்டினார்.

**நம் திவான் உறங்குகிறார்**

ஜகன்னாததாசர் தமது உபன்யாசத்தைத் துவக்கினால், தேவ தேவதைகளும் வந்து அதைக் கேட்பர். வந்திருக்கும் மக்கள் தமது குடும்பப் பிரச்னைகளை மறந்து அங்கேயே தங்கிவிடுவர். தாசரும் மாலையில் சந்தியா, ஜபங்களை முடித்து தமது கீர்த்தனைகளைத் துவக்கினால் இரவு சுமார் ஒன்பது மணிக்கு முடித்துவிடுபவராக இருந்தார். இரவு உணவிற்குப் பிறகு கீர்த்தனைகளைப் பாடுவது அவரது வழக்கத்தில் இருக்கவில்லை.

பூர்ணய்யா அவர்கள் ஒரு நாள் தம் இரவு உணவினை முடித்து, தன் அரசு வேலைகள் அனைத்தையும் முடித்து, தாம்பூலம் போட்டுக்கொண்டு, தீவட்டி பிடித்து, முன்னர் வருவதாக செய்தி சொல்லாமலேயே பௌஜுதாரரின் வீட்டிற்கு தாசரைப் பார்க்கவேண்டி வந்தார். அதற்குள் தாசர் கச்சேரியினை முடித்து, ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அவர் வந்த செய்தியைக் கேட்ட வெங்கடசுப்பையா, ஓடிவந்து அவரை வரவேற்று, ஒரு ஆசனம் கொடுத்து திவானை அதில் அமரச் செய்தார். தாசர் அங்கு எங்கும் காணப்படவில்லை. பூர்ணய்யா அவர்கள் வெங்கடசுப்பையாவிடம் 'தாசர் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தால் அவரை தொந்தரவு செய்யவேண்டாம்' என்றார்.

ஆனால் அதை செவிமடுக்காத பௌஜுதார், தாசர் படுத்திருந்த அறையில் நுழைந்து அவரை எழுப்பலானார். 'தாசரே, தங்களின் பிறவி இன்று பயனடைந்தது. பாக்ய தேவதை வீட்டு வாயிலுக்கே வந்ததுபோல, திவான் அவர்களே தங்களைத் தேடி வந்திருக்கிறார். வெளியில் காத்திருக்கிறார். தாங்கள் வந்து ஒரு சிறு உபன்யாசத்தை செய்துவிடுங்கள். முடியாவிட்டால் ஒரு பாடலைப் பாடுங்கள் அது போதும்' என்றார்.

'எந்த திவான்?'.

'திவான் பூர்ணய்யா அவர்கள்'.

'நமது திவான் ஏற்கனவே தூங்கியாயிற்று. உன் திவானுக்கு என் திவானைப் பார்க்கும் ஆசை இருந்தால் நாளை வரச்சொல்'.

'பெரியவர், திவான் வந்தால், தாசர் சிறிது அனுசரித்துப் போகவேண்டும். ஆகவே தயவுசெய்து எழுந்திருக்கவும்'.

'மங்களம் பாடி, லாலி பாடி தூங்கியபின் மறுபடி எப்படி பாடல் பாடுவது?' என்று தாசர் மறுபடி கேள்வி எழுப்பினார்.

அந்த சூழ்நிலையை கற்றறிந்தவரான பூர்ணய்யா புரிந்துகொண்டார். வெங்கடசுப்பையாவை அழைத்து 'படுத்திருக்கும் தாசருக்கு தொந்தரவு கொடுக்கவேண்டாம். நானே இன்னொரு முறை வருகிறேன்' என்று சொல்லி திரும்பினார்.

பிறகு, தாசர் அங்கிருந்து புறப்பட்டு உடுப்பி வந்தார். கிருஷ்ணனின் தரிசனத்தை கண்ணாரக் கண்டார். உடுப்பியின் அஷ்ட மடத்து ஸ்வாமிகளும் தாசருக்கு விசேஷ மரியாதை செய்தனர். மடத்தின் ராஜாங்கணத்தில் அனைத்து ஸ்வாமிகளும் அமர்ந்து தாசரின் கீர்த்தனைகளைக் கேட்டனர். அனைவரும் ஜகன்னாததாசரை மனமார ஆசிர்வதித்தனர்.

உடுப்பியிலிருந்து புறப்பட்டு தாசர், சுப்ரமண்ய, தர்மஸ்தல வழியாக சொண்டா க்ஷேத்திரத்திற்கு வந்தார். சொண்டாவில் தவளகங்கையில் குளித்து, ராமத்ரிவிக்ரம தேவரை தரிசித்து, வாதிராஜர் பூதராஜரின் தரிசனத்தைப் பெற்றார். 'வாதிராஜகுரு நீ தயமாடோ ஈ துரிதவ நிவாரிபர்யாரோ' என்ற பாடலை அங்கு இயற்றினார். அங்கிருந்து ஹம்பிக்குச் சென்ற தாசர், பம்பா விரூபாக்ஷனைக் குறித்து 'சம்போ சுரகங்காதரனே பாலிசம்பா ரமணனே லிங்கா' என்னும் பாடலைப் பாடினார். யந்த்ரோத்தாரக பிராணதேவரைக் குறித்து 'பாரதிரமண பவபயகரண' என்று பாடினார். நவபிருந்தாவனத்திற்கு வந்த தாசர் 'பிருந்தாவனகளிகானமிபே நித்ய நந்ததீர்த்த மதோத்தாரகரெனிசனவ' என்னும் பாடலைப் பாடினார். அங்கிருந்து கனககிரிக்கு வந்து நரசிம்மரை வணங்கினார். தம் சித்தப்பா, சித்தியின் இடமான ஹரபனஹள்ளிக்கு வந்து அங்கு அவர்களுக்கு ஒரு நிலத்தை தானம் வழங்கினார். தாம் பூஜித்து வந்த ஒரு லட்சுமி நரசிம்ம சிலையையும் அவர்களுக்குக் கொடுத்தார்.

வரதாநதி பாயும் அழகினைக் கண்டு, ஹொரசரித்திக்கு வந்தபோது 'வரதே காருண்யஷரதே, கரெதென்னா தவ ஸன்னிதியலி இட்டு பொரெதெ' என்று பாடினார். தம் வாழ்க்கையின் பெரும்பகுதியை ஹொரசரித்தியின் தீரேந்திர தீர்த்தருடனேயே தாசர் கழித்தார். பீமாநதி தீரத்தில் குசுமூர்த்தி என்னும் கிராமத்தில் இருந்த கிருஷ்ணத்வையாபயனரின் சன்னிதானத்திற்கு வந்து 'கிருஷ்ணத்வைபாயன குருராயா, மனோபீஷ்டதாயக கருணதி பிடிகையா' என்று பாடினார். கொப்பர மற்றும் ஷூர்பாலி நரசிம்ம க்ஷேத்திரத்திற்கு வந்து தரிசனம் செய்து சுரபுர சம்ஸ்தானத்திற்கு வந்தார். கத்வால் சம்ஸ்தானத்தில் சுரபுர ஆனந்ததாசரின் ஹரிகதையினைக் கேட்டு மகிழ்ந்தார்.

இந்த பயணத்திற்கெல்லாம் கிரீடம் வைத்தாற்போல், ஜகன்னாததாசர் பதரிகாஸ்ரமத்திற்குப் புறப்பட்டார். 'மத்வாந்தர்கத வேதவியாஸ, மம ஹ்ருத்வனருஹ சன்னிவாச' என்னும் குருஸ்துதியை அங்கே இயற்றினார். அங்கிருந்து காசி, கயா, த்ரிவேணி சங்கமம், பூரி ஜகன்னாதரின் தரிசனத்தைப் பெற்று திரும்பினார்.

சில ஆண்டுகள் கழித்து தாசர் மறுபடி மைசூர் பிராந்தியத்திற்கு வந்தபோது, அங்கு அரசியல் மாற்றங்கள் பல காணப்பட்டன. போரில் திப்பு தோற்றான், மும்மடி கிருஷ்ணராஜ உடையார் மைசூரின் அரசராக இருந்தார். அப்போதும் பூர்ணய்யா அவரே திவானாக இருந்தார்.

முன்னர், தாம் தாசரின் தரிசனத்திற்கான போனபோது அவரின் தரிசனம் கிடைக்கவில்லை என்னும் கவலை பூர்ணய்யா அவர்களுக்கு இருந்தது. ஆகையால் இந்தமுறை தாசரை தம் வீட்டிலேயே வந்து தங்குமாறு வேண்டினார். மகாராணி லட்சுமம்மணி அவர்களிடம் கேட்டுக்கொண்டு, தாசருக்கு அரண்மனையில் சிறப்பு வரவேற்பு அளிக்கச் செய்தார்.

அப்போது தினமும் மாலையில் ராணியின் அரண்மனையில் தாசரின் ஹரிநாம கீர்த்தனை நடைபெற்று, அதை மகாராணியும் கேட்டு மகிழ்ந்தார். ஜகன்னாததாசர் போன்ற மஹனீயர்களால் அரண்மனையே சுத்தமாயிற்று என்று கொண்டாடினார். தாசரின் உபதேசத்தினால் தெளிவு பெற்று, அவருக்கு தங்கக்காசுகள், வாகனங்கள் என பலவற்றை பரிசாக அளித்தார். தாசர் அரண்மனைக்கு வந்ததன் நினைவாக, தினமும் ஸ்ரீஹரியின் நாமஸ்மரணை பஜனையை மகாராணி லட்சுமம்மணி துவக்கி வைத்து, அது ஜெயசாம்ராஜ உடையர் காலம் வரைக்கும் நடைபெற்று வந்தது. ஜகன்னாததாசரை அரண்மனை பல்லக்கில் அமர்த்தி ஊர்வலம் வரச்செய்து மரியாதை செலுத்தி அனுப்பினர். அந்த பல்லக்கு இன்றைக்கும் மானவியில் தாசரின் வீட்டில் இருக்கிறது.

**மாண்ட்யாவின் தாவளி ஒன்று மற்றும்**
**ஐந்து ரூபாய் சம்பாத்தியம்**

ஜகன்னாததாசர் பூர்ணய்யா அவர்களின் வீட்டிலேயே இருந்தாலும், தினமும் அரண்மனையில் கீர்த்தனைகள் பாடிவந்தார். தனது அரசு வேலையில் மிகவும் பரபரப்பாக இருந்ததாலும், தாசர் தினமும் அரண்மனையில் பாடிவந்ததாலும், பூர்ணய்யா அவர்களால் இந்த முறையும் தாசரின் பாடல்களைக் கேட்டு மகிழும் வாய்ப்பு இல்லாமல் போனது.

தாசர் நம் வீட்டில் வந்து தங்கினாலும், அவருடன் அமர்ந்து உண்ணும் வாய்ப்பு நமக்குக் கிடைக்கவில்லை. நைவேத்தியத்தைப் பற்றி விசாரிக்க முடியவில்லை. அவருடன் அமர்ந்து உண்பது மற்றும் அவரது கீர்த்தனைகளின் சிறப்பை ஒரு நாளாவது உணர வேண்டும். இதைப் பற்றி அவர் என்ன நினைக்கிறாரோ? என்று பூர்ணய்யா அவர்கள் தன் நிலையை எண்ணி வருந்தினார்.

அவரது நைவேத்தியத்தில் நாம் சேர்வது சாத்தியமில்லை. நைவேத்தியமே இல்லாத ஏகாதசியன்று அவரை கீர்த்தனை பாட அழைத்தால் பிரச்னையேயில்லை என்று பண்டிதர்கள் நினைத்தனர். அப்படியென்றால் சம்பாவனை எவ்வளவு கொடுப்பது என்று பூர்ணய்யா கேட்டார். ‘தாரதம்யத்தின்படியே சம்பாவனை இருக்கவேண்டும். ஸ்ரீபாதராஜரோ, வீட்டு ஆசாரியரோ, வித்வாம்சராகவோ இருந்தால், அவருக்குக் கொடுக்கவேண்டிய மரியாதையே வேறு. தாசர் வைதிகரும் இல்லை; கிருஹஸ்தரும் இல்லை. கீர்த்தனை பாடுபவராகையால் அவருடைய மரியாதை வேறு மாதிரி இருக்கவேண்டும். அரண்மனையில் அவருக்குக் கிடைத்த மரியாதையும் தங்களால் கிடைத்ததுதான். அங்கு பாடுவதற்கும் இங்கு பாடுவதற்கும் நிறைய வித்தியாசங்கள் உள்ளன. இவ்வளவு பெரிய பண்டிதர்கள் அமர்ந்து அவரைக் கேட்பதே அவருக்கு மிகப்பெரிய சம்பாவனையாகும். ஆகவே தாரதம்யம் அறிந்து ராயர் நடந்து கொள்ளவேண்டியது அவசியம்’ என்று அனைவரும் பூர்ணய்யாவிற்கு அறிவுறுத்தினர்.

அதன்படியே ஜகன்னாததாசரின் ஹரிநாம சங்கீர்த்தனம் பூர்ணய்யாவின் வீட்டில் ஏகாதசியன்று ஏற்பாடு செய்யப்பட்டது. மாண்ட்யாவின் ஒரு தாவளி, ஐந்து வெள்ளிக் காசுகள் சம்பாவனையாகக் கொடுப்பதென்று பூர்ணய்யா மனதில் தீர்மானித்தார். அந்த நாளும் வந்தது. தாசரின் சிஷ்யரான பிராணேசதாசர், தாசரின் நிகழ்ச்சிக்கான பொருட்களை சேகரித்தார். தம்பூரி, தாளம் வாசிக்கும் அனைவரும் அந்தந்த இடங்களில் வந்து அமர்ந்தனர். பண்டித நண்பர்களுடன் பூர்ணய்யா அவர்களும் கம்பீரத்துடன் சபையில் வந்து அமர்ந்தார்.

தாசரின் பாடல்கள் துவங்கின. பாடல்களுடன், மிகவும் சுவாரசியமாக பிரம்மசூத்திரம், தத்வபிரகாசிகா, அனுவியாக்யான, நியாயசுதா, வியாஸத்ரயங்கள், உபநிஷத்கள், கீதை என இவை அனைத்தையும் அமிர்த மழையாக தாசர் பொழிந்தார். ஸ்ரீஹரியின் பாடல்களை மெய்மறந்து பாடலானார். அந்த ஹரியை நேரிலேயே கண்டார். அனைவரையும் அந்த ஸ்ரீஹரியை நேரில் காண்பதைப்போன்ற மயக்கத்தில் கொண்டு வந்து நிறுத்தினார். கேட்போரை பரவசப்படுத்தினார். அனைவரும் அந்த நிலையில் இருக்கையில், தாசர் நிகழ்ச்சியை மங்களம் செய்தார். சபையில் இருந்த அனைத்து பண்டிதர்களும், தாசரின் பாண்டித்யம், திறன், ஞானம், பக்தி ஆகியவற்றைக் கண்டு பிரமித்து நின்றனர்.

'ஆனந்த ஆனந்த, மத்தே பரமானந்த' என்பதைப்போல பூர்ணய்யா அவர்கள் தாசரின் பாடல்களின் தன்னை மறந்து அமர்ந்திருந்தார். திடீரென்று என்ன நினைத்தாரோ, அங்கிருந்து எழுந்தார். தன்னுடைய பெட்டகத்திற்குச் சென்றார். ஒரு தட்டு நிறைய வெள்ளிக் காசுகள் – சுமார் 1000 இருக்கும் – அதில் நிரப்பினார். ஒரு அற்புதமான சால்வையை எடுத்துக்கொண்டு வந்தார். தாசருக்கு சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி – 'அற்புதமான அனுபவத்தைக் கொடுத்தீர் தாசரே, இந்த அற்பனின் காணிக்கையை ஏற்றுக்கொள்ளவும்' என்றார். தாசர் புன்னகையுடன் 'சத்ய. ஹரிசித்த சத்ய. நாம் நினைப்பது எப்போதும் நடப்பதில்லை. தாங்கள் ஹரிகதை துவக்குவதற்கு முன் எனக்கு கொடுக்க நினைத்தது – ஒரு மாண்டியாவின் தாவளி மற்றும் ஐந்து நாணயங்கள் மட்டுமே. நம் தேவர் சத்யசங்கல்பன் ஆகையால், தாங்கள் சங்கல்பம் செய்ததைப் போல அவற்றை மட்டுமே நான் ஏற்கமுடியும். அதற்குமேல் எதையும் என்னால் ஏற்கமுடியாது' என்றார். அதைக் கேட்டு நடுங்கிய பூர்ணய்யா 'ஸ்வாமி, தாங்கள் மகாஞானிகள். அபரோக்ஷஞானிகள். நான் அப்படி நினைத்தது நிஜமே. தவறு செய்துவிட்டேன். மன்னிக்க வேண்டுகிறேன்' என்றார்.

**ரங்க ஒலித தாசர் – ரங்கோலி தாசர்**

ஜகன்னாததாசருக்கு ரங்க ஒலித தாசர் என்றும் ரங்கோலி தாசர் என்றும் பெயர் இருந்தது. ரங்கோலி வரைவதில் அவர் திறன் பெற்றிருந்தார். தாசர் மைசூரில் இருந்தபோதே, ஸ்ரீரங்கபட்டணத்தின் ரங்கநாதரை மிகவும் அழகாக ரங்கோலியில் வரைந்திருந்தார். அதைக் கண்ட பூர்ணய்யா அவர்கள் 'இந்த ரங்கோலி மிகவும் அழகாக இருக்கிறது. ஸ்ரீரங்கபட்டணத்தில் இருக்கும் ரங்கநாதனே மைசூருக்கு நேரில் வந்தது போல் இருக்கிறது. ஆனால் ஸ்வாமிக்கு நகைகளே போடவில்லையே' என்றார். உடனே தாசர் 'இன்று ஸ்ரீரங்கபட்டணத்தில் ரங்கநாதனுக்கு துளசிமாலை மட்டுமே போடப்பட்டிருக்கிறது' என்றார். அவர் சொன்னது உண்மையா இல்லையா என்று பார்க்கும் விதத்தில், பூர்ணய்யா உடனே ஒருவரை குதிரையில் ஸ்ரீரங்கபட்டணத்திற்கு அனுப்பினார்.

அன்று ரங்கநாதனுக்கு நகைகள் எதுவும் போடப்படாமல் வெறும் துளசிமாலையே போடப்பட்டிருந்தது. தாசர் ஒரு அபரோக்ஷ ஞானியே என்று தெரிந்த பூர்ணய்யா அவரை விழுந்து வணங்கினார். பின்னர் அரசர், தாசரை பல்லக்கில் அமர்த்தி மிகுந்த வைபவத்துடன் நகர்வலம் வரச்செய்தார்.

ஜகன்னாததாசர் தனது பயணத்தில் அனயசயனத்திலிருந்து பின் உடுப்பிக்கு வந்தார். கிருஷ்ண தரிசனத்தில் மிகுந்த மகிழ்ச்சியடைந்த தாசரை, அஷ்ட மடாதீசர்களும் வரவேற்று அவருக்கு மரியாதை செலுத்தினர். தினமும் கிருஷ்ண மடத்தில் ராஜாங்கணத்தில் தாசரின் கீர்த்தனை நடைபெற்றது. வாதிராஜரின் கிரந்தங்களுக்கு உரை எழுதுவதோடு, வாதிராஜரின் அனைத்து பாடல்களையும் நன்கு பொருள் புரியுமாறு தாசர் விளக்குவதைக் கண்ட பண்டிதர்கள் வியப்படைந்து மூக்கின் மேல் விரல் வைத்தனர்.

ஸ்ரீஹரியின் கீர்த்தனைகளைக் கேட்டால் ஊமையும் பேசுவான் என்று தாசர் சொல்வதைக் கேட்ட அங்கிருந்த நால்வர் அவரை சோதிக்க முற்பட்டனர். ஒரு ஊமையை அங்கு கொண்டு வந்து நிறுத்தினர்.

**ஊமை பேசத் துவங்கினான்**

அன்றைய உபன்யாசம் முடிந்தவுடன் தாசர் அந்த ஊமையை மேடைக்கு அழைத்தார். 'கதை கேட்டாயா, விஷயம் புரிந்ததா' என்று அவன் தலையில் தன் கையை வைத்துத் தடவிக்கொடுத்தார். அவன் ஒரு ஊமை என்று அனைவருக்கும் தெரிந்திருந்தது. அவனோ 'தாசரே, தங்கள் அருளால் அனைத்தும் புரிந்தது' என்று வாய் திறந்து பேசினான். அதைக் கேட்டு சபையே வியப்பில் ஆழ்ந்தது. உடனே தாசர் தன்னை சோதிக்க முற்பட்ட அந்த ஊமையின் நண்பர்களை மேலே அழைத்தார். தாசர் அவர்களிடம் பேசியபோது, அவர்களுக்கு பேச்சே வரவில்லை. அந்த நால்வரும் ஊமையாகிருந்தனர். அவர்கள் தாசரின் பாதங்களில் விழுந்து - பெரிய தவறு செய்துவிட்டோம். எங்களை மன்னித்து விடுங்கள் என்று சைகையிலேயே கேட்டு கண்ணீர் விட்டனர். அப்போது தாசர் அவர்களை அடுத்த 7 நாட்கள் தினமும் மத்வசரோவரத்தில் குளித்து, கிருஷ்ணனுக்கு சேவை செய்து, அலங்கார பந்தியில் உண்டவர்களின் இலையினை எடுத்து, பின் கிருஷ்ணனிடம் வேண்டினால், அவர் உங்களுக்கு அருள்வார் என்றார்.

தாசர் கூறியதைப்போலவே அவர்கள் ஒரு வாரத்திற்கு கிருஷ்ணனின் சேவை செய்து தங்களின் பாவத்தைப் போக்கிக் கொண்டனர். முன்னைப் போலவே அவர்களுக்கு பேச்சு வந்தது. அது போன்ற தவறுகளை மறுபடி செய்யாமல் கிருஷ்ண சேவையில் தங்கள் வாழ்க்கையைக் கழித்தனர்.

தனது பயணத்தைத் தொடர்ந்த தாசர், அடுத்து ஷிவமொக்கா வந்தார். கும்சி கிராமத்தில் அவர் நிறுவிய 'கோ-கல்' இன்றும் அவரது புகழை பறைசாற்றி வருகிறது. அங்கு தாசர் வந்திறங்கிய வீட்டினை இன்றும் நாம் காணலாம்.

'சாரஸ்வத பரிணய' என்னும் கிரந்தத்தை எழுதிய தொட்டபெல்லாபுரத்தின் ராகவேந்திர கவி, தனது காவியத்தில் ஒரு இடத்தில் தன்னை ஜகன்னாததாசரின் பிரியமான சிஷ்யர் என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டிருக்கிறார். ஜகன்னாததாசரும் தொட்டபெல்லாபுரத்திற்கு வந்து, தனது பிரிய சிஷ்யரான தேஷ்பாண்டே கிருஷ்ணராயரின் வீட்டில் தங்கியிருந்ததை நினைவில் வைப்பதற்காக, அந்த வீட்டின் முன்னிலையில் பாண்டுரங்கனின் விக்ரகம் ஒன்றினை நிறுவினார்.

தொட்டபெல்லாபுரத்தின் யாதவராயர், அவரது மக்களான கிருஷ்ணராயர், அவரது உற்றார் உறவினர் என அனைவரும் தாசரின் சிஷ்யர்களாக இருந்தனர். அப்போது மைசூர் ராஜ்ஜியத்திற்கு அதிகாரியாக ரெசிடெண்ட் க்ளோஸ் என்பவர் இருந்தார். அவருக்குக் கீழ் தொட்டபெல்லாபுரத்தின் ராகவேந்திரப்பா என்பவர் பணி புரிந்தார். இவர் தனது புத்தகத்தில் ஜகன்னாததாசரைப் பற்றி, அவரது அறிவு, ஞானம், திறன், தானம், தர்மம், வாழ்க்கையைப் பற்றிய பல அரிய தகவல்களை பதிந்துள்ளார்.

மூட$^{3}$ரொளக$^{3}$க்க$^{1}$ளெய என்னய வித்$^{3}$ய நைவேத்$^{3}$ய ப்ரதா$^{4}$னவு |
ஹிந்து$^{3}$ முந்தி$^{3}$ன விவரவு தி$^{1}$ளியது$^{3}$ |
கு$^{3}$ரு ஹிரியரலி மாடித$^{3}$ ப$^{4}$க்தி மொத$^{3}$லில்ல நம்ம
தந்தெ$^{3}$ய மனெகெ$^{3}$ பருதி$^{1}$ஹ பஹள தத்வஞானிகளு |
பக்தரெனிசித$^{3}$ ஜகன்னாத விட்டலரெனகெ$^{3}$ பரிசிதராதரவரலி |
ஓது$^{3}$ க$^{1}$லிதெ$^{3}$னு ஒளிக$^{3}$ மந்த்ராலயகெ$^{1}$ |

ஜொதெ1யொளின்ன க1ரெதொ3ய்யுத்த1 |
கி2ல தி3னவல்லி வாசவகை3த3ரு மானவி எம்ப |
தம்மூரிகெ ஸ்வகிராமக்கெ தெரளிதரு ||

ராய்ச்சூரிந்தாச்சே எரடு காவுததொளகெ |
மானவி எம்ப ஊரிதெ அதனு மானுவி தால்லூகு |
எந்து உர்துவினல்லி கரெயுவரு சாமான்யரலி இருதிஹ ஜனரு
ஆ ஹெசரன்னெ கரெயுவரு |
அல்லி அனதி தூரதலி குருவர |
ஜஹகீரெனிப ப்யாகவட்டத கிராமவிதெ |
அல்லிவரு வாசிசுவ பஹு விஸ்தாரவாகிஹ க்ருஹவிஹுது
பஹு ஜன சிஷ்ய மண்டலி வைதிகரு |
லௌகிகரு, ஸ்ரீமந்தருகளல்லதெ |
நன்னந்தத மஹா மூடருகளல்லிர்து |
சேவெயகைது சன்மதியுக்தராகுவரு ||

அல்லி நம்மய பந்துவர்யர |
ஹிரியரெனிசித தேஷபாண்டேய கிருஷ்ணராயர இருதலிர்தரு
இவரொளகெ3 தாசரிகெ பஹுவிஷ்வாச யாவாகலு |
ப்ரௌடஞான சுப4க்தி விஷயகள |
வார்தெயல்லதெ1 பே3ரே ஸ்ரோதவ்யதலி காணது |
சிஷ்யரனுதின கேளி ஞானோதயதி ஷாந்திய பொ1ந்தி3 கு1ளுதி1ஹரு ||

கிருஷ்ணராயர தம்பதிகலல்லிர்த விஷயவு |
நனகெ திளியது தாசராயரு தர்மபத்னியு |
கிருஷ்ணராயர மஹிஷியரு |
சஹிதவாகி கிருஷ்ணாஸ்னானத காரணதி |
எத்துகளு ஹோடிர்த காடியொள்ளைதி பந்தரு |
நன்ன காணுத கிருஷ்ணராயர தர்மபதியரு |
ருக்மிணீயன்மனெம்புவரு |
குஷலரே ஷீனண்ண மொதலாகிர்த |
பந்துகளெந்து கேளிதரு ||

குஷல வார்தெகளெல்லா கேளிதா பளிக |
போஜனவாய்து தாசர பத்னிகெ தாமரசம்மனிம்பரு |
வாடிகெயொளவரன்னு அரசம்மனெந்தே கரெயுதிஹரு |
சிஷ்ய வர்கத ஜனரு |
தொட்டம்மனவரு எம்பரு ருக்மிணியம்மனனு |
அம்மனவரெந்து கரெயுவரு ||

கிருஷ்ணராயர தர்ஷனவு |
குஷல ப்ரஸ்னெல்லவு களெத பளிக தாசர ஹரிகதாம்ருத சாரவனு | ஸ்ரீத தாசரு ஓதிதரு |
அவரிந்த ரசிதவாத நாமகள பேளிதரு |
கிரிகிம்பாயமானராய்து தருவாய |
ஸ்ரீதவிட்டல தாசராயர ஜன்ம ஸ்தல சிரஹட்டி |
நம்மரவத்தொக்கலு ஆத்ரேயச கோத்ரோத்பவரு |
ஈசரு எம்ப மனெதனதவரு | சராவதி நதிய ஈசரதவரு |

ஆரசரதவரு எம்ப வாடிகெயு ।
பந்திஹுது கிராம்யதொளகவரன்னு ।
கரெயுவரு ஈசலெந்தெந்து ।।

ப்யாகவட்டதொளிப்ப நம்ம ।ஜகன்னாத தாசரிகீக ।
மூரு சாசிர வரஹ வருஷக்கெ பருவ ஜஹகீருகளு க்ராமகளேளு ஈகிருதிஹுது ।
உளிதிஹ ஹலவு மான்யகள ।
தர்மகார்யக்கெ ஸ்ரோத்ரீய ப்ராம்மணர ஜீவனகெ ।
ம்ருத்திகளல்லதெ தேவதாலயகெந்து கெலவனு கொட்டிஹரு கிராமகளேளு ।ஜஹகீருகளு குருராகவேந்திரர சன்னிதிகெ தான ।தாராபூர்வகவாகி கொட்டது ।
ஈகவரெ அனுபவிசுத்தலிர்பரு நைஜாம ।
கர்னாடகத ப்ராந்த்யதலி ।।

திவஸ திவஸக்கெ யாஜகர ।
தக்ஷிணெயொளு த்ருப்திய படிஸி ।
போஜனவித்து களஹிசுத்திஹரு ।
பெள்ளி பங்காரகள ஔவெகள ।பண்டாரபுரகெ உடுபி ।
திருபதிகளு வினோததலிருதலிருவரு ।
பஹள மாதுகளேனு ।குருவியாசராயர ராகவேந்திரர ।
புரந்தரனாயகரு ஜயதீர்தாக்ய குருகளு ।
ஹிந்தெ ஷாஷ்டீகரொளகெ படெதிஹ கீர்தியனு ஈகிவரு படெயுத்திஹரு நித்யதலி ।

வட இந்தியாவிலும் பல ஆண்டுகள் தாசர் பயணம் செய்தார். பாகவத தர்மத்தை பிரசாரம் செய்தார். கத்வால் சமஸ்தானத்தில், கங்கா யமுனா நதிகளைக் குறித்து பாடல்களை இயற்றினார். சுரபுர சமஸ்தானத்தில் இருந்து சில காலம் பக்தி மார்க்கத்தை வளர்த்தார். ஸ்ரீரங்கம், உடுப்பி, சுப்ரமண்ய, சோதே, ஹரிஹர, ஹம்பி, நவபிருந்தாவனம் ஆகிய க்ஷேத்திரங்களில் ஹரிதாச பக்தி மார்க்கத்தை பரப்பினார்.

**ஜகன்னாததாசரின் சிஷ்யர்கள்**

பல ஆண்டுகள் பயணம் செய்து பின் தனது இருப்பிடமான மானவிக்கு வந்து சேர்ந்தார். பல சிஷ்யர்கள் அவரிடம் வந்து கல்வி பயின்று தங்கள் வாழ்வை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொண்டனர். பாடல்கள், சுளாதிகள் ஆகியவற்றை இயற்றி, தாச சாகித்யத்தை முன்னேற்றிய 21 சிஷ்யர்கள் ஜகன்னாததாசரிடமிருந்து தாச தீட்சை பெற்று தாச சாகித்யத்தை முன்னெடுத்துச் சென்றனர். அவர்களில்:

லிங்கசுகூரின் பிராணேசதாசர் (பிராணேச விட்டலா)
கர்ஜிகியின் தாசப்ப (ஸ்ரீத விட்டலா)
ஹுண்டேகார தாசப்பா (ஸ்ரீச விட்டலா)
ப்ரேமதாசர் (அபினவ ஜனார்த்தன விட்டலா)
மானாமதுரை தாசர் (வேங்கட விட்டலா)
சிக்கோடி ஆசார்யர் (சிரிவதஸ அங்கிதம்)
பூரலதின்னி நாரணப்பா (ஸ்ரீமனோஹர விட்டலா)
பீமேச விட்டலதாசர், ஆனந்தமய விட்டலா,
பிரசன்ன விட்டலதாசர், ஞானமய விட்டலதாசர்,
யோகேந்திர விட்டலா, ஸ்ரீனிவாச விட்டலா,
ஸ்ரீபிராணேச விட்டலா, விஜயஹயக்ரீவ,
ஹுக்கேரிதாசரு, குண்டோஜிதாசரு,

கம்பலி தாசர், இந்திரேச
ஆகியோர் முக்கியமானவர்கள். இவர்களைத் தவிர தாசரிடம் பயின்ற சிஷ்யர்கள் இன்னும் பலர் இருந்தனர்.

ஜகன்னாததாசரின் மனைவி பெயர் தாமரசம்மா. இவர்களுக்கு திம்மண்ண தாசர் மற்றும் தாமோதர தாசர் என்று இரு மகன்கள் இருந்தனர். மிகுந்த செல்வந்தர்களாக இருந்த தாசரும் அவரது மனைவியும், தமது வீட்டிலேயே குருகுலத்தை நடத்தி, மாணவர்கள் அனைவருக்கும் அங்கேயே இருக்க இடம், உண்ண உணவு ஆகியவற்றைக் கொடுத்து வித்யா-தானம் செய்து வந்தனர். மடங்களுக்கும், பிற சேவைகளுக்கும் பண உதவி / தானங்களை செய்து வந்தனர்.

திம்மண்ண தாசர் மற்றும் தாமோதர தாசர் என்னும் தாசரின் இரு மகன்களும், சிறு வயதிலேயே இறைவனடி சேர்ந்தனர் என்று கருதப்படுகிறது.

**தாசரின் நினைவாக இருப்பவை**

மானவியில் ஜகன்னாததாசர் வாழ்ந்துவந்த வீடு தற்போது கோயிலாக மாற்றப்பட்டிருக்கிறது. அப்போது தாசர் பூஜித்துவந்த பூஜை விக்கிரங்களில் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் பிருந்தாவனம், பாடங்கள் எடுப்பதற்காக வெளியில் அமர்ந்திருந்த கம்பம், அவர் பயன்படுத்தி வந்த வண்ணமயமான தம்பூரி, அவரே வரைந்த சில படங்கள், சத்யபோத தீர்த்தர் தாசருக்குக் கொடுத்த பாதுகைகள், ஒரகுமணே மற்றும் மந்திராட்சதை தட்டு, மைசூர் மகாராஜா மற்றும் திவான் பூர்ணய்யா அவர்கள் கொடுத்த ஒரு பல்லக்கு ஆகியவை இன்றும் அங்கு இருக்கின்றன.

தம் வாழ்க்கையை சாதனை வழியில் திருப்பி நல்வழியைக் காட்டிய விஜயதாசரின் இறுதிக்காலத்தில் அவரை சந்திக்க சிக்கலபரவிக்கு வந்தார் தாசர். கோபாலதாசர் முதலான விஜயதாசரின் சிஷ்யர்கள், ப்ர-சிஷ்யர்கள் பலர் அங்கு ஏற்கனவே வந்திருந்தனர். கண்ணீர் மல்க, மனப்பூர்வமாக விஜயதாசர், ஜகன்னாததாசருக்கு ஆசிர்வதித்தபோது, அன்பின் வெளிப்பாட்டைக் கண்ணாரக் கண்டார் தாசர். ஜகன்னாததாசர் தம்புரி மீட்ட, கோபாலதாசர் மற்றும் பலர் விஜயதாசருக்கு ஜெயகோஷம் எழுப்பினர். தேவரிஷியான விஜயதாசர் பூமிக்கு வந்து சில காலங்களிலேயே திரும்ப தேவலோகத்திற்குத் திரும்பினார். குருவின் ஆராதனையில் பங்கேற்று, பின் கோபாலதாசரின் ஆசி / அனுமதியைப் பெற்று தாசர் மானவிக்குத் திரும்பினார். அன்னதானம், ஞானதானம், ஹரிதாச வாழ்க்கை ஆகியன தொடர்ந்து நடைபெற்று வந்தன. தனக்கு ஆயுள்தானம் கொடுத்த கோபாலதாசரின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு தாசர் தயாரானார்.

ஒரு மிகப்பெரிய குழப்பத்துடன் உத்தனூருக்கு விரைந்தார். தம்முடைய பிரிய சிஷ்யரைக் கண்டதும் கோபாலதாசரின் கண்ணில் கண்ணீர் நிரம்பியது. தமக்கு ஆயுள், ஆரோக்யம், கல்வி, வினயம், பிம்ப-தரிசனம் ஆகிய பாக்கியங்கள் அனைத்தையும் கொடுத்த குருவின் தியாகம், ஹரிதாச தீட்சை ஆகியவற்றை நினைத்து ஜகன்னாததாசருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. அவரது குரல் தழுதழுத்தது. தமது குருவான விஜயதாசரின் அருளாலேயே இத்தனையும் நடக்கிறது என்றும், மேலும் அவரது மற்றொரு விருப்பம் நிறைவேற வேண்டியிருக்கிறது என்றார் கோபாலதாசர். விஜயதாசர் தமது கிருதிகளில் சொல்லியிருப்பனவற்றைப் பின்பற்றவேண்டும் என்று ஜகன்னாததாசருக்கு கூறினார். உலக மக்களின் நன்மைக்காக, உலக மக்களின் பயன்பாட்டிற்காக தாசர் ஒரு அற்புதமான கிரந்தத்தை இயற்றவேண்டும் என்றார். விஜயதாசரும் தாமும் எப்போதும் ஜகன்னாததாசரின் அருகிலேயே இருப்போம் என்று தைரியமளித்து ஆசிர்வதித்தார்.

கோபாலதாசர் இறைவனடி சேர்ந்தபிறகு, அவரது ஆராதனையை மிகுந்த பக்தியுடன் செய்து முடித்து, பின் மானவிக்கு வந்து சேர்ந்தார் தாசர்.

மானவிக்கு வந்து சேர்ந்த தாசர், ஸ்ரீனிவாசனைக் குறித்து பல அபூர்வமான பாடல்களை இயற்றினார். வரதேந்திரரின் அருளுக்குப் பாத்திரரான தாசர், கன்னட ஹரிவாயுஸ்துதியான ஸ்ரீபாதராஜர் இயற்றிய மத்வ நாமாவை திரும்பத் திரும்ப படித்தார். அதிலும் மத்வ நாமாவின் இறுதி ஸ்லோகமான

ஜயஜயது துர்வாதி மததிமிர மார்த்தாண்ட
ஜயஜயது வாதிகஜ பஞ்சானன
ஜயஜயது சார்வாக கர்வபர்வத குலிஷ
ஜயஜயது ஜகன்னாத மத்வ நாம

என்பதை பலமுறை படித்தார். ஜகன்னாததாசரின் பிம்பரூபத்தைக் குறித்து எழுதப்பட்ட மத்வ நாமா, அவருக்கு புதியதான ஒரு பரிமாணத்தைக் காட்டியது.

**மத்வ நாமாவிற்கு பல-ஸ்ருதி**

மத்வ நாமாவைக் கேட்டால், படித்தால், மனப்பாடம் செய்தால், மனதின் குழப்பங்கள் அனைத்தும் நீங்கும். மனம் தூய்மையடையும். கஷ்டங்கள் தூர விலகும். இந்தப் பலன்களை உலகத்திற்குத் தெரியப்படுத்த நினைத்தார். மத்வ நாமாவைப் படிப்பவர்களுக்கு இவ்வுலகில் சுகம், அவ்வுலகில் மோட்சம், ஸ்ரீஹரியின் தரிசனம், இதயத்தில் பிம்ப தரிசனம், விரஜா நதியில் ஸ்னானம் மற்றும் லிங்கதேகம் அழிதல், கர்மங்களிலிருந்து விடுபடல், ஸ்வரூப சுகம் கிடைத்தல் - இத்தகைய அபூர்வமான விஷயங்கள் கிடைக்கும் என்பதை தெரிவிக்கும்படியாக ஸ்ரீபாதராஜரின் மத்வ நாமாவிற்கு, ஜகன்னாததாசர் பல-ஸ்ருதியை இயற்றினார்.

**ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய பல-ஸ்ருதி**

சோமசூர்யோபராகதி கோ சஹஸ்ரகள
பூமிதேவரிகெ சுரநதிய தடதி |
ஸ்ரீமுகுந்தார்பணவெனுத கொட்ட பலவவு
ஈ மத்வநாம பரெதோதிதவர்கெ ||

புத்ரரில்லதவரு சத்புத்ரரைதுவரு
சர்வத்ரதலி திக்விஜயபஹுது சகல |
சத்ருகளு கெடுவரப ம்ருத்யுபரலஞ்சுவது
சூத்ரநாமக சம்ஸ்ருதி மாத்ரதி ||

ஸ்ரீபாதராஜ பேளித மத்வநாம சன்
தாபவனு களெது சௌக்யவ நீவுது |
ஸ்ரீபதி ஜகன்னாத விட்டலன தோரி பவ
கூபாரதிந்த கடெஹாயிசுவுது ||

**அபூர்வமான கீர்த்தனைகள்**

ஸ்ரீஹரியின் மகிமைகளை வர்ணித்த, பக்தர்களை எப்போதும் காக்கும் ஸ்ரீஹரியின் கருணைகளை வர்ணித்த ஜகன்னாததாசர், ஸ்ரீஹரியின் பக்தர்களுக்கு எப்போதும் தோல்வி என்பதே கிடையாது என்று கர்ஜித்தார். தம் பாடல்களில், லட்சுமி, சரஸ்வதி, பாரதி, சேஷர்,

ருத்ர, பாகிரதி, கங்கா, யமுனா, கிருஷ்ணவேணி, காவேரி, வரதா ஆறுகளை, தீர்த்த க்ஷேத்திரங்கள் மற்றும் வைகுண்டத்தின் வர்ணனைகளை அற்புதமாக விவரித்தார். ஜயதீர்த்தர், வாதிராஜர், ராகவேந்திரர், கிருஷ்ணத்வைபாயனர், சத்யபோதர், வரதேந்திரர், வியாசதத்வக்ஞர், புரந்தரதாசர், விஜயதாசர், கோபாலதாசர், ஐஜி ஆசாரியர், தம் தந்தை நரசிம்மதாசர் முதலான மகான்களைப் பற்றி பாடல்கள் இயற்றினார். கோபாலதாசரைக் குறித்து பாடுகையில், தமக்கு வந்த துர்மரணத்தைத் தடுத்து தம்மைக் காப்பாற்றியவர், சபல புத்தியைக் கொண்ட என்னை நல்வழிப்படுத்தியவர் என்று பலவிதமாக மனமுருகிப் பாடியிருக்கிறார். தம்மை கடைத்தேற்றிய குரு என்று விஜயதாசரைக் கொண்டாடினார். தம் தந்தையான நரசிம்மதாசருக்கு சுமதீந்திர ஸ்வாமிகள் செய்த அருளையும், சத்யபூர்ண தீர்த்தர் தம் தந்தையை நோக்கி – நீங்கள் பராவசு கந்தர்வரின் அம்சம் என்று புகழ்ந்த சம்பவத்தையும் பாடலாக வடித்திருக்கிறார். சத்யபோத தீர்த்தரின் மகிமைகளை அற்புதமாக வர்ணித்திருக்கிறார்.

'ரங்க நின்ன கொண்டாடுவ மங்களாத்மர, சங்கசுகவித்து காயோ கருணா சாகரா' என்னும் தாசரின் பாடல் அனைவருக்கும் பிடித்தமானதாகும். ஞானிகள் எதன்மேலும் பற்றற்று ஒரு துறவியைப் போல் இருப்பார்கள். ஊமையைப் போல, செவிடரைப் போல, ஆசைகளைத் துறந்த அவர்கள், தங்களுக்குக் கிடைக்கும் பாராட்டு / புகழ்களை பெரிதுபடுத்துவதில்லை. அழுவார்கள், சிரிப்பார்கள், ஸ்ரீஹரியை நினைத்து ஆடுவார்கள். ஏழ்மை நிலையினை அடைந்தாலும் ஸ்ரீஹரியின் பாதங்களில் பக்தியுடன் விழுவதை அவர்கள் நிறுத்துவதில்லை.

திருப்பதி ஸ்ரீனிவாசனைக் குறித்து பற்பல பாடல்களைப் பாடியுள்ளார் தாசர். 'தொட்டவர காய்ததேனரிது, பரம தட்டரனு காயுவுதே பிருது' என்று வேண்டிக் கொள்கிறார்.

**பலவிது பாள்துதக்கெ**

தத்வங்களை சொல்லியவாறு வாழ்க்கையின் பொருளை விளக்கக்கூடிய, ஜகன்னாததாசரின் பலவிது பாளுதக்கே கிருதி மிகச் சிறந்த ஒரு கிருதியாகும். அனைவருக்கும் ஒரு சிறந்த வழிகாட்டியான பாடல் இது. 'பார்த்தசகன விமலவார்த்தே கீர்த்திசதே குவார்தெயிந்த வியர்த்த களெவரேனோ காலவ' (ஸ்ரீகிருஷ்ணனின் கதைகளைப் பற்றி பேசாமல், வீணாக காலத்தைக் கழிப்பாரோ யாரும்?) என்று கேட்கும் தாசர் 'ஸ்வோஜித கர்மகளாசரிசுத பலு நீசரல்லிகெ போகி யாசிசதே – கேசரவாஹ சராசர பந்தக மோசகனஹுதெந்து யோசிசுதிப்புதே பலவிது பாளுதக்கே' என்று வாழ்க்கையின் உண்மையான பொருளைச் சொல்கிறார். 'பிகித கண்டதிம் த்ருக் பாஷ்பகளிம் நகெமுகதிம் ரோமகளொலிது – மிகெ சந்தோஷதிம் நெகெதாடுத நான்முகனய்யன பொகளி ஹிக்குவுதே' என்று மேலும் கூறுகிறார்.

**தத்வசுவ்வாலி**

த்ரிபதி என்னும் நுடியில் இயற்றப்பட்ட தாசரின் தத்வசுவ்வாலி மிகவும் அற்புதமான கிருதியாகும். தமது மருமகளான கோபம்மாவிற்கு மங்களம் / மன அமைதி உண்டாகட்டும் என்பதற்காக தாசர் இயற்றிய கிருதி என்று கருதப்படுகிறது. மத்வ மத தத்வங்கள் இதில் நிரம்பியிருக்கின்றன. கணபதி, நவக்கிரகங்கள், அக்னி, வாயு, ஹனும, பீம, மத்வ, துளசி, ருத்ர, ஸ்ரீ-பூ-துர்கா, ருக்மிணிவிலாச, ஸ்ரீகிருஷ்ண ஸ்துதி, தசாவதார வர்ணனை, வெங்கடேச ஸ்தோத்திரம், தேவதா ஸ்தோத்திரம் ஆகியவற்றுடன் நம் நல்வாழ்விற்கான நற்செய்தியும் இதில் உண்டு. 'ஓடிஹோகுவ மடிய மாடி தணெயலு பேட, நோடு சர்வக்ஞ ஹரிரூப, ஹரிரூப நோடி கொண்டாடி சுகியாகோ மனவுப்பி' என்று ஸ்ரீஹரியை மறந்தால் அதுவே நரகம்; நினைத்தால் அதுவே ஸ்வர்க்கம் என்கிறார் தாசர்.

200க்கும் மேற்பட்ட பாடல்கள், தத்வசுவ்வாலிகள், உகாபோகங்கள், சுளாதிகள் போன்ற அபூர்வமான கன்னட கிருதிகள் மட்டுமல்லாது ஸ்ரீசத்யபோத பஞ்சரத்ன என்னும் சமஸ்கிருத ஸ்லோகத்தையும் தாசர் இயற்றியிருக்கிறார். ஸ்ரீவரதேந்திர பஞ்சரத்ன என்னும் ஸ்லோகத்தையும் தாசர் இயற்றியிருக்கிறார் என்று கருதப்படுகிறது. ஸ்ரீகிருஷ்ணசரித்ரே, தசாவதார ஸ்தோத்திரம், ருக்மிணி விலாஸ, ஸ்ரீனிவாச ஸ்தோத்திரம் ஆகிய சிறு காவியங்களையும் தாசர் இயற்றியிருக்கிறார்.

**ஹரிகதாம்ருதசாரம்**

ஜகன்னாததாசரின் ஆகச்சிறந்த கிரந்தம் என்று சொன்னால் அது ஹரிகதாம்ருதசாரம். வியாசராஜர், வாதிராஜர், புரந்தரதாசர் மூவரும் தாசரின் கனவில் வந்து அனுமதியளித்து, அவருக்கு அருளி, அதன்மூலம் இவர் இயற்றிய கிரந்தமே ஹரிகதாம்ருதசாரம். இதில் ஸ்ரீஹரியின் சன்னிதானம் இருக்கிறது. ஸ்ரீஹரியின் கதை அங்கும் இங்குமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தத்வங்கள், பக்தி, ஞானத்தைப் பற்றி விவரிக்கப்பட்டிருக்கிறது. சித்தாந்தத்தின் சாரம், வாழ்க்கையின் நிஜமான பொருள் இதில் உள்ளது. ஆகையால் ஜகன்னாததாசர் இந்த கிரந்தத்தை ஹரிகதாம்ருதசாரம் என்றே அழைத்தார். ஸ்ரீஹரியானவர் நற்குணங்கள் நிறைந்தவர் மற்றும் தோஷங்கள் இல்லாதவர் என்று இதில் விளக்கப்பட்டுள்ளது. நாம் வாழ்ந்துகொண்டிருக்கும் இந்த உலகம் சத்தியம் (நிஜம்), பஞ்சபேதம், தேவதைகளின் தைத்யர்களின் தாரதம்யம், மோட்சத்திற்கான வழி, அதற்கான விவரம், ஸ்ரீஹரியைக் குறித்து உபாசனைக்கிரமம், பக்தியின் சக்தி ஆகிய அபூர்வமான விஷயங்கள் இதில் அடங்கியிருக்கின்றன.

அனுக்ரமணிகா தாரதம்ய என்னும் வெறும் ஐந்து ஸ்லோகங்களே இருக்கும் சிறிய சந்தியும் இதே கிரந்தத்தில் 63 ஸ்லோகங்களைக் கொண்ட கல்ப சாதனா சந்தி மிகப் பெரிய சந்தியாக இருக்கிறது. பாமினி ஷட்பதி என்னும் நுடியில், 32 சந்திகளில் இயற்றப்பட்டிருக்கும் இந்த கிரந்தத்தில் மெட்டு, பாணி, நடை, அமைப்பு, எளிமை, கம்பீரம் ஆகியவை சிறப்பாகக் கையாண்டிருப்பதோடு, அபூர்வமான சித்தாந்தத்தின் விஷயங்களைக் கொண்ட ஹரிகதாம்ருதசாரம் கன்னட கிரந்தங்களில் மிக உயர்ந்த இடத்தைப் பிடித்திருக்கிறது. இது சாஸ்திரம் என்றால் சாஸ்திரம், காவியம் என்றால் காவியம், காவிய சாஸ்திரம் என்றால் காவிய சாஸ்திரம். இந்த கிரந்தத்தில் பக்திரசம் மிகவும் அதிகமாக இருக்கிறது. கன்னட மற்றும் சமஸ்கிரும் இரண்டையும் கலந்து எழுதப்பட்ட உத்தம கிரந்தம் இது. வேத புராணங்களில் சொல்லப்பட்ட விஷயங்களே இதில் உள்ளது. தானாக நினைத்து கற்பனையில் எழுதப்பட்ட கிரந்தம் அல்ல இது.

கன்னடத்தில் எழுதப்பட்ட கிரந்தமான ஹரிகதாம்ருதசாரத்திற்கு, சமஸ்கிருதத்தில் உரை எழுதுவதற்கு பலர் நான் நீ என முந்தி வந்து, அப்படியொரு உரை எழுதிய வரலாறு வேறெந்த கிரந்தத்திற்கும் காணக்கிடைக்காதது. அப்படிப்பட்ட பெருமை ஹரிகதாம்ருதசார கிரந்தத்திற்கு மட்டுமே சொந்தமானது.

**ஹரிகதாம்ருதசாரத்தின் உரைகள்**

கன்னட மொழியிலேயே இதற்கான உரைகள் பல எழுதப்பட்டிருக்கின்றன. ஆயிரம் வருடங்களுக்கு முன் இயற்றப்பட்ட மூல கிரந்தங்களுக்கே, விரலை விட்டு எண்ணும் அளவிற்கான உரைகள் உள்ள இந்த நிலையில், வெறும் இருநூறு ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட கிரந்தத்திற்கு அதிகமான உரைகள் வந்திருப்பது மிகவும் மகிழ்ச்சியான விஷயம் ஆகும். ஜம்புகண்டி வாதிராஜாச்சாரியார் எழுதியிருக்கும் ‘வியாசதாச சித்தாந்த கௌமுதி’ மற்றும் தாமிரபரணியர் என்றே புகழ்பெற்ற பதார்த்த சந்திரிகா – இவை

சமஸ்கிருத உரைகள் ஆகும். மற்றும் இன்னும் வெளிவராத சமஸ்கிருத உரைகளை குரு ஜகன்னாததாசர் எழுதியிருக்கிறார்.

ஹரிகதாம்ருதசாரத்தின் சம்ஸ்கிருத உரைகளின் முக்கியமானது சங்கர்ஷண உடையாரின் உரையாகும். இது மிகவும் விளக்கமாக எழுதப்பட்டுள்ளது. இது மிகவும் பழமையான உரையும் ஆகும். உத்தராதி மடாதீசராக இருந்த சத்யபராயண தீர்த்தரிடமிருந்து சன்யாச ஆசிரமம் ஏற்றுக்கொண்ட சங்கர்ஷண உடையர், தாம் ஒரு சன்யாசியாக இருந்தாலும் ஒரு கிருஹஸ்தர் எழுதிய கன்னட கிரந்தத்திற்கு விளக்க உரை எழுதி ஒரு புதிய சம்பிரதாயத்தையே துவக்கிவைத்தார். கமலாபதி விட்டலதாசர் 'பாவதர்ப்பண' என்னும் ஒரு சுருக்கமான உரையை எழுதியிருக்கிறார். பத்பனாபதாசர் எழுதியிருக்கும் பாவபிரகாசிகா உரையானது மொத்த கிரந்தத்தின் பொருள் மற்றும் உரை எழுதி, மிகச்சிறந்த உரை என்று போற்றப்படுகிறது. குரு யோகித்யேய விட்டலா என்பவர் எழுதிய கன்னட உரையும் மிக அற்புதமாக உள்ளது. திரௌபதீச-பதி-விட்டலா என்பவர் எழுதிய உரையானது முதல் பதினான்கு சந்திகளுக்கு சுருக்கமான உரையாக உள்ளது. லிங்கசுகூரின் வரதேந்திர ஹரிதாச சாகித்ய மண்டல மூலமாக ஆறு பாகங்களாக வெளிவந்திருக்கும் பஞ்சரத்ன பிரகாசிகா கிரந்தம் மக்களுக்கு மிகப்பிடித்த உரையாக இருக்கிறது. பிரபலமான பண்டிதரான பிரபஞ்சனாசாரியர் எழுதியுள்ள உரையானது மிகவும் அழகான பொருளுடையதாக இருக்கிறது. தத்வங்களை நிரூபித்து, தாசரின் இதயத்தை நன்றாக அறிந்து மிகவும் அழகாக எழுதப்பட்ட உரையாக இருக்கிறது இது.

**பல-ஸ்ருதிகள்**

ஹரிகதாம்ருதசாரத்திற்கு கர்ஜிகி தாசர் பல-ஸ்ருதி எழுதிய விதமே ஒரு சுவாரசியமான சம்பவம் எனலாம். முழுவதாக தனது கிரந்தத்தை எழுதிய பிறகு, அதன் பல-ஸ்ருதியைப் பற்றி சிந்தித்தபோது, தாசரின் கனவில், இந்த கிரந்தத்திற்கு பல-ஸ்ருதியை வேறொருவர் எழுதுவார் என்றும், ஹரிகதா சமயத்தில் இந்த கிரந்தத்திற்கு சரியான பொருள் சொல்லும் ஒருவரே இந்த பல-ஸ்ருதியை எழுதுவார் என்றும் ஒரு குரல் கேட்டது. மந்திராலயத்தில் தாசர் சேவை செய்யும்போதும் இதே கனவு மறுபடி வந்தது. பிறகு தனது பயணத்தில் தாசர் மற்றும் அவரது சிஷ்யரான பிராணேச தாசர் இருவரும் கர்ஜிகி கிராமத்திற்கு வந்தனர். அந்த கிராமத்திலேயே பெரிய வீடான தாசப்பனின் வீட்டிற்கு இருவரும் வந்தனர். சிறிதளவும் ஆசார, அனுஷ்டானங்கள் தெரியாத தாசப்பா, வீட்டிற்கு வந்த இரு தாசர்களையும் பார்த்து கோபப்பட்டார். தாசப்பனின் மனைவி கண்ணீருடன் - இவ்வளவு நாள் உங்களின் நடவடிக்கைகளைப் பற்றி நான் கவலைப்படவில்லை. இன்று ஒரு நாளாவது இந்த இரு மகானுபாவர்களுடன் இருந்து அவர்களை வணங்கி அவர்களின் ஆசியை வாங்குங்களேன் என்றார். ஜகன்னாததாசரின் பார்வை தாசப்பன் மேல் விழுந்த அந்தக் கணமே அதில் கண்ட தேஜஸ்ஸினை கண்டு பயந்தார். பின் குளித்துவந்து பூஜையை தரிசித்தவாறு அமர்ந்தார். ஜகன்னாததாசர் மிகவும் அன்புடன் அவருக்கு ஸ்ரீஹரியின் தரிசனத்தை செய்வித்தார். தீர்த்தம் கொடுத்தார். ஜகன்னாததாசரின் அமிர்த-கையிலிருந்து வந்த தீர்த்தத்தைக் குடித்த தாசப்பனின் பாவங்கள் அனைத்தும் சுட்டுப் பொசுங்கின. அந்த மகானுபாவரின் தரிசனத்திலேயே தாசப்பனின் மனது மாறுதல் அடைந்தது.

அடுத்த நாள் கர்ஜிகியின் பாண்டுரங்க விட்டலனின் கோயிலில் ஜகன்னாததாசரின் உபன்யாசம் ஏற்பாடு ஆகியிருந்தது. பண்டிதர்கள், பாமரர்கள் அனைவரும் வந்து மகிழ்ச்சியுடன் அமர்ந்திருந்தனர். மங்களாசரணத்துடன் உபன்யாசம் துவங்கியது. அஜாமிளனின் கதையை சொல்லியவாறு ஜகன்னாததாசர், தாசப்பனைப் பார்த்து இந்தப் பாடலை பாடினார்.

# 1. வாழ்க்கைச் சரிதம்

சிரிரமண தவசரண தொரகுவுது ஹ்யாங்கின்னு
பரமபாபிஷ்ட நானு |ப|

நரஹரியெ நின்ன நாமஸ்மரணெ மாடதெ
நரகக்கெ குரியாதேனோ தேவ |அ.ப|

கெரெபாவி தேவாலயவ கெடிஸி திவ்ய
ஹிரிதாகி மனெ கட்டிதெ
நெரெ நடெவ மார்கதலி அரவட்டிகெடளனு
தரதரனெ பிச்சி கொட்டிதெ
பரமசம்ப்ரமதிந்த அரளிய மர கடிஸி
கொரெஸி பாகிலமாடிதெ
வரமந்திரவ முகிஸி ஹருஷ சித்ரவ பரெஸி
பரிபரிய சௌக்ய சுரிவெ மெரெதெ |1|

ஹொசமனெய கண்டு பலுஹஸிது பூசுரரு பரெ
கொசரிஹாகுத தப்புத
ஷஷிமுகியெ பாரெந்து அவளன்னு பண்ணிஸி
ஹஸனாகி அவளொலிசுத
தசமி ஏகாதசி த்வாதசி தினத்ரயதி
அசன எரடொளுத்தம ரமிசுத சதத |2|

ஸ்னான சந்த்யான ஜப தபவனு மாடதெ
பானுகர்க்யாவனு கொடதெ
ஸ்ரீனிவாச நின்ன ஆனுசூர்யக பூஜெ
நானொந்துக்ஷண மாடதெ
ப்யானெ பந்தந்தாகி ஹீனஜனர கைலி
நானா விதான்ன திந்தெ
தீனத்வ தலித்து தானதர்மத மாடதெ
ஷ்வானனந்ததி சிரிசிதெ பிடதெ |3|

சாகல்யதிந்த சாலிக்ராமகபிஷேக
ஆகள்ஹாலலி மாடதெ
நால்கெண்டு நாமிகளு சாகி மனெயலி பதுக
பேகெந்து ஹால ஹோமிதெ
காகுபுத்திகளிந்த குடுகுடி நஷ்யபுடி
ஹாகி பங்கிய சேதிதெ
லோகநிந்தகனாகி பாதககெ கைஹச்சி அ
நேக ஜோஜுகளாடிதெ பிடதெ |4|
பாதராயணக்ருத பாகவத கேளுவுதகெ
ஆதரவு புட்டலிப்ப
வாதிகள மத ஜரிது மத்வசித்தாந்தத
ஹாதிகெ ஹொகலிப்ப
ஷோதிசித சின்னக்கெ சுமராத வைஷ்ணவர
பாதக்கெ பீளலில்ல
வேத பாஹ்யரிகெரகி அபசவ்யமனனாகி
ஓதிகொண்டேனு இதெல்ல சல்ல |5|

உத்தம பிராமணர விருத்தியனெ தெகெஸி பிரம்ம
ஹத்யகாரனு எனிஸிதெ
மத்தெ முஞ்செ மதுவெய சமயக்கெ நா ஹோகி
சத்த சுத்தியனெ பேளிதெ
வித்தவித்தவர சென்ஹ்ருத்தி தூதர களுஹி
குத்திகெயனெ கோய்ஸிதெ
ஹத்து ஜனரென்ஹணகெ நித்ய அல்ஹொடெயுதிரெ
ம்ருத்யுதேவதெ எனிஸிதெ பிடிதெ |6|

க்ஷிதியொளகெ உன்மாரு ஹிதவபயசுவரெனகெ
கதியாரு பேளோ கொனெகெ
சதத தவ த்யானதல்லிரதனாகி இருவந்த
மதிபாலிசய்ய பேக
பதிதபாவனனெம்ப பிருது அவனிய ம்யாலெ
ச்ருதி சாருதிதெயோ ஹீகெ
ஷிதிகண்டனுத ஜகன்னாத விட்டல நின்ன
நுதிஸி மரெஹொக்கெனோ ஹரியெ தொரெயெ |7|

இந்தப் பாடலின் ஒவ்வொரு நுடியையும் கேட்ட தாசப்பா மற்றும் அவரது மனைவி இருவரும் அதன் பொருளை விளக்கிக்கொண்டு, அழத்துவங்கினர். கண்ணீர் ஆறுபோல் பெருகி ஓடத்துவங்கியது. தாசரின் உபதேசத்திற்கு தாசப்பா செவிசாய்த்தார். பார்க்கக்கூடாதவற்றைப் பார்த்து, செய்யக்கூடாதவற்றை செய்து, தான் இந்தப் பிறவியை வீணடித்துவிட்டேனே என்று மருகினார். அவரின் துயரத்தைக் கண்டு பிராணேசதாசர் அவரைப் பார்த்து கீழ்க்கண்ட பாடலைப் பாடினார்.

ஆதத்தாயின்னாதரு ஒள்ளே ஹாதி ஹிடிஸோ பிராணி
ஈ துர்னடதிந்தொதரிஹ பரதி மோதெந்திகு காணே

நீனா சதீதன தொளானவரத ஹுளாகி இருவெல்லோ
ஹலா பிடிது விதி குலாசரணெ பிடெ பலா தகுவரெல்லோ
ஸ்தளாஸ்தளரியதெ கலாபமாடதெ அக கொளாகுவது சல்லோ
எலா கேளுவம் ஷிலாமாத்ரனீ கெலாஹ பகெ இல்லோ |1|

ஷிலாதி விக்ரஹ தளாஸெ ஹரியம்பெலா கேவல சுள்ளோ
சலா ப்ரதிமெ பத களார்சிசதலெ மலா தினுதிஹ்யல்லோ
களா பிடதிரெ அனிளான ஹரி மனி மொளாகிஹதல்லோ
நளா பரத முக இளாண்மரந்ததி பலா யெனிஸிலில்லோ |2|

பிலா சேரி தலி கெளாகி தபிசலு பலாலேசிதில்லோ
களாரிதின பிம் ஜலா கொள்ளெ நெம் பலா மாடலில்லோ
பலாதரத லிம் துலாதி ஸ்னான மொதலாத ப்ரதமல்லோ
பலாதினுத ப்ராணேஷவிட்டலன பலா களிஸி கொள்ளோ |3|

இதுவரையில் தான் வாழ்ந்த வாழ்க்கையை மறந்து, அந்த பாவங்கள் போய்விட்டன என்று கருதிய தாசப்பா, இனி தனது புதிய பிறவிக்கு தான் தயாராகிவிட்டேன் என்று தீர்மானித்தார். அப்போது ஜகன்னாததாசர் தனது ஹரிகதாம்ருதசாரத்திலிருந்து சில ஸ்லோகங்களைச் சொல்லி, பண்டிதர்கள் யாராவது இதற்கு பொருள் சொல்வீர்களா என்று கேட்க, யாரிடமிருந்தும் சரியான விடை வரவில்லை. அப்போது தாசப்பா மிகுந்த

மரியாதையுடன் எழுந்து நின்று அதற்கான சரியான விடையினை அளித்தார். எதுவும் அறியாமலிருந்த அவன் மனதை, அறிவை திருத்தும் பணியினை ஜகன்னாததாசர் அங்கேயே மேற்கொண்டார்.

**தாசப்பா தற்போது ஹரிதாசன் ஆனார்**

ஜகன்னாததாசர் கர்ஜினி தாசப்பனுக்கு ஶ்ரீதவிட்டலா என்று அங்கிதம் கொடுத்தார். 'ஹரிதாசன் ஆகு' என்றார். குருகளின் பாதங்களில் விழு என்றார். இந்த உடல் நிரந்தரமல்ல, சம்சார வாழ்க்கை தற்காலிகமானது என்று உபதேசித்தார். ஹரிகதாம்ருதசாரத்திற்கு ஶ்ரீதவிட்டலதாசர் பல-ஸ்ருதி எழுதினார். தத்துவம், சத்தியம் ஆகியவற்றின் மகிமைகளை விளக்கும் சந்தியாக இவரது பல-ஸ்ருதி பிரபலமாயிற்று. இது த்வைத சித்தாந்தத்தின் களஞ்சியம், பண்டிதர்களுக்கெல்லாம் வேதாந்தத்தின் பொருளை விளக்கும் கண்ணாடி, தாசசாகித்யத்தின் நியாயசுதா என்று ஹரிகதாம்ருதாசரத்தின் சிறப்புகளை விளக்கினார்.

இவ்வளவு அருமை பெருமைகளைக் கொண்ட ஹரிகதாம்ருதசார கிரந்தம், ஜகன்னாததாசரின் அறிவு, திறன், ஞானம் ஆகியவற்றின் சாட்சியாக இன்றும் நின்றிருக்கிறது. ஶ்ரீஹரி அனைத்து இடங்களிலும் நிலைத்திருக்கிறார் என்பதை தாசர்

எல்லி கேளிதரல்லி நோடித<br>
ரல்லி பேடிதரல்லி நீடித<br>
ரல்லி ஓடிதரல்லி ஆடிதரல்லி இருதிஹனு ।<br>
பல்லிதரிகதி பல்லிதனு சரி<br>
யில்ல இவகாவல்லி நோடலு<br>
குல்ல மானவரொல்லன பிரதிமல்ல ஜகக்கெல்ல' ||

என்று பாடினார். மேலும்,

ஆவ குலதவனாதடேனி<br>
ன்னாவ தேசதொளித்தடேனி<br>
ன்னாவ கர்மவ மாடலேன்னின்னாவ காலதலி ।<br>
ஶ்ரீவரன சர்வத்ரதலி ச<br>
ம்பாவிசுத பூஜிசுத மோதிப<br>
கோவிதரிகுண்டேனு பய துக்காதி தோஷகளு ||<br>
என்று பாடினார்.

ஹரிகதாம்ருதசாரத்தின் மகிமை என்னவென்றால் சென்ற நூற்றாண்டிலேயே இந்த கிரந்தத்தின் உரையானது தெலுங்கு, தமிழ், மராத்தி ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

பிரம்மாண்டமே ஶ்ரீஹரியின் பூஜை மண்டபம், பூமண்டலமே பீடம், சூரிய சந்திரர்களே தீபங்கள், ஆகாயமே குடை, மழையே அபிஷேகம், மழையின் வாசமே தூபம், நிலத்தில் விளைந்த தான்யங்கள் அனைத்தும் நைவேத்தியம், மின்னலின் வெளிச்சமே மங்களாரத்தி, பால்வெளியின் லட்சோபலட்ச நட்சத்திரங்களே லட்ச-தீபோத்ஸவம், இடி சத்தமே மங்கள வாத்தியம் - இப்படி சிந்தித்து எழுதியவரே ஜகன்னாததாசர். கன்னட சாகித்யத்தில் பக்தி மார்க்கத்திற்கு புதிய ஒளி பாய்ச்சிய த்ரிவிக்ரம ரூபமே ஜகன்னாததாசர்.

ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரம் கன்னடிகர்களின் காவியாம்ருதம், கேட்பவர்களுக்கு கர்ணாம்ருதம், த்வைத சித்தாந்தத்தின் திவ்யாம்ருதம். புரந்தரதாசர் ஹரிதாச கீர்த்தனைகளின் குலகுரு என்றால், ஜகன்னாததாசர் தாச குருகுலத்தின் சிகரம். கன்னட

மொழி இருக்கும்வரைக்கும், கன்னட பக்தி சாகித்யத்தின் வைஜயந்தியாக ஹரிகதாம்ருதசாரம் இருக்கும். கர்னாடகத்தின் பக்தர்களின் வீடுகளில், பக்தர்களின் மனங்களில் பக்தி என்னும் பாகிரதியை ஓடவைத்தவர் ஜகன்னாததாசர்.

ஸ்ரீஹரியின் திவ்ய சான்னித்யத்தை காவியரூபத்தில் இயற்றிய மகிமை ஜகன்னாததாசரையே சேரும். ஹரிகதாம்ருதசாரத்தை படிப்பவர்களை தனது கற்பனைத்திறனால் கட்டிப்போட்டு, அச்சுதனைப் பற்றி அதிகமாக தெரியவைத்து, அவரைப் பற்றி பாட வைத்தார். வட்டார மொழியில், சாஸ்திர புராணங்களின் விஷயங்களை, மிகச் சரளமாக பொழிய வைத்தார்.

ஹரிகதாம்ருதசாரத்தின் முப்பத்தியிரண்டு சந்திகளும், ஸ்ரீஹரி என்னும் சிந்து-சயனனிடம் அழைத்துச் செல்லும் படகுகளைப் போன்றதாகும். இதற்கு பல-ஸ்ருதி எழுதியிருக்கும் ஸ்ரீதவிட்டலர் ‘ஹரிகதாம்ருதசார நவரச பரித பஹுகம்பீர ரத்னாகர ருசிர ஸ்ருங்கார சாலங்கார விஸ்தார’ என்று சொன்னது மிகச்சரியான விஷயமாகும்.

ஹரிகதாம்ருதசாரம் கன்னட சாகித்யம், சம்ஸ்கிருத நடையில் ஒரு முக்கிய மைல்கல். இதில் உள்ள உவமான உவமேயங்கள், புதிது புதிதான விளக்கங்கள், வாழ்க்கையின் ரகசியங்கள் ஆகியவற்றை விளக்குவதில் ஜகன்னாததாசர் மிகச் சிறந்தவர். த்வைத சித்தாந்தத்தின் சத்தியம், ஹரிபக்தியின் தத்துவம், கன்னட சாகித்யத்தின் மகத்துவம் ஆகிய மூன்றின் த்ரிவேணி சங்கமமாகிருக்கிறது ஹரிகதாம்ருதசாரம்.

**ஹரிகதாம்ருதசாரத்தின் சமர்ப்பணம்**

ஸ்ரீவரதேந்திர ஹரிதாச சாகித்ய மண்டலியவர்கள் வெளியிட்டிருக்கும் ஹரிகதாம்ருதசாரத்தின் மூலப் புத்தககத்தின் இறுதியிலும், பஞ்சரத்ன பிரகாசிகா வெளியிட்டிருக்கும் உரையின் இறுதியிலும் ‘அர்ப்பண’ கத்யம் வெளியிடப்பட்டிருக்கிறது. ஜகன்னாததாசர் தமது ஹரிகதாம்ருதசாரத்தை நர நாம சம்வத்சரம் புஷ்ய சுத்த சப்தமி சனிக்கிழமை சுப நட்சத்திரத்தில் சமர்ப்பணம் செய்திருக்கிறார் என்று இந்த கத்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நர சம்வத்ஸரம் என்றால் கிபி 1796ல் ஹரிகதாம்ருதசார கிரந்தம் முடிந்திருக்கிறது. ஹரிகதாம்ருதசாரத்தின் இறுதியில் வரும் சமர்ப்பண கத்யத்தில் வரும் வரிகள் இப்படியாக இருக்கிறது.

அஸ்மத் குருகளந்தர்யாமி, சர்வகுருகளந்தர்யாமி, ரமாபிரம்ம ருத்ரேந்திராந்தர்யாமி, சர்வந்தர்யாமி, சர்வரிஷ்யர்ந்தர்யாமி, சர்வபித்ருந்தர்யாமி, சர்வமித்ராந்தர்யாமி, மதந்தர்யாமி, மமஸ்வாமி சர்வஸ்வாமி சர்வசேஷ்டப்ரத ஸ்ரீஹயக்ரீவ பரசுராமாத்மக கிருஷ்ணவேதவியாஸ கபில தத்தாத்ரேய ரிஷப மஹிதாச அச்யுதானந்த கோவிந்த அனிருத்த பிரத்யும்ன சங்கர்ஷண வாசுதேவ நாராயணாதி பஞ்ச ரூபாத்மக விஸ்வ தைஜஸ ப்ராக்ஞ துர்ய ஆத்மாந்தராத்ம பரமாத்ம ஞானாத்ம அஷ்டரூபாத்மக மத்ஸ்யாதி தசரூபாத்மக கேசவாதி சதுர்விம்சதி ரூபாத்மக அஜாதி சோடஷ கபிலாதி த்ரிம்சதி ஹம்ஸாதி அஷ்டாதச விஸ்வாதி சஹஸ்ராத்மக அஜிதாதி அனந்தரூப பராதி பஹுரூபாத்மக பிரணவ ப்ரதிபாத்ய வேதசாஸ்திர புராணோபநிஷத் பிரதிபாத்ய யுக வருஷ அயன ருது மாஸ பக்ஷ சங்க்ரமண தித் வாசர நட்சத்திர களா காஷ்ட த்ருடி லவ நிமிஷ பிரதிபாத்ய ஆணுகால மஹாகால வியாப்த பிரம்மாண்டாந்தர் பஹிர்வியாப்த ஸ்ரீமத் ஹனுமத்பீம பாரதிரமண ஸ்ரீமதானந்ததீர்த்தந்தர்கத ஸ்ரீஜகன்னாத விட்டலார்ப்பணமஸ்து.

சந்தி 32, 986 ஸ்லோகங்களுடன் கக்ஷதாரதம்ய சந்தி முடிந்தது. ஸ்ரீகுருமத்வேஷ ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து. நள நாம சம்வத்ஸர புஷ்ய சுத்த சப்தமி சனிக்கிழமை சுப நட்சத்திரம் முடிவு.

**இறைவனடி சேர்தல்**

ஜகன்னாததாசருக்கு 81 ஆண்டுகள், 1 மாதம், 22 நாட்கள் ஆயிற்று. சாலிவாகன சக 1731 சுக்ல நாம சம்வத்சரம் பாத்ரபத சுக்ல நவமி ஞாயிற்றுக்கிழமை மூலா நட்சத்திரம். அவரது சிஷ்யர்களான பிராணேசதாசர், ஸ்ரீதவிட்டலதாசர் ஆகிய பலர் தாசருடனேயே இருந்தனர். ஜகன்னாததாசரின் 'தாசோஹம் தவ தாசோஹம்' பாடலை அனைவரும் பக்தியுடன் பாடிக்கொண்டிருந்தனர். அனைவரையும் ஒருமுறை வாஞ்சையுடன் பார்த்து பிறகு, ஜகன்னாததாசர் இறைவனடி சேர்ந்தார். அந்த சமயத்தில் ஸ்ரீதவிட்டலர் இயற்றிய பாடல் பின்வருமாறு.

தெரளிதரு ஸ்ரீ ஜகன்னாத தாசார்யரு ||ப||

சிரிபதியஸ்மரிஸி ஹரிபுரகெ ஹருஷதலி ||அ.ப||

வரசுக்ல வத்ஸரத பாத்ரபத சிதபக்ஷ | ஹரிவார நவமியல்லி
சுரசித்த சாத்ய சன்முனிகணார்சிதபாத | ஹரியெ பரனெந்தெனுதலி |
தரணியனு த்யஜிஸி பஹுமான பூர்வகவாகி |
பெரெது சுரசந்தணியலி
பரமார்தவைதி முனஹரிய பாததொளிட்டு |
வர விஷ்ணு தூத வைமானிகர ஔகூடி ||1||

அதி ப்ரேமிகளு ஹசன்முகரு தய பீருவரு |
கதி தூரரிவரு ஜகதி | மிதி மீரி ஸ்ரீ ஹரிய |
கதெய நானா பரியல்லி | அதிஷயதி பேளி இதகெ |
சததவு சரணர்கெ | கதியாகுவந்தெ சத்பதவிடிஸி கருணதிந்த
ஹிதவந்தரெனிஸி சம்மதவாகி ஸர்வரிகெ |
மதியோரி கொட்டு ஸத்கதிகோசுகவாகி ||2||

ஆசரணெயல்லி ஒந்தர களிகெ பிடதெ பலு | கேசராரூட ஹரிய |
சோசிதாராதனெய மாடி மரெயதெ மஹா |
வைசித்ர்யவன்னு தோரி ஈ சராசரதி சங்கீத சாஹித்யதலி |
ப்ராசுர்யவந்தரெந்தெனிஸி |
ஆ சதுர்தஷ புவன பதி ஸ்ரீத விட்டலன |
யோசனெய பிடதெ மங்கள சப்த வாத்யதிம் ||3||

தாம் தாசரைக் கண்ட அந்த தருணத்தை, மகிழ்ச்சியை அபினவ ஜனார்த்தவிட்டல தாசர் தன் பாடலில் அப்படியே பாடி கொண்டாடியிருக்கிறார்.

ஹரிய புரகெ தெரளிதரு நரு |
ஹரிய ஸ்மரிஸி பவத பாஷ |

ஹரிது ஜகன்னாத தாசவரிய நகுத நகுதலே ||அ.ப||

தரளதனாரப்யவாகி | துருள ஜனர சங்க த்யஜிஸி |
மருளு ஹாளு ஹரடெ தொரெது | சரளதிந்த ஹரிய மஹிமெ
விரள விரளவாகி நெனெசுதலி | சஜ்ஜனரிகெ |
மரளி மரளி ஒரெது பேளுத | ஸ்வோத்து மர |
நெரளிகஞ்சே பாகி நடெயுத | சதத ஹகலு |

இருளு ஹரிய ஸ்மரிஸி ஸ்மரிஸி பாரதந்தெ சிரி |1|

லக்ஷவிட்டு லயத சிந்தனா | ராத்ரியாம |
காக்ஷண அபினவ ஜனார்தனா | விட்டலனல்லி |
தீக்ஷெவிடிது நடெத ராக்ஷண | பகுதியிந்த |
ஈ க்ஷோணி பிட்டு இரதெ தக்ஷேமதிந்த முததி |2|

ஜகன்னாததாசரின் அம்சங்களைக் குறித்து பிராணேஷதாசர் ஒரு பாடல் இயற்றியிருக்கிறார். க்ருதயுகத்தில் ஹிரண்யகசிபுவின் இரண்டாவது மகனான சஹ்லாதனே தற்போது ஜகன்னாததாசராக வந்திருக்கிறார் என்று தெரிவிக்கிறார். இரண்டாவது பிறவியில் ஷல்யராஜன், மூன்றாவது பிறவியில் கொண்டப்ப என்னும் குருபனாக, நான்காவது பிறவியில் புரந்தரதாசர மகனாக, ஐந்தாவது பிறவியில் ஜகன்னாததாசராக வந்திருக்கிறார் என்று தனது 'திளியாரு எந்தெந்திகன்ய' பாடலில் பாடியிருக்கிறார்.

திளியாரு எந்தெந்திகன்ய ரங்க
ஒலித தாசரு ஜகன்மான்ய |ப|

அலவா மஹாத்மரெம்ப புண்யா கீர்திகள நித்ய கேள்வனர தன்ய |அ ப|

ஹிரண்யகசிபுஜ சன்னாத நீவே | எரடனெ ஜன்ம ஷல்யனாத |
குருவாதிராஜரானர்சிஸீதா புரந்தர தாசராயரல்லி உதிசீதா |1|

இதனெந்து ரூபவிதீகந்தெ ப ஹுது ஏளு ஜன்ம முந்தந்தெ |
மோதாபிவ்ருத்திகீனோ அந்தே எம்ப வாதிகளிகிது அந்தெகந்தே |2|

தாசகூட ஸ்மரிகீ மாது ஹலவு தேஷகளல்லி அனுபவவாத்ம
ஈ சுகதாலாபவெல்லாய்தோ ஸ்ரீ பிராணேஷ விட்டலனல்லி ஆய்து |3|

ஜகன்னாததாசர் தமது வீட்டில் அமர்ந்து பாட–பிரவசங்களை செய்துகொண்டிருந்த ஒரு கம்பத்தை, 'ஜகன்னாததாசரின் கம்பம்' என்று இன்றும் விசேஷ பக்தியுடன் பக்தர்கள் பூஜிக்கின்றனர். அந்த கம்பத்திற்கு கவசங்கள் செய்து அணிவித்திருக்கின்றனர். தாசர் பூஜித்துக்கொண்டிருந்த நரசிம்ம சாலிகிராமம், கருடவாகன லட்சுமி நரசிம்ம பிரதிமை, சாலிகிராம மாலை ஆகியவை அங்கு வைக்கப்பட்டிருக்கின்றன. கம்பத்தில் ஜகன்னாததாசர் இருக்கிறார் என்பதைக் குறித்து கமலாபதி விட்டலதாசர் ஒரு பாடல் இயற்றியிருக்கிறார். அது பின்வருமாறு.

அம்புஜாக்ஷி ஸ்தம்பதிஹராரே – யாரெ – ஸாரே |ப|

நம்பி பஜிஸுவ பகுதர மனத
ஹம்பலவ நீடுவரெ நீனே |அ.ப|

சுரதொடெயனோல் பரிபரியல்லே ஷ்வைரியதிம் ராஜிசுவராரே
ஹரிகதாம்ருத கிரந்த ரஜிஸி தரணி சுரருத்தரிஸிதவரே |
புல்லலோசனெ பல்லியா இவ ரில்லிருவ காரணவிதேனே |
புல்லனாபன புடுகலே ப்ரஹ்லாத நனுஜ சஹ்லாதரிவரே |
ஜலஜ துளசி மணிசுமாலிகெ களதி தரிசிஹராரே நீரே |
கலியுகதி கமலாபதி விட்டல நொலிஸி தரெயொளு மெரெயுதிஹ |

***

# 2. ஹரிதாச சாகித்யத்தில்

## ஸ்ரீஜகன்னாததாசரின் பங்கு - டாக்டர் N.K. ராமசேஷன்

கர்நாடக ஹரிதாச சாகித்யத்தில் மானவியின் (ராய்ச்சூர் ஜில்லா) ஜகன்னாததாசருக்கு மிகச் சிறப்பான இடம் உண்டு. இதற்குக் காரணம் தாசரின் பாடல்களில் காணப்படும் அவரது புலமை, ஸ்ருதிக்கு இசைப்பட்டு பாடப்பட்ட அவரது பாடல்கள் ஆகியன. தத்வசுவ்வாலிகளில் தாசர் சமூகத்திற்குக் கொடுக்கும் நற்செய்திகள் மிக அற்புதமானவை. மொத்த ஹரிதாசகூடத்திற்கும் ஜகன்னாததாசரின் மிகப்பெரிய பரிசு – ஹரிகதாம்ருதசாரம். இது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களை பின்பற்றி எழுதப்பட்ட காவியம். இதற்கு பல அறிஞர்கள் உரை எழுதியிருக்கின்றனர்.

சங்கர்ஷண ஒடெயரிலிருந்து இன்றைய அறிஞர்களான டாக்டர் K.M. கிருஷ்ணராவ், டாக்டர். பிரபஞ்சனாசாரியர் என்று பலரும் உரை எழுதியிருக்கின்றனர். ஸ்ரீராமகிருஷ்ணாதி அவதாரங்கள், ரிஷி-யோகிகளின் சாதனைகள் என அனைத்தையும் தாசர் நிரூபித்திருக்கிறார். தனது மனதில் தனது பிம்பரூபியின் தரிசனத்தைப் பெற்று அபரோக்ஷ ஞானிகள் ஆகியிருக்கிறார் ஜகன்னாததாசர் என்பது அவரது பாடல்களில் உள்ள புலமை, விஷயம், ஆழம் ஆகியவற்றிலிருந்து தெரிகிறது. இதய-குகையில் வீற்றிருக்கும் சர்வேஸ்வரனின் வர்ணனை, நாராயண உபநிஷத் மற்றும் இதர உபநிஷத்களிலிருந்து அறியலாம். இதை ஸ்ரீஜகன்னாததாசரும் அறிந்திருக்கிறார்.

பத்மகோஷ ப்ரதீகாஷம் ஹ்ருதயஞ்ச அபிஅதோமுகம் |
அதோனிஷ்ட்யாவிதஸ்யாந்தே நாப்யாமுபரி திஷ்டதி |
தஸ்யா: ஷிகாயா மத்யே பரமாத்மா விவஸ்தித: |
அங்குஷ்ட: மாத்ர: புருஷோ மத்யேஆத்மனி திஷ்டதி |
ஈஷானோ பூத பவ்யஸ்ய நததோ விஜிசுப்ஸைதே ||
வதத்யைதத் || (காடக 2-3-20)

பகவத் சாட்சாத்காரத்தைப் பெற்றவர்களே அபரோக்ஷ ஞானிகள். ஜகன்னாததாசர் இத்தகைய உயரத்தை சேர்ந்தவர்தான். ஸ்ரீஜகன்னாத்தாசரின் வாழ்க்கைச் சரிதத்தை மற்ற பண்டிதர்கள் பேசியிருப்பார்கள் என்று நினைத்து, நாம் அவரது சில கீர்த்தனைகளின் சில பத்திகளைப் பார்ப்போம். தாசர் தாசகூடத்திற்கு ஒரு மணிமகுடம். வியாசகூடத்தில் ஒரு சமஸ்கிருத பண்டிதர். தாசசாகித்யத்தில் பல கீர்த்தனைகள இயற்றியவர். கவிஞரும் கூட. தாசரின் காலம் கிபி 1728-1809. தந்தை நரசிம்மாசார்யர். புகழ்பெற்ற தாசரான பங்க நாமத திம்மண்ணதாசரிடமிருந்து நரசிம்மவிட்டலா என்ற அங்கிதம் பெற்றவர். தாசரின் இயற்பெயர் ஸ்ரீனிவாசாசார்யர். வரதேந்திர தீர்த்தரிடம் கல்வி கற்று, அனைத்து சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்றார். அப்போதே வரதேந்திர பஞ்சரத்ன என்னும் காவியத்தைப் படைத்தார்.

ஒருமுறை அப்போது மானவிக்கு வந்த ஸ்ரீவிஜயதாசரை அவமானம் செய்த காரணத்தால், தீராத வயிற்றுவலி பெற்று, தனது தினப்படி பாட பிரவசனங்களை செய்ய முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டார். மந்திரம், தந்திரம், மருந்து, பிரார்த்தனை என்று அனைத்தும் செய்தும், கடிகாசலம், மந்திராலயம் ஆகிய இடங்களில் சேவை செய்து, பின் குருவின் கட்டளைப்படி சிக்கலபரவிக்குச் சென்று ஸ்ரீவிஜயதாசரிடம் மன்னிப்பு கேட்டார். அவர் தாசரை கோபாலதாசரிடம் அனுப்பினார்.

தம் குருவான விஜயதாசருக்கு அவமானம் ஆயிற்று என்று உபவாசம் மேற்கொண்டிருந்த கோபாலதாசரிடம் ஸ்ரீனிவாசாசார்யர் வந்தபோது, சோள ரொட்டியை செய்து, 'தன்வந்திரி மந்திரத்தை' ஜெபித்து அதை உண்பதற்குக் கொடுத்தார். இதனால் இவரது வயிற்றுவலியும் தீர்ந்தது. ஸ்ரீகோபாலதாசருடன் திருப்பதி யாத்திரைக்குச் சென்றார் ஸ்ரீனிவாசாச்சார். அங்கு ஆசாரியருக்கு மிகவும் ஆரோக்கியம் கெட்டது. குரு விஜயதாசரின் ஆணைப்படி, கோபாலதாசர், ஸ்ரீனிவாசாச்சார்யருக்கு தனது ஆயுளிலிருந்து 40 ஆண்டுகள் தானம் அளித்தார். இது ஒரு மிகவும் அபூர்வமான, ஆச்சரியமான, யோகிகள் மட்டுமே செய்யக்கூடிய சம்பவம்.

ஸ்ரீனிவாசாச்சாரியர், தனது நோயிலிருந்து குணமாகி, தனது கர்வத்தைத் தொலைத்து, தனக்கு தாசதீட்சை கொடுக்குமாறு வேண்டியபோது, கோபாலதாசர் ஆசாரியரை பண்டரிபுரத்துக்குச் செல்லுமாறு பணித்து அனுப்பினார். அனைத்து ஹரிதாசர்களின் ஹரிபக்தர்களின் சங்கம இடம் பண்டரிபுரம். ஸ்ரீவிட்டலனின் கருணைக்கு எல்லையே இல்லை. ஆசாரியர் க்ஷேத்திரத்தின் நதியான பீமரதியில் குளிக்கும்போது, 'ஜகன்னாதவிட்டலா' என்று பெயர் பொறித்த ஒரு மரப்பலகை தண்ணீரில் மிதந்து அவரிடம் வந்தது. அதையே தனது அங்கிதமாக ஏற்ற தாசர் 'தடிகோடினிப விட்டலா, விட்டலய்யா' என்று தனது முதல் பாடலை இயற்றினார்.

திருப்பதில் இருந்தபோது ஸ்ரீனிவாசனே கோபாலதாசரின் உருவில் வந்து தாசருக்கு உணவளித்தான். பண்டரிபுரத்திலும் விட்டலன் தாசருக்கு நல்ல விருந்து படைத்தான். இத்தகைய மகிமை பொருந்தியவர் ஜகன்னாததாசர். தமக்கு உயிர், ஆயுள் அளித்த கோபாலதாசரை புகழ்ந்து பாடும்போது, தமது முந்தைய கதையை விளக்கியிருக்கிறார்

தாசர். அப்படியே இதற்கு காரணமான ஸ்ரீவிஜயதாசரையும், தாசர் புகழ்ந்து பாடியிருக்கிறார். ஜகன்னாததாசர் 81 ஆண்டுகள் இப்புவியில் வாழ்ந்தார்.

ஜகதீதல விக்யாதம் ஜகதாமோத கரணம் |
ஜகதீஷ பதாஸத்தம் ஜகன்னாத குரும்பஜே |
தாசவர்யம் தயாயுக்தம் தூரீக்ருத துராசிஷம் |
ஹரிகதாம்ருதவக்தாரம் ஜகன்னாத குரும்பஜே |
ஜகன்னாதேதி ஜகன்னாதேதி ஜகன்னாதேதி ஸ்மரதி நித்யஷ: |
ஸ்ரீமத் ஹரிகதாம்ருதசாரம் ஜகன்னாத குரும்பஜே |
ஜகன்னாதேதி ஜகன்னாதேதி ஜகன்னாதேதி நித்யஷ: |
ய: சதா ஸ்மரதே ச ஸ்ரீஜகன்னாதம் ப்ரபத்யதே ||

குருஜகன்னாதவிட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்ற ஸ்ரீ கொசிகி ஸ்வாமிராசார்யர் என்பவர் 22 ஸ்லோகங்கள் கூடிய ஸ்ரீஜகன்னாத ஸ்தோத்திரத்தையே இயற்றியிருக்கிறார்.

தாசரது கீர்த்தனைகள்:

ஸ்ரீஹரியின் கருணை என்பதுபோல், பண்டரிபுர விட்டலனின் பிரசாதம் என்பதுபோல், பண்டரிபுரத்தில் பீமரதி நதியில் ஆசாரியார் குளிக்கும்போது, மூன்று முறை மூழ்கி எழுந்தார். மூன்றாவது முறை மூழ்கியபோது, அவரது தலையில் ஒரு மரப்பலகை தட்டுப்பட்டது. அதில் 'ஜகன்னாதவிட்டலா' என்று எழுதியிருந்ததைக் கண்ட ஆசாரியர், அதையே தனது அங்கிதமாக கொண்டார். இது என்ன மாயமோ என்று தோன்றும். ஆனால் இது ஒரு உண்மையான சம்பவமே ஆகும். ஏற்கனவே அவரிடம் இருந்த கல்வியறிவுடன், தற்போது பக்தியும் சேர்ந்ததால், பாடல்கள் பாடத் துவங்கினார். அந்த பலகையையே தன் தலையின் மேல் தூக்கிக்கொண்டு, நடனமாடியவாறே அவர் பாடிய முதல் பாடல் பின்வருமாறு:

த$^1$ட$^1$கோ$^1$டி$^1$ நிப$^4$கா$^3$ய ஜகன்னாத
விட்டலய்யா விட்டலய்யா ||ப|

ப$^4$ஜிசுவி நின்னனு அஜப$^4$வசுரனுத
ப$^4$ஜகாமரத$^1$ரு கு$^1$ஜனகு$^1$ஷாரி |$^1$
நீ க$^1$ருணிசதெ நிராக$^1$ரிசலுன்ன
நாகு$^3$வராரோ த$^4$யாப$^1$ர மூர்த்தி | 2

ஷரணாக$^3$த$^1$ரனு மொரெவெனெம்ப த$^1$வ
பி$^3$ருது$^3$ க$^4$ணா க$^1$ரிவத$^3$ர ஜகன்னாத
விட்டலய்யா விட்டலய்யா | 3

அந்த மரப்பலகையும் மானவியில் ஜகன்னாததாசரின் வீட்டில் 19ம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி வரை இருந்தது என்றும், பிறகு என்னவாயிற்றோ காணாமல் போயிற்று என்று தாசரின் பக்தர்கள் சொல்வதுண்டு. தாசரின் முதல் பாடலே எவ்வளவு பக்தி, பாவம், அறிவு என இம்மூன்றும் சேர்ந்த ஒரு சங்கமமாக இருக்கிறதல்லவா! விட்டலன், தனது பக்தர்களுக்கு கருணையையும், தனது அருளையும் வாரி வழங்குபவன். தன்னை அடிபணிந்தவர்களுக்கு வேண்டிய வரத்தைக் கொடுப்பது அவனின் வழக்கம். அப்படிப்பட்ட விட்டலன் தாசருக்கு அருளினால் வேண்டாம் என்று சொல்வாரோ?.

'த்வரக்ஷதி கிமன்யை:' (நீ எனக்கு அருளாவிட்டால் நான் என்ன செய்திருக்க முடியும்?). இந்த இரண்டே சொற்களில் எத்தகைய செய்தி? ஸ்ரீவைஷ்ணவ பரம்பரையில் வந்த ஆழ்வார்கள் இப்படி சொல்கின்றனர். 'கம்பத்தில் வந்தவன்'. ஜடமான தூணிலிருந்து வந்த நரஹரி. அவன் மனது வைத்தால் என்னவேண்டுமானாலும் நடக்கும்.

ஜகன்னாததாசர் குதித்து ஆடிப் பாடியவாறே பண்டரிபுரத்து விட்டலனின் ஆலயத்திற்கு வந்தார்.

எந்து$^3$ கா$^1$ம்பே$^3$னோ பாண்டுரங்க மூருதிய |
இந்து$^3$ பா$^3$க$^3$ நிவாஸ நரன ஸாரதி$^1$ய |ப|

ஷடகூ$^1$ர்மரூபிய கிட மானவஹரிய
வடு$^1$ பா$^4$ர்க$^3$வ கா$^1$கு$^1$ஸ்த$^1$ஷட$^1$ க$^1$ம்ஸ த்$^4$வேஷிய
நிடி$^1$லாம்ப3க சஹாய பள கடகாரி பீமா
தடஷாயி ஜகன்னாதவிட்டலனா க்ருதிய ||

ஷட - மத்ஸ்ய ; கிட - காட்டுப்பன்றி / வராகன் ; மானவஹரி - நரசிம்ம ; வடு - வாமன ; பார்கவ - பரசுராம ; காகுஸ்த - ஸ்ரீராம, காகுஸ்த வம்சத்தவன் ; கம்ஸத்வேஷி - கம்சனின் எதிரி ஸ்ரீகிருஷ்ணன் ; நிடில - நெற்றி.

இங்கு தசாவதரங்களையும் வரிசைப்படுத்திப் பாடுகிறார் தாசர். ஏழு பத்திகள் கொண்ட இந்தப் பாடல் பாய்ந்தோடும் நதியைப் போல ஓடுகிறது. தாசர், பண்டரிபுரத்து அரசனை தன் மனமுருகிப் பாடுகிறார்.

க$^1$ண்டே$^1$ பண்டரிராயன சிரி மன: ப்ரியன |ப|

சண்ட$^3$விக்ரம க$^1$ரதண்ட முனிப$^1$கொ$^3$லி
த$^3$ண்டஜாதி$^3$ப ப்ரகா$^1$ண்ட$^3$ சுபீடன ||

மணிமயமுகு[1]டி மதுபனவிரப்யரெ
பணியொளிட்ட கஸ்தூரிதிலக
வனருஹ உபமலோசனயுக[3] சம்ப1கசுனாசவ
குண்டலவிகாசவகத பீன விலாசவ மொகத மந்தஹாசவ ||

முழுப்பாடலும் ஒரு காவியம் என்றே சொல்லலாம். ஒவ்வொரு பத்தியையும் புரிந்துகொள்ள உரை தேவைப்படுவதால், இதிலிருந்து தாசரின் அறிவு, திறமை ஆகியன தெரியவருகிறது. ஆயிரம் பாடல்கள் மற்றும் ஆறு நூறுக்கும் மேற்பட்ட தத்வசுவ்வாலிகளை தாசர் இயற்றியிருக்கிறார். தான் வணங்கிய ஸ்ரீனிவாசன், ஸ்வரூபோத்தாரக குருகளான பரமபூஜ்ய மந்திராலய ஸ்ரீராகவேந்திரர், தம் எதிரே இருந்த தமது வித்யாகுருவான ஸ்ரீவரதேந்திரர் – என அனைவரின் மேலும் பற்பல பாடல்களைப் பாடினார் தாசர். சோதே மடத்தின் ஸ்ரீவாதிராஜர், தாமே தரிசனம் தந்த ஸ்ரீராகவேந்திரர், ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர் இவர்கள் மேலும் பாடல்களைப் பாடியுள்ளார் தாசர். ஸ்ரீவிஜயதாசரை 'ரதுன' என்றே அழைத்து, அந்த ரத்தினம் கிடைத்ததால், தமது வாழ்க்கையே 'பவித்ரமாயிற்று' என்று பாடுகிறார். கோபாலதாசரை 'அபம்ருத்யுவனு ஹரிதே' என்று நன்றியுடன் பாடுகிறார். ஸ்ரீபுவனேந்திர தீர்த்தர், சாவனூரின் ஸ்ரீசத்யபோத தீர்த்தர், தமது வித்யாகுருவான ஸ்ரீவரதேந்திர தீர்த்தரை மனப்பூர்வமாக வணங்கி பாடியிருக்கிறார் ஜகன்னாததாசர்.

'சூரிகுலவர்ய', 'குணரத்னாகர','மருதமதாம்புதி சந்திர' என்றெல்லாம் பாடியுள்ளார். தமது தந்தையான நரசிம்மதாசரைக் குறித்து, ஜகன்னாததாசர் இரு பாடல்களைப் பாடியுள்ளது, தாச சாகித்யத்திலேயே மிகச்சிறந்த விஷயமாகும். தாசரது சமகாலத்திய பிற தாசர்கள் இவரை புகழ்ந்து பாடியிருப்பதைப் பார்த்தால், ஜகன்னாததாசரின் சிறப்பு எத்தகையது என்று தெரியவருகிறது.

1. சிறுவனாக இருந்தபோதிலிருந்தே ஸ்ரீனிவாசாச்சார்யர், மந்திராலய பீடாதிபதியான ஸ்ரீவசுதேந்திர தீர்த்தரின் அருளுக்குப் பாத்திரராக இருந்தார். மற்றும் அவரின் பூர்வாசிரம தம்பியான பலராமாசாரியரிடம் தர்க்கம், வியாகரணம், வேதாந்தம், மீமாம்சம் முதலான சாஸ்திர பாடங்களை முடித்தார். இவரே பின்னர் ஸ்ரீவசுதேந்திர தீர்த்தரிடம் சன்யாசம் வாங்கி, வரதேந்திர தீர்த்தர் என்று பெயர் பெற்றார். 1761ல் பீடாதிபதியானார். தாசரது வித்யாகுருகளானவரே, பின்னர் பீடாதிபதியான காரணத்தால், வரதேந்திர தீர்த்தரே ஸ்ரீனிவாசாச்சாரியரின் வித்யாகுரு என்று பெயர் பெற்றார். பிறகு ஆசாரியர் தாசதீட்சை பெற்றார்.

2. ஸ்ரீஜகன்னாததாசரின் பிரிய சிஷ்யரான ஸ்ரீதவிட்டலரின் கிருதி இப்படி சொல்கிறது. 'வரதேந்திர தீர்த்தரில் சிஷ்யராகி சாஸ்திர பாரங்கதனாத ஸ்ரீனிவாசனை' (வரதேந்திர தீர்த்தரிடம் சிஷ்யனாக இருந்து, சாஸ்திரங்களைக் கற்ற ஸ்ரீனிவாசன்).

3. வாலிப வயதில், கெட்டவர்களின் சங்கமத்தை வெறுத்தவர். வீண் அரட்டைகளை துறந்தவர் தாசர். – ஜனார்த்தன விட்டலரின் கிருதி.

4. ஜகன்னாததாசர் எப்போதும் ஸ்ரீஹரியின் தியானத்திலேயே நேரத்தை செலவழித்தார் என்று பல ஹரிதாசர்கள் தங்கள் பாடல்களில் சொல்லியிருக்கின்றனர்.

5. ராகவேந்திர கவி என்பவர், நம்முடைய அரவத்தொக்கலு மக்களில், மிகச்சிறந்த அறிஞரானவர் ஸ்ரீஜகன்னாததாசர் என்கிறார். ஸ்ரீவியாசராஜர், ராகவேந்திரருக்குப் பிறகு அவர்களுக்கு சமமான பண்டிதர் ஸ்ரீஜகன்னாதவிட்டல என்னும் அங்கிதத்தைப் பெற்றவரே ஆவார் என்று குருஜகன்னாதவிட்டலதாசர் எனப்படும் கொசிகி ஸ்வாமிராயாச்சார்.

புத்தகத்தின் பெயர் ஸ்ரீராகவேந்திரவிஜய. இது ஸ்ரீஜகன்னாததாசர் தனது சிஷ்யர்களின் அன்பைப் பெற்றதன் சாட்சி.

தாசதீட்சை பெறுவதற்கு முன்னர் ஜகன்னாததாசருக்கு கர்வம் இருந்தது. அவரது மனைவி தாமசரம்மா. இவர்களுக்கு இரு ஆண் வாரிசுகள் – திம்மண்ணதாசர் மற்றும் தாமோதரதாசர். துவக்கத்திலிருந்தே தாசர் தமது வீட்டினை குருகுலமாக மாற்றி, மாணவர்களுக்கு இடம், உணவு என அனைத்தையும் வழங்கி கல்வி புகட்டி வந்தார்.

தாசதீட்சை பெற்றதே அவரது வாழ்க்கையின் முக்கிய கட்டம் / திருப்பம். அவரது 40வது வயதில் அவருக்கு எதிர்பாராத மரணம் நிகழப்போகிறதென்று அறிந்த புகழ்பெற்ற ஹரிதாசரான விஜயதாசர், தமது பிரியமான சிஷ்யரான கோபாலதாரை, அவரது ஆயுளிலிருந்து 40 ஆண்டினை தானமாக அளிக்குமாறு ஆணையிட்டார்.

1728ல் பிறந்த தாசர் 17-9-1809 அன்று சுக்ல சம்வத்சரம் பாத்ரபத சுத்த நவமி ஞாயிற்றுக்கிழமை மூலா நட்சத்திரம் இரவு 8.30க்கு இறைவனடி சேர்ந்தார். அப்போது அவருக்கு 81 ஆண்டுகள் 1மாதம், 20 நாட்கள் வயது ஆகியிருந்தது. இதெல்லாம் ஸ்ரீதவிட்டல தாசரின் பாடல்கள் மூலமாக நமக்குத் தெரியவருகிறது.

ஜகன்னாததாசர் இன்று நம்மிடையே இல்லை. ஆனால், ஒரு சூக்ஷ்ம ரூபத்தில், ஒரு அம்சமாக தாம் மானவியில் வசித்து வந்த வீட்டில் ஒரு தூணில் இருந்து, தன்னை நம்பி வந்த பக்தர்களின் இஷ்டார்த்தங்களை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார் என்னும் நம்பிக்கை மக்களிடையே பரவியிருக்கிறது. ஸ்யாமசுந்தரவிட்டல தாசர்,

‘ஸ்தம்பமந்திப மானவி தாசராயா’ என்று பாடியிருக்கிறார். தந்தெ வெங்கடேசவிட்டல தாசர் ‘மத்தெந்தோ தர்ஷன ஸ்தம்பசதனா’ என்று பாடியிருக்கிறார். இதற்காக, தாசர் அங்கு சாய்ந்து அமர்ந்திருந்த அந்த தூணுக்கு, பூஜை ஆராதனைகள் நடைபெறுகின்றன. பல்லாயிரம் பக்தர்கள் வந்துபோகும் கோயிலாக அந்த வீடு மாறியிருக்கிறது.

தாசர் தாமே பூஜை செய்துவந்த சாலிக்ராம, துளசிகாஷ்டத்தால் செய்த பிருந்தாவனம், சத்யபோதர் கொடுத்த ஒகரு மணெ மற்றும் தாசரின் பாதுகை – இவை அனைத்தும் அங்கு வைக்கப்பட்டிருக்கின்றன. தாசர், சத்யபோதருக்கு அன்று கொடுத்த ஒரு மந்திராட்சதைத் தட்டினை, இன்றும் சாவனூரில் காணலாம். தாசர், ஹரிகதாம்ருதசாரத்தை, வரதா நதிக்கரையில் ஹொசரட்டியில் எழுதி முடித்தார் என்று சொல்லப்படுகிறது.

கோணனதம்பிகி, கர்ஜிகி, சாவனூர் இங்கெல்லாம் தாசர் அடிக்கடி போய்வந்து கொண்டிருந்தாராம். அனைத்திலும் பாண்டித்யம் பெற்றிருந்த தாசரை அன்று, புனேவில் இருந்த , கத்வால் சம்ஸ்தானத்து அரசர்கள் தமது சபைகளில் கௌரவித்தனராம். மும்மடி கிருஷ்ணராஜ உடையரின் காலத்தில் மைசூருக்கு வந்த தாசரை, பாடல்கள் பாடவைத்து கேட்டு மகிழ்ந்த ராணி லட்சுமம்மணி அவர்கள், தாசருக்குக் கொடுத்த பல்லக்கு ஒன்று மானவியில் இன்றும் இருக்கிறது. ஷிவமொக்கா ஜில்லா, கும்ஸியில் தாசர் வைத்த ‘கோர்கல்லு’ இன்றும் அவரது நினைவாக பூஜையை ஏற்றுக் கொண்டிருக்கிறது.

ஜகன்னாததாசரின் பாடல்களில் காவிய அழகு மட்டுமல்லாமல், அவர் பின்பற்றிய மத்வமத தத்வங்களும் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டன. ‘விட்டலய்யா விட்டலய்யா எந்து காம்பேனோ பாண்டுரங்கா’ என்று விட்டலனின் தரிசனத்தை விளக்கிய பாடல், ‘தன்யனாதே விட்டலன கண்டு’ என்றும் அவர் பாடிய பாடல்கள் மிக அழகானவை.

ஸ்ரீஹரியைக் காண விருப்பப்பட்டது, அவனுடன் ஏற்படுத்திக்கொண்ட சம்பந்தங்கள் பற்றிய விவரங்கள், பக்தி சாதனை – இவை அனைத்தையும் தாசரது பாடல்களில் பார்க்கமுடியும்.

தாஸ்யபாவம் (முதலாளி-சேவகன்), சக்யம் (நட்பு), தாய் மகனின் சம்பந்தம், பக்தி பாவம் – இப்படி ஹரிதாச சாகித்யத்தில் பாவங்கள் ஸ்ரீபாதராஜரிடமிருந்து துவங்கி வளர்ந்து வந்துள்ளது.

தாசோஹம் தவ தாசோஹம், பாஹிபாஹி, ரக்ஷிசோ ஸ்ரீஷ ஸ்ரீனிவாச – என்று அவரின் பாடல்கள் பக்தியை பரப்புகின்றன.

லௌகிகாஸெ பிடிஸி நின்ன தாசனெனிஸி சலஹோ

லோகவந்த்யர, லோப மோஹ பாஷ விமுக்தர நித்யானந்தர
பாகவதர சங்க தயகெயெந்து - என்று பாடுகிறார்.

கிருஷ்ணராய நின்ன க்ருத்யங்களெல்ல
ஸ்ருஷ்டியொளகெ நானு பீரல்லா
சிஷ்யரொளகிட்டு சிரகாலவென்ன
கஷ்டபடிஸிதெ சும்மினித்தீயோ

ஸ்ரீஹரியை நிந்தித்தவாறு அவனின் புகழ்களை, மகிமைகளைப் பற்றி பாடும் தந்திரம் மிக அழகு. மத்வ நிஷ்டை, பஞ்சபேத, ராமாயண, பாகவத, பாரத சம்பவங்கள் என அனைத்தும் ஜகன்னாததாசரின் பாடல்களில் காணலாம். அவரது பாடல்களைப் படிப்பவர்களுக்கு மேற்கண்ட காவியங்கள் தெரிந்திருந்தால் நலம்.

'மளெய மஜ்ஜன திக்வலயங்களெ வசனவு', 'நக்ஷத்ர மண்டலன லக்ஷ தீபாவளியு' - என்று அறிந்தால் போதாதா? இப்படியாக சொல்லி நம்மை சிந்திக்க வைக்கிறார். செயல்களிலிருந்து விடுதலை அடைந்த ஜீவர்களுக்கு பிறப்பு / இறப்பு என்னும் சுழற்சி இல்லை.

ஜகன்னாததாசர் சமூக நீதியைக் குறித்தும் பல பாடல்கள் இயற்றியிருக்கிறார்.

'இரபேகு நிந்தகரு சஜ்ஜனரிகெ ஹந்தி இத்தரே கேரி ஹேகெ ஷுத்தவோ ஹாங்கே' என்ற பாடல் இதற்கு உதாரணம்.

தாசரின் சில பாடல்களை கீழே பார்க்கலாம்.

பாடல் 1 ராகம் : சங்கராபரணம் தாளம் : ஜம்பெ

அதி[1] ஷோபி[4]சுதி[1]தெ[3] அப்ரதி[1]வாஹன (ப)
சதுரத[3]ச பு[4]வனக்கெ[1] அப்ரதி[1]வாஹன (அ.ப)

காலநாமக[1]னாகி க[1]மல்ப[4]வனதல்லி பு[1]ட்டி[1]
காலாத்ம ஹரிய சேவிப வாஹன
காளநிதி கபிவரர க[1]ட்டு[1] பி[3]டிசித வாஹன
வாலகி[2]ல்யர பொ[1]ரெத[3] வரவாஹன ... 1

வினத[1]க[1]ஷ்யப முனிய த[1]னயனெனிசித[3] வாஹன
அனுஜரனு பொ[1]த்தொ[1]ய்ய ஆட்[3]ய வாஹன
வனதி[4] மத்[4]யதி[3] நாவிக[1]ர ப[4]க்ஷிசித[3] வாஹன
ஜனகனாக்ஞதி கூர்மக[3]ஜவ நுங்கி[3]த[3] வாஹன ... 2

கு[3]லிஷபாணியொடனெ க[3]லஹ மாடி[3]த[3] வாஹன
ஔஹொக்கு[1] பீ[1]யூஷ த[1]ந்த[3] வாஹன

மலதா[1]யி மக்க[1]ளனு மருளுகொ[3]ளிசித[3] வாஹன
ப[3]லிராய ஒய்த[3] முகு[1]ட[1]வ தந்த[1] வாஹன ... 3

கூபாரதெ[3]டெ[3]கெ[3] மந்த[3]ர ஒய்த வாஹன நிஜ
ரூபி[1]னிந்தலி ஹரிய சேவெகை[3]வ வாஹன
ஆ பித்ருகளிகெ அம்ருத ப்ராப்திஸித வாஹன
சௌபர்ணபதியெனிப பொ[1]ம்ப[3]ண்ண வாஹன ... 4

ப[1]ன்னகாஷன வாஹன பதிதபாவன வாஹன
சன்னுதிப பக்தரனு பொரெவ வாஹன
பன்னகாத்ரி[3] நிவாஸ ஜகன்னாதவிட்டலகெ
உன்னந்தப்ரியவாத கருட வாஹன ... 5

பாடல் 2 ராகம்: காம்போதி தாளம்: ஜம்பெ

அபம்ருத்யு பரிஹரிஸோ அனிலதேவா
க்ருபணவத்ஸலனே காவர காணெ நின்னுளிது (ப)

நினகி[3]ன்னு சமராத[3] அனிமித்த பந்துகளு
எனகில்ல ஆவாவ ஜனுமதல்லி
அனுதினதலென்னுதாஸீன மாடுவுது
நினகெ அனுசிதோசிதவே சஜ்ஜன ஷிகாமணியே ... 1

கரணாபிமானிகளு கிங்கரரு மூர்லோகதரசு
ஹரியு நின்னொளகிப்ப சர்வகால
பரிசரனெ ஈ பாக்ய தொரெதனகெ சரியுண்டே
குருவர்ய நீ தயாகரனெந்து பிரார்த்திஸுவே ... 2

ப[4]வரோக மோசகனெ பவமானராய நி
ந்னவரவனு நானு மாதவப்ரியனெ
ஜவன பா[3]தெ[3]ய பி[3]டி[3]ஸொ அவனியொளு சுஜனரிகெ
திவிஜகண மத்[4]யத[3]லி ப்ரவர நீனஹுதோ ... 3

ஞானாயுரூபக[3]னெ நீனஹுதோ வாணி பஞ்சா
நனாத்யமரரிகெ ப்ராணதேவ
தீனவத்ஸலனெந்து நா நின்ன மொரெஹொக்கெ
தானவாரண்ய க்ருஷானு சர்வதா[3] என்ன ... 4

சாதன சரீரவிது நீ தயதி கொட்டத்து
சாதாரணவல்ல சாதுப்ரியனே
வேதவாதோதி[3]த[1] ஜகன்னாதவிட்டலன
பாதப[4]கு[1]தி[1]ய கொட்டு மோதவனு கொடு[3] சதத ... 5

பாடல் 3 ராகம்: காம்போதி தாளம்: ஜம்பெ

அபராத[4]வெணிசதலெ கா[1]யபே[3]கோ[1] (ப)
க்ருபணவத்ஸலனெ ஸ்ரீமத்வமுனி குருராய (அ.ப)

நீ மாடிதுபகார நா மரெவுதெந்தோ ல

க்ஷ்மீ மனோஹரன நிஜ தாசாக்3ரணி
பாமரன லோக1தொளு தீமந்தனெனெஸிதெ ம
ஹாமஹிம நின்ன கருணாம்ருதத மளெகரெது ... 1

பாடல் 4 ராகம் : காம்போதி தாளம் : ஜம்பெ

அரிதவரிகதி சுலப ஹரிய பூஜெ (ப)
அரியத3வ நிர்பா4க்யத1ர லோக1தொளகெ3 (அ.ப)

ஹைமாண்ட3 மண்டபவு பூமண்டலவெ பீ1ட2
சோம சூர்யரெ தீப பூ4ருஹக3ளு
சாமரகளதி1 விமல வ்யோமமண்ட3ல ப4த்ர1
யாமாச்சகக1ளப்ப1த3ள பத்4மவு எந்து3 ... 1

மளெயெ மஜ்ஜனவு திக்வலயங்களெ வசன
மலயாஜனிலவெ ஸ்ரீகந்த4தூ4ப1
இளெயொளகெ வெளெத தா4ன்யக3ளெல்ல நைவேத்ய
த2ளத2ளிப மிஞ்சு க1ர்பூரதா3ரதி1யெந்து3 ... 2

நட்சத்திர மண்டலவே லக்ஷ தீபாவளியு
தக்ஷிணோத்தர அயனகளெரடு ப3னக3ளு
வ்ருக்ஷவல்லிஜ சுப2ல புஷ்பகளொளகெ
லக்ஷ்மீவக்ஷ வியாபகனாகி தானெ போ4கி3ப1னெந்து ... 3

பாடல் 5

அசம சாருதேஷ்ண குசும நாபன புத்ர – என்னும் பாகவத வாக்கியத்தைப் பயன்படுத்தி விக்னேஸ்வரனைப் பாடுகிறார். கிருஷ்ணின் எட்டு மகிஷியர்களில் ருக்மிணி ஒருத்தி அல்லவா? அவளிடமிருந்து சாருதேக்ஷ்ண என்னும் பெயருடைய கணபதி தோன்றினாராம். லம்போதர, ரக்தாம்பரதர, அம்பராதீஸ்வர, கௌரி குமார, ஆகாயத்தின் அபிமானி தேவதை கணபதி – என்று பலவிதமாக கணபதியை வர்ணித்துப் பாடியிருக்கிறார் தாசர்.

ராகம்; பிலஹரி தாளம்: ரூபக

ரமாதீ3ன மனோஹரனே ப1தி1த1பா1வனா (ப)

சிந்ததி3ந்த3 வேத3 த1ந்த3மந்த3ரோத்த4ர அர
விந்த நயன ப3ந்து4 ரக்ஷிசு இந்து3 பூ4த4ரா ... 1

க1ருள மாலெ த4ரிஸித3 ஸ்ரீ வரத3 வாமனா த்4ருட3
க1ரத3 பரஷுராம ராக4வ யதுகுலோத்தமா ... 2

லோக1லோஹக1 புத்த4னாகி3 தேஜியேரிதா3 ஜக3
தேக1 ஜகன்னாதவிட்டல பே4கராந்த1கா ... 3

பாடல் 6 ராகம்: மோகனம் தாள: ஏக

ரத2வனேரித ரதி2க1ன்யாரு பே1ளம்மய்யா (ப)
கதி2த1த்3யாத1 ச1ம்ஸ்துத1 வித1தா1னத1 ஹித1க1ர தி3விஜர ப1தி1 கா1ணய்யா (அ.ப)

## 2. ஹரிதாச சாகித்யத்தில்

ஹாடக[1] ரத்ன சுபீட[2] மத்ய மண்டபதீ நோடம்மய்யா
கோடிபா[4]ஸ்கர ப்ரபா[4]டோ[1]ப[1]தி[3] ராஜிசுவ கேளம்மய்ய
தா[1]ட[1]ங்க[1]யுத[1] வதூ[4]டி[1]யரிக்கெ[1]லத[3]ல்லி நோடம்மய்யா
அடதி[3] கு[1]ருஜ மஹாட[1]விஸவரி
ரீடி[1]ய ஸலஹித[3] கே[2]டவாஹனனே ... 1

புஜக[3]ராஜ ப[2]ணமணிமண்டல மண்டிதனெ நோடம்மய்யா
விஜயவரத ஹரி க[3]தாம்பு[3]ஜ த[4]ரபு[4]ஜன நோடம்மய்யா
கஜசர்ம த[4]ராத்யனிமிஷ க[3]ண சேவிதன நோடம்மய்யா
அஜன நாபி[4]யலி படெ[3]து சராசர
ஸ்ருஜிசபே[1]ள்த[3] நீரஜலோசனனே ... 2

ஏதாத்[3]ருஷ மஹாமஹிம ரமாவல்லப[4]ன நோடம்மய்யா
ஸ்வேத தீ[3]பானந்தாசன வைகுண்ட[2]வ பி[3]ட்டி[1]ளிது நோடம்மய்யா
வீதப[4]ய ஜகன்னாதவிட்டல ப[4]ரல்யாகெ[1] பேளம்மய்யா
பூ4த[1]ள ஜனரபிலாஷெய ஸலிஸலு
வாதா[1]ஷன கி[3]ரிகி[3]ளித காணம்ம ... 3

ஸ்ரீஜகன்னாததாசரின் பாடல்கள் அனைத்தும் நாம் கவனித்துப் படிக்க / பாட வேண்டியதாகும்.

லட்சுமியைக் குறித்து பாடிய பாடலில், தாசர் லட்சுமிதேவியை மிகவும் அழகாக வர்ணித்துப் பாடியுள்ளார்.

பாடல் 7 ராகம்; பந்துவராளி தாளம்: ஆதி

நமோ நமோ ரமெ க[1]மலசம்பவெ
ஹிமக[3]ஜாரமண ஸன்னுதெ[1]
த[1]மரி புஷதசம சன்னிபெ இப[3]
க[3]மனெ இந்திரெ ஹசகே[3]ளு (ப)
ஸ்ருங்கா[3]ர தரங்க கேளல ப[3]ங்கா[3]ரத[3]
பொ[1]ங்காய்தி[3]கெ[3] ஒலி
வங்க[3]னெ ஷிரோமங்க[3]ள மணி ஜட[3]
ஜங்க[3]மவ்யாப்தெ[1] அங்க[3]ஜஷர
க[1]ங்க[3]ளெ திவிஜோத்து[1]ங்க[3]ம ஸ்ரீ
ரங்க[3]ன நிஜ அர்தா[2]ங்கி[3]யெ பா[3] ஹஸிய ஜகுலிகெ[3] ... 1

பொ[1]ஸகு[1]ஸும ஷிரசதல்லொப்பு[1]வ
நொஸலலி ரஞ்சிஸுவ கஸ்தூரி
திஷதும்பித[3] பி[3]சஜானன ப்[1]ரஜெ
எசெவ க[1]ந்த[4]ர க[1]க்க[1]ஸகு[1]ச கு[1]
ப்பு[1]ஸதலைதி[1] ஷோபிசுதி[1]ஹ ப[4]வ
ளஸரவ தூ[1]கு[3]த[1] அஸமெ பா[3] ஹஸெய ஜகு[3]லிகெ[3] ... 2

ஸ்ரீனிவாசனைப் பற்றிப் பாடும் ஒவ்வொரு பாடலும் மிகவும் அற்புதமானதும், மகிழ்ச்சியையும் நமக்குக் கொடுக்கிறது. உதாரணத்திற்கு:

ஸ்ரீவெங்கடாசல நிவாஸ –
நின்ன சேவானுசேவகர தாஸ பி[1]டி[3]யோ என்ன கை[1]

ஸ்ரீஹரி தன் பக்தர்களின் தலைவனாக இருக்கிறார். அப்படிப்பவரை எந்நேரமும் நினைக்கவேண்டும் என்பதே ஜகன்னாததாசரின் வேண்டுகோள். உலகத்தில் இருக்கும் அனைத்து பொருட்களிலும் - அணு முதல் மலை வரை - ஸ்ரீஹரி நிலைத்திருக்கிறார் என்று உபநிஷத் சொல்கின்றது. மோட்சத்தை அருள்பவன் ஸ்ரீஹரியே என்று சம்ஸ்கிருத தத்வகிரந்தங்கள் சொல்கின்றன. இவற்றையே சரளமான கன்னடத்தில் ஜகன்னாததாசர் மிகவும் சிறப்பாக சொல்லியிருக்கிறார்.

எல்லெல்லி நோடி[3] மத்
தல்லெல்லி நெலெஸிஹனு
ப[3]ல்லித[3]னு பா[4]க்யவந்த நம்பி[3]த[3]வரி।
க[3]ல்லதின்னொலிய ப்[4]ராந்த மானவர
நோல்ப நிஸ்சய மஹந்த[1]ரொடெய கை
வல்யதாயககெ இந்த[4] ப[1]ந்த[4] ।।

பேச்சு வழக்கில் இருந்த மொழியில், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் அரிய கருத்துகளை மொழிபெயர்த்ததில் தாசரின் சாமர்த்தியம், சிறப்பு போற்றத்தக்கது. கடோபநிஷத்தின் வாக்கியம் ‘அனோரணீயான் மஹதோ மஹியான்’, சாந்தோக்ய உபநிஷத்தின் வாக்கியம் ‘ஏஷ ம ஆத்மாந்த ஹ்ருதயேணீமான் ’ ஆகிய தத்வங்களை ஜகன்னாததாசர் கீழ்க்கண்டவாறு சொல்கிறார்.

அணுவினொளக[3]ணுஹனு க[4]னகெ கனதரனஹனு
அணுமஹத்விலக்ஷண கல்யாண குணஞான
க[4]னலக்ஷண சம்பூர்ண
மனமுட்டி கரெயலாக்ஷண பந்தொ[3]த[3]கி
கு[1]ணிவ லக்ஷ்மீவக்ஷன அனபேக்ஷன

ஸ்ரீஹரியை அனபேக்ஷன் (எதையும் விரும்பாதவன் / கேட்காதவன்) என்று சொல்லியிருப்பது மிகவும் நன்று. அவர் ஸ்வரமணன். அவருக்கு எதற்கும் இன்னொருவரின் உதவி / தேவை கிடையாது. எந்த பொருள் மேலும் அவருக்கு ஆசை / பற்று இல்லை. எதனாலும் அவருக்கு எந்தவொரு பிரயோஜனமும் இல்லை. எதற்கும் ஆசைப்படுபவர் இல்லை. இப்படி ஒரே சொல்லில் பற்பல அர்த்தங்களை பொதித்து வைத்திருப்பது ஜகன்னாததாசரின் திறன்.

உதாரணத்திற்கு:
பிராதேஷ மாத்ரஸ்தி[4]த[1] ஸ்ரீதேவியரஸ க[1]ன
கோத[3]ராத்யமரவ்ராத[1] ஸஹித மஹ
தாதி ப்[1]ருத்வ்யாந்த பூ[4]ததொளு நெலெஸி
காதுகொண்டிஹ விதா[4]த[1] அண்ட[3]த்ரித[3]
ஷாதி[4]ப[1]ன சுத[1]ன சுத[1] ஸ்வரத[1]

மத்வமதத்தின் தத்வங்களை கன்னடத்தில் மொழிபெயர்த்து விளக்குவதில் ஜகன்னாததாசர் வெற்றி கண்டிருக்கிறார். பாடல்களில் கேட்டிருக்கும் சில குறிச்சொற்களுக்கு, அவர் தனது ஹரிகதாம்ருதசாரத்தில் மிகவும் விளக்கமாக பதிலளித்திருக்கிறார். ’பிரணவ பிரதிபாத்ய பிரஹ்லாத வரத’ என்னும் பாடலில் வரும் ‘பிரணவ பிரதிபாத்ய’ என்னும் சொல்லை ஹரிகதாம்ருதசாரத்தில் விளக்கியுள்ளார்.

ப்ரணத காமதனங்க்ரி ஸந்த[3]ரு
ஷன தபேக்ஷெக[3] ளுள்ளவகெ நி

ச்சணிகெ யெனிபுது ஜட3மொதலு பி3ரம்மாந்த1 த1ரத1மவு |
மன வசனதிம் ஸ்மரிசுவர ப4வ
வனதி4 ஷோஷிஸி போ1குவுது கா
ரணவெனிசுவுது ஞான ப4க்தி விரக்தி சம்பதகெ ||
(ஆரோகண தாரதம்ய சந்தி ஸ்லோகம் #17)

ப்ரணதகாமத ப4க்தசிந்தா
மணி மணிமயாபரண பூஷித
க்ருணி கு3ணத்ரய தோஷவர்ஜித கஹன சன்மஹிம |
எணிஸ ப4க்தர தோஷகள கு
ம்பினிஜெயாண்ம ஷரண்ய ராமா
ர்ப்பணவெனலு கைகொண்ட ஷபரிய பலவ பரமாப்த ||
(கர்மவிமோசன சந்தி ஸ்லோகம் #33)

ஸ்ரீஜகன்னாததாசரின் படைப்புகளிலிருந்து அவரது புலமையின், அறிவின் ஆழத்தைத் தெரிந்துகொள்ளலாம். ஸ்ரீமதானந்த தீர்த்தரின் கிரந்தங்கள் அனைத்தையும் இவர் கரைத்துக் குடித்தவர் என்று புலனாகிறது. கடோபநிஷத், ஸ்வேதாஸ்வரரின் உபநிஷத், ஸ்ரீமன் நாராயணோபநிஷத், பாகவதம், நான்கு வேதங்கள், ப்ருஹதாரண்யக உபநிஷத் என இந்த அனைத்தும் அவருக்கு அத்துப்படி.

கனக, புரந்தரரைப் போல ஜகன்னாததாசரின் பாடல்களில், தர்க்கம், நீதி, நியாயம் என்ற விஷயங்கள் காணப்படுவதில்லை. சம்சாரிக / தற்காலிக சுகங்களுக்காக இந்திரியங்களின் வசம் ஆகிவிடாதே. பயம் இல்லாமல் ஸ்ரீஹரியைக் குறித்துப் பாடு என்று சொல்லி, பக்தரின் கடமைகளை எடுத்துரைக்கிறார்.

நாராயண தன்னாராதிபரிகெ தூ3ரகை3வ து3ரித1
காருணிக கைவல்யதாயக தோருவ ஸர்வஜித
ஹாரைஸதிரல்ப சுக2க3ள நரகத்வாரகளனு நிருத
ஸூரிகளனு ஸம்ஸேவிஸு முக்தித்4வாரவஹுது சதத

போலித்தனமாக செய்யப்படும் செயல்களை ஜகன்னாததாசர் ஒப்புவதில்லை. ஆத்ம-சுத்தி இல்லாமல் செய்யப்படும் செயல்கள், தேவையான பலன்களைக் கொடுப்பதில்லை என்கிறார். ’வேத சாஸ்திரங்களைப் படித்தென்ன, கங்கா கோதாவரி நதிகளில் குளித்தால் என்ன, புனித காரியங்களைச் செய்தால் என்ன, விஷ்ணுபாதத்தின் பிண்டம் வைத்தால் என்ன, மோட்சத்தை வேண்டி பல ஹோமங்களை செய்தால் என்ன, லட்ச துளசி அர்ச்சனை செய்தால் என்ன?’ என்று நேராக கேள்விகளைக் கேட்கிறார்.

’சாகித டங்குர யமனு’ என்னும் பாடலானது, 18ம் நூற்றாண்டின் ஆண்களின் பார்வையில் பெண்களைப் பற்றிய இழிவான அபிப்ராயத்தை தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. பெண்களை அன்றைய ஆண்கள் காணும் விதத்தைப் பார்த்தால், அந்தப் பெண்களின் நிலை மிகவும் பரிதாபமாக இருந்தது என்று தெரிகிறது. ’பாபிகளனெளெதந்து நரகதொளிடிரெந்து’ என்று சொல்கின்றனர். ஸ்ரீஜகன்னாததாசரின் ஆளுமைக்கு இந்தப் பாடல் ஒரு கருப்புப்புள்ளி என்றால் அது மிகையாகாது. அந்தக் காலத்தில் பிராமணப் பெண்கள் ஆண்களின் அடிமைகளாகவே இருந்தனர் எனலாம். அவர்களுக்கு சுயமரியாதையோ, தன்னம்பிக்கையோ இருக்கவில்லை என்று சொல்கிறார்.

ஹொத்தாரெ எம்ம ப1தி1கெ3 எரக3த3வள
ம்ருத்திகெ சௌச மாடதெ இப்பள

ப$^{3}$த்த$^{1}$லெ கு$^{1}$ளிது$^{1}$ மைதொளெவவள, நாதி$^{3}$னி
அத்தெமாவன பைவவளெளெது த$^{1}$ன்னிரோ ।

திலகாயுத$^{4}$வ பி$^{3}$ட்டு குங்குமயிடுவள
பௌகாவ கா$^{1}$லக்கு$^{1}$ மலகி$^{3}$ப்பவள
மலின வஸ்த்ரதி ப$^{1}$திய ப$^{3}$ளிகெ$^{3}$ போ$^{1}$கோ$^{3}$ள
க$^{1}$லஹகா$^{1}$ரிய பி$^{1}$டி$^{3}$தெ$^{3}$ளெது$^{3}$ த$^{1}$ன்னிரோ ।

க$^{3}$ண்ட$^{3}$ நிர்த$^{4}$னிகனெந்த$^{3}$ப$^{1}$மான மாள்பள
உண்ட சேஷான்னவனுணிஸுவவள
கொண்ட மாதுகளிந்த களவலகொ$^{3}$ளிப$^{1}$ள
மண்டெகூதலு பிடிதெளெது தன்னிரோ ।

மீசலு மடி என்னதெ பக்ஷிஸுவவள ஸ
கேசியரொடனெ கெ$^{3}$ளெதன மாள்பள
தாஸெரெந்தலி பா$^{1}$கபா$^{1}$த்ரெ முட்டிஸுவவள
பார்ஷகளிந்தலி கட்டி எளெது தன்னிரி ।

அந்தக் காலத்தின் ஆண்கள் நியமித்த விதிகளை ஜகன்னாததாசர் ஏன் இப்படி புகழ்ந்து பாடியிருக்கிறார் என்பது தெரியவில்லை. ஆனால், ஒரு பெண் என்பவள் எப்படியிருக்கவேண்டும், எப்படியிருந்தால் அவளை ஆண்கள் மணம் செய்து கொள்வர் என்று பின்வருமாறு பாடியிருக்கிறார்.

அரிஷின குங்கும புஷ்பாஞ்சன வஸ்த்ரா
ப$^{4}$ரண பூ$^{4}$ஷிதளாகி பதியொடனெ
ஸரஸவாடுவ சுக$^{2}$ ஹரிகெ அர்பி$^{1}$ஸி
ஹருஷதொளிப்பள முட்ட$^{1}$தெ$^{3}$ ப$^{3}$ன்னிரோ

பா$^{3}$லக$^{1}$ரனு தொ$^{1}$ட்டிலொளகி$^{3}$ட்டு$^{1}$ தூ$^{1}$கு$^{3}$த$^{1}$
பா$^{1}$லெரெவுத பீ$^{3}$ஸூத்த$^{1}$ கு$^{1}$ட்டுத்த
ஆலயதொளு கெலஸகள மாடுத்த லக்ஷ்மி
லோலன குணவ பாடுவர முட்டதெ ப$^{3}$ன்னிரோ ।

அபாரமான மகிமையுள்ள ஜகன்னாதவிட்டலனை அல்லும்பகலும் போற்றிப் பாடும் பக்தர்களை வாருங்கள் என்று இரு கை கூப்பி வரவேற்பதின் மூலம் ஸ்ரீஹரியின் பக்தர்களின் பெருமையைப் போற்றுகிறார்.

'கொளலேனு புண்யவ மாடி கிருஷ்ணன கரவன்னைதிதோ' இது ஜகன்னாததாசரின் மிகவும் அற்புதமான பாடல். கிருஷ்ணனின் அருகிலேயே குழலானது எப்போதும் இருப்பதால், அவரின் மனைவியருக்குக் கூட பொறாமை உண்டாயிற்றாம். அந்த குழலானது என்ன புண்ணியம் செய்ததோ என்கிறார்.

ஹரிகதாம்ருதசாரத்திற்குப் பிறகு ஜகன்னாததாசரின் அடுத்த புகழ்பெற்ற கிருதி எதுவென்றால் - தத்வசுவ்வாலி. தத்வவிசாரங்களின் முக்கியத்துவத்தை ஹரிகதாம்ருதசாரம் எடுத்துரைத்தால்; தத்வசுவ்வாலியானது த்ரிபதி சந்தஸ்ஸில் அவற்றை நிரூபிக்கும் விதமாக மிகவும் சரளமாக எடுத்துரைக்கிறது. சிறுமிகள் பாடும் 'சுவ்வி' நுடியில் தத்வசுவ்வாலி இயற்றப்பட்டிருக்கிறது. தத்வசுவ்வாலி பற்றி கிடைத்திருக்கும் கையெழுத்துப் பிரதிகளில் இவை சுவ்வி என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. ஸ்ரீவாதிராஜர் பிருதின சுவ்வாலி என்னும் பாடலை இயற்றியிருக்கிறார்.

தத்வசுவ்வாலி என்னும் பெயரே சொல்வதுபோல், தத்வங்களை விளக்குவதே இந்தப் பாடலின் நோக்கம். ஆனால் இதை சிறுமிகளுக்காக / பெண்களுக்காக இயற்றியிருக்க வேண்டும். ஏனென்றால், ஹரிகதாம்ருதசாரத்தில் கண்ட இவரது கவித்திறனானது, அந்த மொழித்திறனானது இங்கு காணப்படவில்லை. 'தோல் உரித்த வாழைப்பழம்' போல மிகவும் அழகாக, சரளமாக, 'அணோரணீயான் மஹதோ மஹீயான்' என்னும் கடோபநிஷத்தின் மறைபொருளானது தத்வசுவ்வாலியில் பேசப்பட்டிருக்கிறது.

அணுவிகணுதரனாகி க$^{4}$னகெ$^{1}$ க$^{4}$னத$^{1}$ரனாகி
அணுமஹத்து$^{1}$க$^{3}$ள தெ$^{3}$ஸெயிந்த |தெ$^{3}$ஸெயிந்த$^{3}$ நீ
விலக்ஷண னெனெஸி கொ$^{1}$ம்பி$^{3}$ ஸ்ருதியொளு

ஸ்ரீஹரி மற்றும் அவரின் பக்தர்களின் சம்பந்தம் அத்வைத, விசிஷ்டாத்வைதங்களில் விதவிதமாகப் பேசப்பட்டிருக்கின்றன. த்வைத சித்தாந்தத்தைப் பின்பற்றுபவரான ஜகன்னாததாசர், த்ரிபதி என்னும் மூன்று வரிகளில் இதை அடக்கியதைப் பார்க்கும்போது, சாஸ்திரங்களை மிகவும் எளிமையாக சொல்லும் திறன் படைத்தவர் என்பது புலனாகிறது.

ஜகது$^{3}$த$^{3}$ர நீனாகி ஜகதொ$^{3}$ளகெ$^{3}$ நீனிப்பெ
ஜகதி ஜீவரனு ஸ்ருஜிஸுவி |ஸ்ருஜிஸி ஜீவரொளித்து
ஜகதன்யனெந்து கரெஸுவி

மேலோட்டமாகப் பார்க்கும்போது மிகவும் எளிமையாகக் காணும் த்ரிபதியில், த்வைத சித்தாந்தம் எப்படி அடக்கப்பட்டிருக்கிறது என்பதை டாக்டர்.R.G.குடி அவர்கள் இப்படியாக விளக்குகிறார். ஸ்ரீஹரியே படைப்பாற்றலாக மாற்றம் கொள்வார் என்று சொல்லும் அத்வைத சித்தாந்தமும், 'இந்த உலகத்திற்கு ஸ்ரீஹரியே உபாதான-காரணம் (material cause)' என்னும் விசிஷ்டாத்வைத மதத்தின் சித்தாந்தமும் சரியல்ல என்பதை இங்கு 'ஜகதன்ய' என்னும் சொல்லின் மூலம் விளக்கியிருக்கிறார். ஆகவே, ஸ்ரீஹரியானவர் இந்த உலகத்திற்கு நிமித்த-காரணம் (efficient cause - அவரே அனைத்தையும் படைக்கிறார்) என்று நிரூபித்து, உலகத்திலிருந்து அவர் தனியாக விலகி இருக்கிறார் என்கிறார். இதுவே த்வைத சித்தாந்தத்தின் கருத்து என்கிறார். (R.G.குடியின் தாசசாகித்ய ஒரு சித்தாந்ததைப் பற்றி ஆராய்ச்சி. பக்கம் 308. 1995).

ஜகன்னாததாசரின் பாடல்கள், தத்வசுவ்வாலி மற்றும் ஹரிகதாம்ருதசாரம் என்று இந்த மூன்றிலும் சில சமயம் ஒரே விஷயங்கள் பேசப்பட்டிருக்கின்றன. இந்த மூன்றினையும் படிப்பவர்கள் கற்றறிந்தவராக, த்வைத சித்தாந்தத்தைத் தெரிந்தவராக இருக்கவேண்டும். பாடல்கள் மக்களின் நடுவே ஆடிப்பாடி பரப்புவதற்கு ஏற்றவையாகும். இப்படியாக த்வைத சித்தாந்தத்தை மக்களிடம் கொண்டுபோய் சேர்ப்பதற்கு தத்வசுவ்வாலிகளை நன்றாகப் பயன்படுத்திக்கொண்டார்.

இவரின் படைப்புகளில் ஹரிகதாம்ருதசாரம் மிகவும் முக்கியமானதாகும். த்வைத சித்தாந்தத்தின் களஞ்சியம் என்று அதை அழைக்கின்றனர். சரளமான கன்னடத்தில், பாமினி ஷட்பதி என்னும் நுடியில், த்வைத சித்தாந்தத்தின் அனைத்து தத்வங்களும் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றன. அனைத்து விஷயங்களும் அடங்கியிருக்கும் இந்த காவியத்திற்கு பற்பல உரைகள் வந்திருக்கின்றன. சமஸ்கிருதத்திலும் இதற்கான உரை வந்திருப்பது மிகவும் சிறப்பு.

இந்த காவியத்தின் சிறப்பினைப் பற்றி டாக்டர். K.M.கிருஷ்ணராயர் இவ்வாறு தெரிவிக்கிறார். சமஸ்கிருத மொழித்திறமை, சம்பிரதாயம், சித்தாந்தத்தின் ரகசியங்களைப் பற்றிய தெளிவான அறிவு, ஸ்ரீஹரியிடம் சுத்தமான பக்தி, அபரோக்ஷஞானம் ஆகிய பல

சிறந்த தகுதிகளைப் பெற்றிருந்த ஸ்ரீஜகன்னாததாசர், ஹரிதாச பரம்பரையை பிரகாசமாக வளர்த்தெடுத்தார். த்வைத சித்தாந்தத்தின் ரகசியங்களை மிகவும் ஆணித்தரமாக எடுத்துரைக்கும் திறன், அறிவு இவற்றுடன் எளிமையாக சொல்லும் தாசர் 'விஷால ஹ்ருதயத ரசயோகி' (பரந்த மனம் கொண்டவர், விற்பன்னர்) என்கிறார்.

ஹரிகதாம்ருதசாரத்தின் முக்கிய நோக்கம் ஹரிசர்வோத்தமத்வத்தை நிலைநாட்டுதல். அதற்கான விளக்கங்களுக்கு, நாம் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தும் உதாரணங்களையே தாசர் மேற்கோள் காட்டுகிறார். அதுமட்டுமல்லாமல் தமது பாடல்களில், அவர் பொதுவாக பயன்படுத்தும் சமஸ்கிருத மொழியைவிட்டு சரளமான கன்னடத்தையே பயன்படுத்திருப்பதை கவனிக்கவேண்டும். அனைத்து ஜீவர்களிலும் ஸ்ரீஹரியானவர் நிலைத்திருந்தாலும், அந்த ஜீவன் மூலமாகவே அனைத்து செயல்களையும் செய்து முடித்தாலும், அந்த செயல்கள் மூலம் கிடைக்கும் நல்ல / கெட்ட பலன்கள், பாவ / புண்ணியங்கள் எதுவும் ஸ்ரீஹரிக்குப் போய் சேர்வதில்லை என்பதை ஜகன்னாததாசர் கீழ்க்கண்ட ஸ்லோகத்தில் விளக்கியிருக்கிறார்.

கா$^1$த$^3$க$^1$ப்பிண ஹிடி$^3$து$^3$ ப$^3$டி$^3$யலு
வேத$^3$னெயு லோஹக$^3$ளிக$^3$ல்லதெ$^3$
ஆதுதே$^1$னை அனலகா$^3$வ்யதெ ஏனமாடித$^3$ரு |
ஆதிதே$^3$வனு சர்வஜீவர
கா$^1$து கொண்டிஹனொளஹொரகெ$^3$ து:
க்கா$^2$திக$^3$ளு சம்பந்தவாகுவவேனு சின்மயகெ$^3$ ||
(கருணா சந்தி ஸ்லோகம் #27)

இங்கு இரும்பிற்கு விழும் அடியானது அதன் முந்தைய கர்ம பலன் ஆகும். ஸ்ரீஹரிக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை. இதை திரு K.M.கிருஷ்ணராயர் ஒரு உதாரணத்துடன் விளக்குகிறார். சிறைச்சாலையில் இருக்கும் கைதிகள், அந்த அதிகாரி சொல்வதைப் போல நடக்கவேண்டும்தானே? தண்டனை கைதிகளுக்குதான், அதிகாரிகளுக்கல்ல. இருவரும் ஒரே இடத்தில் (சிறைச்சாலை) இருந்தாலும், அவரவர் தகுதி, இடம் இதற்கேற்ப அவர்களின் அனுபவங்கள் வேறுபடுகின்றன. (கிருஷ்ணராவ், ஹரிகதாம்ருதசாரம், பக்கம் 52). ஸ்ரீஹரி நெருப்பைப் போல நம்முள் இருக்கிறார். கர்மபலன் கண்டிப்பாக அனைவருக்கும் உண்டு.

மத்வசாஸ்திர பண்டிதர், சம்ஸ்கிருத மொழியில் விற்பன்னரான ஜகன்னாததாசர் கன்னட மொழியை 'கலுஷத பாஷே' (கலங்கலான மொழி) என்று அழைத்தாலும், அந்த கன்னடத்திலேயே இந்த கிரந்தத்தை எழுதியதன் மூலம், கன்னடர்களின் பெருமதிப்பைப் பெற்றார்.

அப்படியே பிறகு 18ம் நூற்றாண்டில் வந்த ஜகன்னாததாசர், சம்ஸ்கிருதத்தில் மட்டுமே சொல்லமுடிகின்ற அரிய விஷயங்களை, தமது தத்வசுவ்வாலி மற்றும் ஹரிகதாம்ருதசாரம் மூலம் கன்னடத்தில் மிகத் திறமையாக இயற்றினார். இதற்கே நான் – ஜகன்னாததாசர் கன்னட மொழிக்கு சம்ஸ்கிருத மொழியின் மேற்பூச்சு / அலங்காரம் செய்தார் – என்கிறேன்.

***

# ஹரிகதாம்ருதசாரத்தில்

## 8. நீதிநெறி

### திருமதி. ரேகா காகண்டகி

ஶ்ரீஹரிகதாம்ருதசார குருகள
கருணதிந்தா பனிது பேளுவே
பரம பகவத்பக்தரிதனாதரதி கேளுவுது ||

ஶ்ரீஜகன்னாததாசர் இயற்றிய, பாமினி ஷட்பதி நுடியில் எழுதப்பட்ட, ஶ்ரீஹரியின் குணங்களை அவனது எண்ணிக்கையில் அடங்காத மகிமைகளை, தோஷங்கள் இல்லாத அவனின் இருப்பை விளக்கி எழுதப்பட்ட அபூர்வமான படைப்பு ஹரிகதாம்ருதசாரம். இது அவரின் அபாரமான பக்திக்கு சான்றாக இருக்கிறது. இதில் 32 சந்திகள் உள்ளன. 33ஆக ஶ்ரீதவிட்டலதாசர் இயற்றிய பல-ஸ்ருதி சந்தி இருக்கிறது.

ஶ்ரீஹரிகதாம்ருதசாரம் என்னும் அமிர்த சாரத்தினுள் போனால் - என்ன இருக்கிறது? என்ன இல்லை? இதில் இருக்கும் ஒவ்வொரு எழுத்திலும் ஶ்ரீஹரியின் ஸ்வரூபத்தை, அந்த ஸ்வரூபத்திற்குள் அடங்கியிருக்கும் தத்வசாரத்தை, வேத வேதாந்த மத்வ சித்தாந்தத்தின் தர்க்கங்களை, மிகவும் அற்புதமாக புரியவைக்கிறார் தாசர்.

இந்த ப்ரம்மாண்டத்தின் ஸ்வரூபமே ஶ்ரீஹரி. போலவே ஹரிகதாம்ருதசார என்னும் கிரந்தம், அவனின் பிரம்மாண்ட தரிசனத்தின் அனுபவமாக இருக்கிறது. அந்த அனுபவத்தை இந்த அனைத்து ஸ்லோகங்களின் மூலம் பக்தர்களுக்குக் கொடுக்கிறார். இத்தகைய பெரிய கிரந்தத்தை தாச சாகித்யத்திற்குக் கொடுத்த புண்ணியச் செயல் தாசருடையது ஆகும்.

தாசசதுஷ்டயர்களில் ஶ்ரீஜகன்னாததாசரின் குருவானவர் ஶ்ரீவிஜயதாசர். அவரது சமகாலத்தவர் ஶ்ரீபிரசன்ன வேங்கடதாசர். ஜகன்னாததாசரின் சாதனைக்கு காரணமாக, தனது ஆயுளையே தானம் செய்த ஶ்ரீகோபாலதாசர். இவர்கள் அனைவரின் நட்பில் இருந்து, ஶ்ரீஹரியின் சாட்சாத்காரத்தைப் பெற்ற மகானுபாவர் ஶ்ரீஜகன்னாததாசர்.

யாராவது புண்ய புருஷரின் வாழ்க்கையில் ஶ்ரீஹரியின் அருள் கிடைக்கவேண்டுமெனில், அவருக்கு ஏதோ ஒரு பிரச்னை ஏற்பட்டு அதற்கு தீர்வு கிடைக்கும்படியாக ஶ்ரீஹரி வழி காட்டுவார். உதாரணத்திற்கு, ஶ்ரீபுரந்தரதாசரின் வாழ்க்கையில் மூக்குத்தியின் கதை, பிரசன்னவேங்கடதாசரின் வாழ்க்கையில் அவரது அண்ணியின் கடுஞ்சொல். அப்படியே ஜகன்னாத தாசரின் வாழ்க்கையில் அவருக்கு ஏற்பட்ட தீராத வயிற்று வலி. இது அவரது வாழ்க்கையை மாற்றி, ஆன்மிக வாழ்க்கையின் ஆனந்தத்தை அவருக்குக் கிடைக்குமாறு செய்து, அவரை தாசத்வத்தின் வழியை பின்பற்றச் செய்தது. இவருக்குள் இருந்த பக்தி வளர்ந்து, இவரது பாதையே மாறி, ஶ்ரீஹரியைப் பற்றி பற்பல பாடல்களைப் பாடி, பின் ஶ்ரீஹரி பாதங்களை சேர்ந்தார். இப்படிப்பட்ட இவரின் மிகச்சிறந்த கிருதியே ஹரிகதாம்ருதசாரம்.

ஒவ்வொரு சந்தியிலும், சித்தாந்தத்தின் ஒவ்வொரு சிறப்பம்சமும் விளக்கப்பட்டிருக்கிறது. இருக்கும் 32 சந்திகளில், முதலில் துவங்கும் மங்களாசரண சந்தியில், ஹரிகுருகளை வணங்கியவாறு, ஜகத்ஸ்வரூபனான நரசிம்மரை வணங்கி 'நீரஜபவாண்டோதய ஸ்திதி காரணனே கைவல்ய தாயக நாரசிம்மனே நமிபெ கருணிபுதெமகெ மங்களவ' என்று அனைவரின் தலைவனான நரசிம்மனை வனங்கி, பிரம்மாண்டத்தை தன் வயிற்றில் அடக்கி, 84 லட்ச ஜீவராசிகளையும் தன்னுடன் வைத்திருப்பவரை வணங்கி, உலகத்தின் தாயாக

விளக்கும் ரமாதேவியை வணங்கி, பிறகு படைத்தலுக்குக் காரணமான பிரம்மனை வணங்குகிறார்.
ஆறு மூரெரடொா3ந்து3 ஸாவிர
மூரெரடு ஷத1 ஸ்வாச ஜபக3ள
மூருவித3 ஜீவரொாளக3ப்ஜஜக1ல்ப1 ப1ர்யந்த1
என்று ஜீவர்களுக்கு வாயுதேவரால் ஆகும் உதவியை நினைத்து வணங்கியவாறு

ஹத்து1 க1ல்ப1தி3 த1பவகை3தா3
தி3த்1ய ரொாளகு3த்த1ம னெனிஸி பு1ரு
ஷோத்த1மன ப1ரியங்க1 ப1த3வை தி3தெ3யொா மஹாதே3வ
என்று ருத்ரரை வணங்குகிறார்.

பின்னர் தாரதம்யத்தின்படி, தேவதைகளை வணங்கியவாறு, மத்வ சித்தாந்தத்தின் தர்க்க, தத்வ, பஞ்சபேத ஆகியவற்றை விளக்கியவாறு பிம்பரூபியான ஸ்ரீஹரியை வேண்டியவாறு, ஹரிகதாம்ருதசாரத்தின் உள் இருக்கும் தத்வ சிந்தனையை துவக்குகிறார் ஜகன்னாததாசர்.

இப்படியே ஒவ்வொரு சந்தியிலும், ஒவ்வொரு விதமாக, நமது லௌகிக வாழ்க்கையில் ஸ்ரீஹரியைக் காணும் வழியினை எடுத்துரைக்கிறார் தாசர்.

எடுத்துக்கொண்ட தலைப்பின்படி ஹரிகதாம்ருதசாரத்தில் நீதிநெறி எப்படி சொல்லப்பட்டிருக்கிறது என்று பார்த்தால், அனைத்து ஸ்லோகங்களிலும் பற்பல மறைபொருள் அடங்கியிருக்கிறது. அனைத்து சந்திகளிலும் நீதிநெறியைக் குறித்த தனது பார்வையை அற்புதமாக விவரிக்கிறார் தாசர்.

இந்த பூமியில் மனிதன் பிறக்கும்போது, இந்த உலகத்திற்கு ஏற்றாற்போல் வளர்வதற்கு ஒரு நியதி இருக்கிறது. அந்த நியதியானது அந்த மனிதனின் வாழ்க்கை முழுவதற்குமாக பொருந்தி வருகிறது. அந்த நியதியில் வாழ்வதற்கு ஒரு ஒப்புக்கொள்ளப்பட்ட கட்டமைப்பு உள்ளது. அந்தக் கட்டமைப்பில் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் ஸ்ரீஹரியின் விருப்பத்தினாலேயே அமைந்தன. ஸ்ரீஹரியை திருப்திப்படுத்துவதற்காக செய்யப்படும் இந்த செயல்கள், மனிதனை ஸ்ரீஹரியிடம் போகும் வழி எது என்பதை காட்டிக்கொடுக்கிறது.

ஹரிகதாம்ருதசாரம் மட்டுமல்ல, ஸ்ரீஜகன்னாததாசரின் இதர கீர்த்தனைகளிலும் இத்தகைய பல அரிய தத்துவங்கள் காணப்படுகின்றன. அவை ஒரு சுழலைப் போன்று மனிதனை அதனுள் இழுத்துக் கொள்கிறது. இவை மனிதகுலத்திற்கு ஒரு ஒளிவிளக்கைப் போன்றதாகும். 'சிரிரமண தவசரண தொரகுவுது ஹேகென்னு பரம பாபிஷ்ட நானு' என்ற பாடலில், பகட்டிற்காக செய்யப்படும் செயல்களில் பலன் இல்லை. ஸ்ரீஹரியிடம் போய் சேர்வதற்கான வழியும் அது இல்லை. களங்கமில்லா பக்திக்கு மட்டுமே ஸ்ரீஹரி இரங்குகிறான் என்கிறார்.

பா3லக1ன க1லபா4ஷெ ஜனனியு
கே1ளி ஸுக1படுவந்தெ1 லகு1மி
லோல ப4கு1த1ரு மாடுதி1ஹ ஸம்ஸ்து1தி1கெ3 ஹிக்கு3வனு |
தா1ள த1ன்னவரல்லி மாடு3வ
ஹேளனவ ஹெத்தை3வ விது3ரன
ஆலயதி பா1லுண்டு கு1ருப1ன மானவனெ கொா1ண்டா ||
(கருணா சந்தி ஸ்லோகம் #14)

பக்தனின் களங்கமில்லா பக்திக்கே ஸ்ரீஹரி இரங்குவான். எந்தவொரு சந்தேகமும் இல்லாமல், ஸ்ரீஹரியானவர் விதுரனின் வீட்டிற்குச் சென்று பால் உண்டதற்கு, விதுரனின் களங்கமில்லா பக்தியே காரணமாகும். ஆனால் பகட்டிற்காக செய்யும் பக்தி, அவருக்குச் செய்யும் அவமானத்தைப் போலாகும். இத்தகையவர்களை ஸ்ரீஹரி தன் பக்கத்திலேயே சேர்ப்பதில்லை. இதன் செய்தி என்னவென்றால் – அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிப்பதே தூய பக்தியாகும். இத்தகைய பக்தி திரௌபதிக்குக் கைகூடியிருந்தது. பக்த பிரகலாதனுக்கு இருந்தது. சிறுவன் த்ருவனுக்கு இருந்தது. இத்தகையவர்களை ஸ்ரீஹரி காக்கிறான் என்கிறார். ஜீவர்கள் உள்ளில் இருக்கும் மனக்கதவை திறந்து வைக்கிறார் ஸ்ரீஹரி. அப்படிப்பட்டவர்கள், அந்த கதவிற்கு உள் இருக்கும் ஸ்ரீஹரியைக் கண்டு மெய்மறந்து இருக்கவேண்டும் என்பதே இந்த சித்தாந்தத்தின் சிந்தனை.

ஆவதே3ஹவ கொ1டலி ஹரி மத்1
தா1வ லோக1தொ3ளிடலி மத்1
தா1வ தே3சதொ3ளிட3லி ஆவாவஸ்திக3ளு ப3ரலி ।
ஈ வித3தி3 ஜடசேத1னதொ3ளு ப1ர
ராவரேசன ரூப கு3ணக3ள
பா4விஸுத சுக்ஞான ப4குதி1ய பே3டு கொண்டா3டு ।।
(பஞ்சதன்மாத்ர சந்தி ஸ்லோகம் #22)

என்கிறார். மனித ஜீவன் எந்தப் பிறவியில் இருந்தாலும் பரவாயில்லை. ஏனென்றால் அனைவரும் தங்களின் பிறவிப்பயனை அடைந்தே தீர்கிறார்கள். ஆக, எந்தவொரு பிறவி இருந்தாலும், ஸ்ரீஹரியின் ரூபங்களை, அவனது நற்குணங்களை நினைத்துப் பார்க்கும் ஞானத்தையே வேண்டவும். கிடைத்தபிறகு அவன் நற்குணங்களை கொண்டாடவும் என்கிறார்.

மொத்தம் 32 சந்திகளில் என்ன இருக்கிறது? என்ன இல்லை? என்கிற பேச்சிற்கே இடமில்லை. சிறிய அணுவிலிருந்து பெரிய மலைவரைக்குமான குணங்கள், பிரம்மசூத்ர பாஷ்யம், உபநிஷத்கள், மகாபாரத தாத்பர்ய நிர்ணயம், தீர்த்தபிரபந்த, தாரதம்ய ஸ்வரூப, நாடிபிரகரண சந்தி, பிம்போபாசனை, அணுதாரதம்யம் இவை அனைத்தும் ஸ்ரீஹரியின் க்ரியாரூபகமாக இருக்கிறது. மனிதனானவன் எந்த ஞானம் அடையவேண்டும் என்பதை தெள்ளத்தெளிவாக விளக்கி, அதில் மனிதப் பிறவிக்குத் தேவையான சிறப்புச் செயல்களைப் பற்றி விளக்கியிருக்கிறார்.

ப4ந்த மோக்ஷப்ரத3ன ஞானவு
மந்த3மதி1க3ளிகெ3ந்து தொ3ரெவுது3
பி3ந்து மாத்1ர சுகா2னுப3வ ப1ர்வதகெ1 சமதுக்க3 ।
எந்து3 தி1ளியத3லன்யதை3வக3
ளிந்த3 சுகவாபேக்ஷிசுவர் மு
கு1ந்த3னாராத3னெய பி3ட்ட1வரிகு3ண்டே1 முக்தி1 சுக1 ।।
(க்ரீடாவிலாச சந்தி ஸ்லோகம் #9)

இந்த உலகத்தில் மாட்டிக்கொண்ட ஜீவன், மோட்சத்திற்கான பாதையான ஞானத்தைப் பெறாமல், லௌகிக / சம்சாரிக விஷயங்களில் மனதைக் கொடுத்து திரிபவனுக்கு, அத்தகைய ஞானம் கிடைப்பது எப்படி?

அந்த அறிவைப் பெறுவதற்கு அவனுக்கு வழியிருக்கிறதா? உலக மாயையில் வீழுந்து, சிற்றின்பத்தில் திளைத்து, அதுவே வாழ்க்கையில் முக்கியம் என்று நினைத்து அதிலேயே மூழ்கியவனுக்கு, முக்திக்கான வழியைக் காட்டுகிறார். அனைத்திற்கும் காரணன் அவனே என்னும் நினைப்பைக் கொண்டால் மட்டுமே, அவனிடம் போய்ச் சேரும் வழி சுலபமாகிறது.

இப்படி ஒன்றல்ல, இரண்டல்ல, பற்பல ஸ்லோகங்களில், ஸ்ரீதவிட்டலர் தமது பல-ஸ்ருதியில், உலகநியதியை விளக்கியவாறு, மக்களுக்கு அவர்களின் மொழியிலேயே சரளமாக, ஸ்ரீஹரியிடம் போகும் வழியினை காட்டியிருக்கிறார்.

அக்கறையுடன், பக்தியுடன் ஹரிகதாம்ருதசாரத்தின் ஒரு எழுத்தை எழுதினால், படித்தால் தேவதேவதைகளுக்கு வேண்டியவனாக, தர்ம, அர்த்த, காம ஆகிய புருஷார்த்தங்களையும் விரும்பாமல் மோட்சத்திற்கு போகும் வழியைப் பிடிக்கிறான் என்கிறார் ஸ்ரீதவிட்டலர். ஹரிகதாம்ருதசாரம் என்றால் ஜீவன் முக்திக்கு உண்டான வழி. தர்க்க, தத்வ, சித்தாந்த, பக்தி, ஞான, வைராக்ய, ஸ்ரவண, கீர்த்தன, தியான ஆகியவற்றைப் பின்பற்றி, உலக நியதியை பின்பற்றியவாறு, பக்தி மார்க்கத்திற்கு அழைத்துக்கொண்டு போகும் சிறந்த வழியாக இருக்கிறது. மனிதன் தான் செய்யும் அனைத்து செயல்களிலும் ஸ்ரீஹரியைக் காணும் சிந்தனை வரவேண்டும். இந்த கிரந்தத்தில் இருக்கும் ஒவ்வொரு தலைப்பும், அதன் கருத்துகளும், நம் மனதில் பக்தியை உண்டுபண்ணி அதை ஒரு மரமாக வளர்த்து, தக்க பலன்களைக் கொடுக்கும். மஹாமஹிமரான ஸ்ரீஜகன்னாததாசர், நம் பூமி செய்த புண்ணியத்தின் பலனே ஆவார். இத்தகைய பக்தி மார்க்கத்தையே அனைத்து தாசர்களும் சொல்லிக் கொடுக்கின்றனர். ஆனால், அந்த வழியைக் கண்டுபிடித்து, அதை ஆராய்ந்து, பின்பற்ற வேண்டும். இந்த வழிக்கு, தாசர்கள் காட்டும் பக்தி மார்க்கம் ஒரு ஒளிவிளக்காக இருக்கிறது.

ஸ்ரீஹரியின் கருணை எத்தகையது?

பு1ண்யக1ர்மகெ1 ஸஹாயவாகு3வ
த3ன்யரிகெ3 க1ல்யாதி3 தை3த்1யர
பு1ண்ய ப2லக3ளனீவ தி3விஜர பா1ப1க1ர்மப2ல ।
(க்ரீடாவிலாச சந்தி ஸ்லோகம் #14)

என்று கருணைக்கடலான ஸ்ரீஹரி, தன் பக்தர்களில் எத்தகைய தோஷங்களையும் பார்க்காமல் அவரவர்களின் செயல்களுக்கு ஏற்றவாறு, அவர்களை கட்டுப்படுத்தும் காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸரியம் ஆகியவற்றை நீக்கி, ஞான, பக்தி, விரக்தியில் அவர்களை அனுப்பி, சாஸ்திரங்களைக் கேட்க வைத்து, அதை மனப்பாடம் செய்ய வைத்து, அதையே திரும்பத்திரும்ப சொல்ல வைத்து, உள்ளுணர்வில் எப்போதும் அதையே நிலைநிறுத்தி, பயன்பாட்டிற்குக் கொண்டுவந்து, ஜபம், தபம், மௌனவிரதம் ஆகியவற்றால் பிம்பரூபி ஸ்ரீஹரியை தமக்குள்ளே காணுமாறு செய்து, உன் நல்வழியை நீயே கண்டுபிடி' என்கிறார். சம்சாரிக செயல்களிலிருந்து பக்தி மார்க்கத்திற்குப் போகும் வழியை காட்டிக் கொடுக்கிறார்.
இதே பிம்போபாசனையில்

ஸ்ரீனிகே1த1ன த1ன்னவர தே3
ஹானு ப3ந்திக3ளந்தெ1 அவ்யவ
தா3னத3லி நெலெசிப்ப சர்வத3 சக1ல கா1மத3னு ।
ஏனு கொ1ட்டத3 பு3ஞ்சிசுத1 மத்
தா1னெயெந்த3தி3 சஞ்சரிஸு மத்1
தே1னு பே3டதே3 பஜிசுதி1ரு அவனங்க்ரிக1மலக3ள ।।
(பிம்பாபரோக்ஷ சந்தி ஸ்லோகம் #26)

# 8. நீதிநெறி

ஸ்ரீதேவிக்கு ரமணனான ஸ்ரீஹரி ஒரு அரை நாழிகையும் தன்னுடையவர்களை விட்டுப் பிரியாமல், அவரில் எப்போதும் பிம்பரூபனாக இருந்து, அவரின் அனைத்து வேண்டுதல்களையும் நிறைவேற்றுகிறான்.

'அனன்யாஸ்சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே' என்றால், எப்போதும் தன்னை நினைப்பவர்களின் நலனை தான் பார்த்துக் கொள்கிறேன் என்கிறான். தன் பக்தர்களின் மனதில் நிலைத்திருக்கும் ஸ்ரீஹரி, அவர்கள் நினைப்பதை நடத்திக் கொடுக்கிறான். இத்தகைய ஸ்ரீஹரியிடம் எதையும் வேண்டாமல் – தற்காலிக சுகங்களை வேண்டாமல், எந்நேரமும் அவனை வணங்குங்கள் என்று தாசர் நமக்கு பக்தி மார்க்கத்திற்கான வழியைக் காட்டுகிறார்.

ஹரிகதாம்ருதசார கிரந்தமே ஒரு பிரம்மாண்ட ஸ்வரூபம். ஸ்ரீஹரியின் மகிமைகளை இத்தகைய பாடல்களில் சிறப்பாக வர்ணித்து, இத்தகைய தத்வசாரத்தை, சாதாரண மக்களின் மனதிற்கும் புரியுமாறு எழுதியிருக்கிறார். இந்த கிரந்தத்தை ஒவ்வொரு எழுத்து, சொல், வாக்கியங்களாக மனப்பாடம் செய்துகொண்டே போனால், அது அமிர்தகடலில் மூழ்கி எழுந்ததைப் போல, அதன் சுவையை சுவைத்ததைப் போல, நமது ஆத்மாவிற்கு ஒரு திவ்ய ஜோதியை, ஒளிவிளக்கினைக் காட்டியதுபோல் ஆகின்றது.

அக்க$^{1}$ரதொ$^{3}$ளி கா$^{1}$வ்யதொ$^{3}$ளு ஒ
ந்தக்க$^{1}$ரவ ப$^{3}$ரெதோ$^{3}$தி$^{3}$த$^{3}$வ தே$^{1}$
வர்களிகெ$^{3}$ துஸ்த்யஜனெனிஸி த$^{3}$ர்மார்த்த$^{1}$ கா$^{1}$மக$^{3}$ள |
லெக்கிஸதெ$^{3}$ லோகை$^{1}$க$^{1}$னாத$^{1}$ன
ப$^{4}$க்தி பா$^{4}$க்யவ ப$^{1}$டெ$^{3}$வ ஜீவ
ந்முக்த$^{1}$க$^{3}$ல்லதே$^{3}$ ஹரிகதாம்ருதசார சொக$^{3}$ஸுவதே$^{3}$ ||
(ஸ்ரீதவிட்டலரின் பல-ஸ்ருதி ஸ்லோகம் #16)

அக்கறையுடன், பக்தியுடன் ஹரிகதாம்ருதசாரத்தின் ஒரு எழுத்தை எழுதினால், படித்தால் தேவதேவதைகளுக்கு வேண்டியவனாக, தர்ம, அர்த்த, காம ஆகிய புருஷார்த்தங்களையும் விரும்பாமல் மோட்சத்திற்கு போகும் வழியைப் பிடிக்கிறான் என்கிறார் ஸ்ரீதவிட்டலர். ஹரிகதாம்ருதசாரம் என்றால் ஜீவன் முக்திக்கு உண்டான வழி. தர்க்க, தத்வ, சித்தாந்த, பக்தி, ஞான, வைராக்ய, ஸ்ரவண, கீர்த்தன, தியான ஆகியவற்றைப் பின்பற்றி, உலக நியதியை பின்பற்றியவாறு, பக்தி மார்க்கத்திற்கு அழைத்துக்கொண்டு போகும் சிறந்த வழியாக இருக்கிறது. மனிதன் தான் செய்யும் அனைத்து செயல்களிலும் ஸ்ரீஹரியைக் காணும் சிந்தனை வரவேண்டும். இந்த கிரந்தத்தில் இருக்கும் ஒவ்வொரு தலைப்பும், அதன் கருத்துகளும், நம் மனதில் பக்தியை உண்டு பண்ணி அதை ஒரு மரமாக வளர்த்து, தக்க பலன்களைக் கொடுக்கும். மஹாமஹிமரான ஸ்ரீஜகன்னாததாசர், நம் பூமி செய்த புண்ணியத்தின் பலனே ஆவார்.

***

## ஹரிகதாம்ருதசாரத்தில்
## 9. மொழியின் சிறப்பு
### திருமதி. சாந்தா ரகோத்தமாச்சார்

ஹரிகதாம்ருதசார கிரந்தகாரரான ஜகன்னாததாசரைப் பற்றி முதலில் தெரிந்துகொள்வோம். அவரது இயற்பெயர் ஸ்ரீனிவாசாச்சாரியார். ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் சாஸ்திரங்களைப் படித்து பெரிய பண்டிதரானார். தாசசதுஷ்டயர்களில் ஒருவரான ஜகன்னாததாசர், ஹரிகதாம்ருதசாரத்தை இயற்றியவரானார். வியாசசாகித்யத்தில் மிகச்சிறந்த வல்லுனராக இருந்தார். சுதா முதலான கிரந்தங்களைப் படித்து, பலருக்கு பாடம் எடுத்து வந்தார். சர்வமூல வகுப்புகள், பாராயணம், உபன்யாசம் என பல வழிகளில் வேதவியாசரின் சேவையைச் செய்துவந்தார்.

பின்னர் ஸ்ரீஹரியின் இச்சைப்படி பல நிகழ்ச்சிகள் நடந்து, விஜயதாசர் மற்றும் கோபாலதாசரின் அருளுக்குப் பாத்திரராகி, ஹரிதாசர் ஆனார். தாசகூட மற்றும் வியாசகூட என்று இரு வழிகளிலும் சாதனைகளைப் புரிந்து வாழ்க்கையை நடத்தி வந்தார். ஸ்ரீபாதராஜர், வியாசராஜர், வாதிராஜர் முதலான பலர், ஜகன்னாததாசரின் உய்விற்காக, கன்னடத்தில் பற்பல கீர்த்தனைகளை எழுதியிருந்தனர். கிருஹஸ்தரான ஜகன்னாததாசர் வியாசகூடத்தவர்களிடம் மிகுந்த மரியாதைகளைப் பெற்றிருந்தார். ஹரிதாசர் ஆனபிறகு, இவரும் கன்னடத்தில் சாகித்யங்களை இயற்றியது இவரது பெருமைக்கும் / திறமைக்கும் ஒரு சான்று.

காயத்ரி மந்திரத்தால் சித்தியடைந்த கோபாலதாசரின் அருளைப் பெற்று, அவர் மூலமாக ஆயுள்தானம் பெற்று தமது மனதினை மோட்சத்திற்கான வழியில் செலுத்தி இத்தகைய கிரந்தத்தை இயற்றியுள்ளார். ஹரிகதாம்ருதசாரத்தைப் போன்றதொரு கிருதி ஹரிதாச சாகித்யத்தில் இன்னொன்று இல்லை. இதற்கு 'அணுசுதா' என்ற பெயரும் உள்ளது. ஹரிகதாம்ருதசாரத்தின் ஒவ்வொரு எழுத்து, சொல், வாக்கியமும் மிகச்சிறந்தவை என்று கூறினால் அதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. இதிகாச, புராணங்களைப் போல ஹரிகதாம்ருதசாரமும், சமாதி, குஹ்ய, தர்ஷன என்னும் மூன்று வித மொழிகளை உள்ளடக்கியது. படிப்பவர்களின் தகுதிக்கேற்ப பொருளைக் கொடுப்பது இதன் மொழித்திறனுக்கு நல்ல உதாரணம். நவரசங்களினால் கூடிய காவியம் இது. வாயுதேவரின் அவதாரமான ஸ்ரீமன் மத்வாசாரியாரின் 32 லட்சணங்களையும் எடுத்துரைப்பதுபோல, ஹரிகதாம்ருதசாரம் 32 சந்திகளைக் கொண்டுள்ளது. இதுவும் ஆசாரியரைப் போலவே சுலட்சணங்களையே அடக்கியது. கன்னட சாகித்யமான இதற்கு சமஸ்கிருதத்தில் உரை இருப்பது சிறப்பிலும் சிறப்பாகும். வேறு எந்த பேச்சு மொழிக்கும் சமஸ்கிருதத்தில் உரை இருப்பதாக தெரியவில்லை.

வேத, உபநிஷத், ஸ்ம்ருதி, ராமாயண, மகாபாரத, பாகவத ஆகியவற்றின் சாரங்களைத் தெரித்தவாறு, அவற்றில் உள்ள சம்பவங்களை தக்க இடத்தில் உதாரணங்களாக எடுத்துக் காட்டியுள்ளார் தாசர். அனைத்து சாஸ்திரங்களின் சங்கமாக இக்கிரந்தம் இருப்பதால் தார்மிக, சமூக, ஆன்மிக, புராணிக என அனைத்து விஷயங்களும் ஒரே இடத்திலும் இருந்து, சாதகர்களுக்கு நல்வழியைக் காட்டும் கிரந்தம் - ஹரிகதாம்ருதசாரம்.

பூர்ணப்ரக்ஞரின் மதத்தின் அனைத்து விஷயங்களிலும் முக்கியமாகப் பார்ப்பது - தாரதம்யம். அதையே இந்த கிரந்தம் முழுக்கவும் எடுத்து விளக்கியிருக்கிறார் தாசர். இவ்வுலகில் மட்டுமல்ல, மோட்சத்திலும் சாரூப்ய, சாலோக்ய, சாயுஜ்ய, சாமீப்ய என்று தாரதம்யம் உள்ளது. தாரதம்யத்தின் மகத்துவத்தை நன்கு விளக்குவதற்காகவே, ஒன்பது

சந்திகளை இதற்காக ஒதுக்கியிருக்கிறார். இதன் மிகப்பெரிய சிறப்பு என்னவென்றால், தைத்ய தாரதம்யத்தையும் விளக்கியதே. தாரதம்யம், வியாப்தி, பிம்போபாசன முதலான சந்திகள், மோட்சத்தின் சாதனைகள் என்னவென்று விளக்குகின்றன.

முக்கியமான விஷயம் என்னவென்றால், ஸ்ரீஜகன்னாததாசர், தமது நித்யகர்மானுஷ்டானங்களை முடித்து, மிகுந்த பக்தியுடன் ஹரிகதாம்ருதசாரத்தை எழுத அமர்ந்தால், வர்ணாபிமானி தேவதைகள், தாசரின் முகத்திலிருந்து வரும் ஸ்ரீஹரியின் மகிமைகளை / சிறப்புகளை சொல்வதற்காக அவரது முகத்தில் நின்று, அவருக்கு அருளி, இந்த கிரந்தத்தை இயற்றுவதற்கு உதவி புரிந்தனராம். ஜகன்னாததாசரின் உபாசனா மூர்த்தியான ஸ்ரீலட்சுமி நரசிம்மரே இந்த கிரந்தத்தில் புகழப்படுபவராகவும் உள்ளார்.

ஹரிகதாம்ருதசாரத்தைக் கேட்பது, படிப்பது, எழுதுவது என அனைத்துமே மோட்சத்திற்கான வழியாகும். வியாச சாகித்யத்தை பிம்பம் என்றால், ஹரிகதாம்ருதசாரமானது பிரதிபிம்பம் எனலாம். மங்களாசரண சந்தியின் பாராயணம், தாரதம்யத்தை சரியாகப் புரிந்துகொண்டதற்கான நற்பலனைக் கொடுக்கிறது. மத்வமதத்தின் தத்வங்களான பஞ்சபேத, தாரதம்யம், 84லட்ச ஜீவர்கள், ஜீவர்களின் அ-ஸ்வாதந்த்ர்யம், ஆகிய மிக ஆழமான விஷயங்களை ஜகன்னாததாசர் இந்த கிரந்தத்தில் மிகச் சரளமாக, அற்புதமாக தெரிவித்திருக்கிறார்.

கல்வியறிவு பெறுவதற்கு மற்றும் தடைகளை நீக்குவதற்கு விக்னேஸ்வர ஸ்தோத்திர சந்தி, ஞான, பக்தி, வைராக்ய, ஆயுள், ஆரோக்யம் ஆகியவை ஹரிகதாம்ருதசாரத்தின் பாராயணத்தின் மூலம் கிடைக்கிறது. தைத்ய தாரதம்யசந்தியைப் படித்தால் வரும் பிரச்னைகள் தீர்கின்றன. தமது பல-ஸ்ருதியில் ஸ்ரீதவிட்டலர் பின்வருமாறு கூறுகிறார்.

ஒத்திபஹு விக்4னக3ள தடெதப
ம்ருத்யுவிகெ மரெமாடி3 கா1லன
ப்4ருத்யரிகெ பீகரவ பு1ட்டி1ஸி சகலசித்தி4க3ள |
ஒத்திகொள்ளிஸி வனருஹேக்ஷண
ந்ருத்ய மாடுவனவன மனெயொளு
நித்யமங்கல ஹரிகதா2ம்ருதசார படி2சுவர ||
(ஸ்ரீதவிட்டல பல-ஸ்ருதி ஸ்லோகம் 17)

ஸ்ரீஹரியின் அஷ்டகர்த்ருத்வ (எட்டு நடவடிக்கைகள்), சர்வ ஸ்வாதந்த்ர்ய, சர்வோத்தமத்வ ஆகியவற்றை நன்கு விளக்கியிருக்கிறது ஹரிகதாம்ருதசாரம். ஸ்ரீஹரியின் கருணையை, கருணா சந்தியில், எளிமையாக மிகச் சிறந்த உதாரணங்களுடன் விளக்கியிருக்கிறார். சொல்லியே ஆகவேண்டிய விஷயம் என்னவென்றால், ஹரிகதாம்ருதசாரத்தின் பாராயணத்தை, நாட்டுப்புற ராகத்தில், சங்கீத ஞானம் இல்லாதவர்களும் சொல்லலாம். ராக தாள ஆலாபனைகளுடன் சங்கீத அறிவுள்ளவர்களும் பாடலாம். பஜனை ரூபத்திலும், கோஷ்டி காயனமாகவும் பாடலாம். இந்த கிரந்தத்தின் மொழி பல்வேறு விதங்களில் தளங்களில் இயங்குகிறது. ஒவ்வொரு வரியின் இரண்டாவது எழுத்தும், அந்த பத்தி முழுக்க ஒரே சந்தத்தில் இருந்து, பாமினிஷட்பதி நுடியில், மிகவும் அழகாக இருப்பது, ஜகன்னாததாசருக்கு கன்னட மொழியின் மேல் இருந்த புலமையை திறனை எடுத்துரைக்கிறது.

சமஸ்கிருத வேதசாஸ்திரங்களில் இருக்கும் எண்கணிதத்தின் சிறப்பினை ஸ்ரீமன் மத்வாசாரியார் விளக்கியிருக்கிறார். அதையே தாசர் வியாப்தி சந்தியில், பூஜை பொருட்கள், சாலிகிராமம், ஆகியவற்றில் ஸ்ரீஹரியின் இருப்பைத் தெரிவிக்கிறார். இத்தகைய செறிவுள்ள பொருளடங்கிய விஷயங்களின் மூலம், இந்த கிரந்தத்தின் மூலம், கன்னட மொழியின்

மேன்மை மேலும் வளர்கிறது.

ஹரிகதாம்ருதசாரத்திற்கு முன்னர், கன்னடத்தில் வேறு எந்த கிரந்தத்திலும் எண் கணிதத்தை விளக்கி எழுதியிருக்க வில்லை. தாசர் விபூதி சந்தியில் பொருட்களில் ஸ்ரீஹரியின் இருப்பை நினைப்பதற்கான வழியைத் தெரிவிக்கிறார்.
ஹரிகதாம்ருதசாரத்தின் முதல் சந்தியின் முதல் ஸ்லோகம் பின்வருமாறு இருக்கிறது.

ஸ்ரீரமணி க1ர க1மல பூஜித
சாருசரண சரோஜ பி3ரம்ம ச
மீர வாணி ப2ணீந்த்3ர வீந்த்3ர ப4வேந்த்3ர முக2 வினுத ।
நீரஜ ப4வாண்டோ3த3ய ஸ்தி2தி
காரணனே கை1வல்ய தா3யக
நாரசிம்மனே நமிபே1 க1ருணிபுதெ3மகெ3 மங்க3ளவ ।।
(மங்களாசரண சந்தி ஸ்லோகம் 1)

லட்சுமிதேவியால் பூஜிக்கப்படும் பாதங்கள், பிரம்மா முதலானவர்களால் பூஜை செய்யப்படும், ஸ்ருஷ்டி முதலான அஷ்டகர்த்ருத்வத்தை செய்யும் நரசிம்மனை வணங்குகிறேன். நரசிம்மர் மிகுந்த கருணையுடன் மங்களத்தை அருளட்டும் என்று வேண்டுகிறார். அதாவது, சாதகர்கள் லட்சுமிதேவியின் மூலமாக ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெறவேண்டும் என்பதை இறுதியான 32வது சந்தியான கக்ஷதாரதம்ய சந்தியின் முதல் ஸ்லோகத்தில் சொல்கிறார்.

ஸ்ரீரமண ஸர்வேஷ ஸர்வக3
ஸாரபோ4க்த ஸ்வதந்த்ர தோ3ஷவி
தூ3ர ஞானானந்த3 பலவைஷ்வர்ய கு3ணபூர்ண ।
மூரு கு3ணவர்ஜித சகு3ண சா
கார விஷ்வ ஸ்திதி லயோத3ய
கா1ரண க்ருபாசாந்த்ர நரஹரி ஸலஹோ சஜ்ஜனர ।।
(கக்ஷதாரதம்ய சந்தி ஸ்லோகம் 1)

ஹரிகதாம்ருதசார கிரந்தம் மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய கிரந்தம் என்பது இந்த ஸ்லோகத்தைப் பார்த்தால் புரியும். பக்தர்கள் லட்சுமிதேவியின் மூலம் சர்வேசனான ஸ்ரீஹரியிடம் போய், அவர் மூலமாகவே மோட்சத்தை அடையமுடியும் என்னும் செய்தியினை இந்த கிரந்தத்தின் துவக்க மற்றும் இறுதி சந்திகளில் தாசர் கொடுத்திருக்கிறார்.
குருஸ்ரீசவிட்டலர் – இதய சுத்தியுடன் ஹரிகதாம்ருதசாரத்தை பாராயணம் செய்தால், கேட்டால், எழுதினால் எப்போதும் ஸ்ரீஹரி நம்மைக் காப்பான் என்கிறார்.

ஸ்ரீதவிட்டலர் – உள்ளங்கையில் இருக்கும் நெல்லிக்கனி எவ்வளவு தெளிவாகத் தெரியுமோ, அதுபோலவே ஜகன்னாத தாசரும் ஹரிகதாம்ருதசாரத்தின் அனைத்து சந்திகளையும் மிகத் தெளிவாக எழுதியிருக்கிறார். பேச்சு மொழியான கன்னடத்தில் இந்தக் கிரந்தம் இருந்தாலும், சஜ்ஜனர்களுக்கு, காவிய ரசிகர்களுக்கு சமஸ்கிருத மொழியின் விஷயத்தை, ஆழத்தையே இந்தக் கிரந்தம் கொடுக்கிறது. நவரசங்களைக் கொண்டது, கம்பீர நடையைக் கொண்டது. உவமைகளைக் கொண்டது. காவிய அலங்காரங்களுடன் கூடியது என்கிறார் ஸ்ரீதவிட்டலர்.

கோ3ளக1வெ கு1ண்ட3க்னி க1ரணவு
மேலொத3கி3ப3ஹ விஷய ஸமிதெ4யு

கா3ளி யத்னவு கா1ம தூ4மவு சன்னிதா3னார்ச்சி |
மேளனவெ ப்ரஜ்வாலெ கி1டிக3ளு
தூ1ளிதா3னந்த3க3ளு த1த்த1
த்கா1ல மாது1க1ளெல்ல மந்த்ராத்4யாத்1ம யக்ஞவிது ||
(விபூதி சந்தி ஸ்லோகம் 18)

இந்த உடல் ஒரு ஹோமகுண்டம். ஹோமத்தில் பயன்படுத்தும் திரவியங்களை, நமது உடலின் உறுப்புகளுக்கு ஒப்பிட்டு, அதிலிருந்து கிடைக்கும் பலன்களை, பிம்பரூபியான ஸ்ரீஹரிக்கு அர்ப்பணம் செய்வதே சிறந்த ஆன்மிக யக்ஞம் என்று இந்த ஸ்லோகத்தில் ஜகன்னாததாசர் விளக்கியிருக்கிறார்.

ஜமகண்டி வாதிராஜாசார்யரின் சமஸ்கிருத உரைக்கு கன்னட பொருள் எழுதியவர் பண்டிதர் கேசவாசாரிய ஜாலிஹாள.

பாவதூசன – ஆத்யாத்ம யக்ஞம்.
கோளகேதி – ஊழியம் செய்யும் சேவகன்.
இந்த்ரியாதி கரணானி அக்னய: | சன்னிதானம் சன்னிகர்ஷ | தூளிதா = தோன்றிய விஷயம் = ஹரிவாசகர்ண ரூபத்வாத்.

இதன் பொருள்: காது = ஹோமகுண்டம்.
நல்ல விஷயங்களைக் கேட்பது = நெருப்பு.
அந்தந்த நேரங்களில் நடக்கும் பேச்சுகள் = மந்திரங்கள்.
ஏனென்றால், கேட்பது அனைத்தும் ஸ்ரீஹரியைப் பற்றிய விஷயங்களே ஆகின்றன.

'ஷப்தாதிவிஷயானன்யே இந்த்ரியாக்ருபுஜஹ்வதீ'. சொற்களில் கிடைக்கும் ஆனந்த அற்புதத்தை இந்திரியங்கள் என்னும் நெருப்பில், ஞானிகள் சமர்ப்பிக்கின்றனர் என்று கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. அதையே இங்கு தாசர் விவரிக்கிறார். ஸ்தூல, சூக்ஷ்ம தேகங்களே அக்னிகுண்டம். கண், காது, மூக்கு ஆகிய இந்திரியங்களே நெருப்பு. அந்த இந்திரியங்களின் வேலையே

சமித்து. அதற்காக எடுக்கப்படும் முயற்சி = காற்று. இந்திரியங்களின் வேலைக்காக சேர்க்கப்படும் பொருட்களே ஜ்வாலை. போகப் பொருட்களை சேர்ப்பது = விசேஷ ஜ்வாலை. அதிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியே ஒளி. பேசும் பேச்சுகளே மந்திரம். இப்படி அனைத்தையுமே ஸ்ரீஹரியை நினைத்துக்கொண்டே செய்தால் அதுவே சிறந்த யக்ஞம் என்று சொல்லலாம். சங்கர்ஷண ஒடெயர், தாமிரபரணி ஆச்சார் ஆகியோரின் ஹரிகதாம்ருதசார உரைகள் மிகச் சிறப்பானவையாக இருக்கின்றன.

ஹரிகதாம்ருதசாரத்தின் பல்லவி ஸ்லோகத்தைப் பார்ப்போம்.
ஹரிகதா2ம்ருதசார கு3ருக3ள
கருணதிந்தா3பநிது பே1ளுவே
பரம ப4கவத்3ப4க்தரித3னாத3ரதி கேளுவுது ||

ஸ்ரீஹரியைக் குறித்து எனக்குத் தெரிந்தவற்றை, குருகளின் அருளினால் சொல்கிறேன். ஸ்ரீஹரியின் சிறந்த பக்தர்கள் அதைக் கேளுங்கள். இதுவே இந்த பல்லவியின் மேலோட்டமான பொருள். வேத, உபநிஷத்கள், புராணம், ஸ்ருதி, ஸ்ம்ருதி, சர்வமூலகிரந்தங்கள், பகவத்கீதா என அனைத்தும் ஹரிகதா அமிர்தமே ஆகும். அந்த அமிர்தத்தின் சாரத்தை இந்த கிரந்தத்தில் சொல்கிறேன். குருகளின் கருணையால் சொல்கிறேன். கோபாலதாசர், விஜயதாசர், தமக்கு சுதா-மங்களம் செய்வித்த குருகள்,

மூலகுருவான மத்வாசாரியர், அவரின் மூல ரூபமான வாயு–பாரதி, பிரம்மா–சரஸ்வதியின் கருணையால் என்பதையே 'குருகருணதிந்தா' என்கிறார். பனிது பேளுவே என்று சொல்வதிலிருந்து ஜகன்னாததாசரின் பணிவு வெளிப்படுகிறது. ஹரிதாசர் ஆவதற்கு முன்னர், ஜகன்னாததாசருக்கு தாம் ஒரு சிறந்த பண்டிதர், வித்வாம்சர் என்னும் கர்வம் இருந்தது. ஆனால் ஹரிகதாம்ருதசாரத்தை அவர் மிகவும் பக்குவமடைந்த நிலையில் எழுதியாகத் தெரிய வருகிறது. எனக்குத் தெரிந்ததை சொல்கிறேன் என்று சொல்வதின் மூலம் அவரது கர்வம் அழிந்தது என்றும் தெரிகிறது.

'பரம பகவத்பக்தரு ஆதரதி கேளுவுது'. மோட்சத்தை விரும்புபவர்கள் அனைவரும் பகவத் பக்தர்களே. ஆதரதி கேளுவுது என்று தாசர் கேட்டுக்கொள்கிறார். அந்த பரமபகவத் பக்தர்கள் யார் என்றால் அது இந்திராதி தேவதைகளே. தம் ஞானத்தை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்யும் பக்குவமடைந்த ஜகன்னாததாசர் இந்த தேவதைகளை உத்தேசித்தே சொன்ன வாக்கியம் – பரம பகவத்பக்தரு ஆதரதி கேளுவுது.

ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரமானது சாதாரண மக்கள், ஞானிகள், தேவதைகள் என அனைவருமே கேட்கத் தகுந்தது என்பது இதிலிருந்து தெரியவருகிறது.

ஜகவனெல்லவ நிர்மிசுவ நா
ந்மொகனொளகெ தானித்து சலஹுவ
ககனகேஷனொளித்து சம்ஹரிசுவனு லோககள |
ஸ்வகதபே$^{4}$த$^{3}$ விவர்ஜிதனு ச
ர்வக சதானந்தெய்கதேஹனு
பகெபகெய நாமதலி கரெசுவ ப$^{4}$குதரனு பொரெவ ||
(கருணா சந்தி ஸ்லோகம் 8)

ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோட்சம் என்னும் அஷ்டகர்த்ருத்வத்தையும் ஸ்ரீஹரி தானே செய்வதால் – நான்முகனொளகெ தானித்து சலஹுவ, ககனகேசனொளித்து சம்ஹரிசுவனு லோககள' - என்பதுபோல, பிரம்மா, ருத்ரர் ஆகியோர் அந்த வேலைகளை செய்வதற்கு நியமிக்கப்பட்டவர்கள் மட்டுமே என்கிறார்.

இப்படியாக ஹரிகதாம்ருதசார கிரந்தமானது, அனைத்து சாஸ்திரங்களின் சாரத்தையும் உள்ளடக்கிய அற்புதமான கிரந்தமாக இருக்கிறது. ஞானத்தை வேண்டுபவர்களுக்கு ஒரு நன்னீர்க் குளமாக இருக்கிறது. இந்த காவியத்தில் நீச்சலடிக்கலாம், ப்ரோக்ஷணம் செய்து கொள்ளலாம், குடிக்கலாம், ஆசமனம் செய்யலாம், கேட்டு மகிழலாம். தகுதிக்கேற்ப, புத்திக்கேற்ப கேட்டு, படித்து, மனப்பாடம் செய்து ஹரிவாயு குருகளின் அருளுக்குப் பாத்திரராகி உய்வதற்கு மிகச்சிறந்த கன்னட மொழிக் கிரந்தம் ஹரிகதாம்ருதசாரம். பாராயணம் செய்தால், கேட்டால் ஹரிகதாம்ருதசார கிரந்தத்தின் மொழி நடையால் நம்முள் இருக்கும் 72,000 நாடிகளும் சுகமான அனுபவத்தைப் பெறுகின்றன.

***

# ஹரிகதாம்ருதசாரத்தில்

## 10. நரசிம்மரை வணங்குதல்

### திரு. ஹணவந்த தாஸகாம்வகர

விஜயநகர சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சியில், அதனுடன் தாசகூட, வியாஸகூடங்களும்கூட சிறிது தொய்வைச் சந்தித்தன. சிறிது காலத்திற்குப் பிறகு மீண்டும் அவை தலைதூக்கத் துவங்கியது, மந்திராலயப் பிரபுகளின் கருணையினாலும், அந்த க்ஷேத்திரத்தின் மகிமையினாலும்தான். பற்பல சாகித்யங்கள் அங்கு இயற்றப்பட்டன. பல தாசர்களுக்கு அவரது அருள் கிட்டியது.

ராய்ச்சூரை சுற்றிலும் பல ஹரிதாசர்கள் தோன்றினர். சாகித்யங்கள் பிறக்கத் துவங்கின. தாச சதுஷ்டயர்கள் என்று புகழ்பெற்றவர்கள் – புரந்தரதாசர், விஜயதாசர், கோபாலதாசர் மற்றும் ஜகன்னாததாசர் ஆவர். விஜயதாசரின் சிஷ்யர் கோபாலதாசர். இவரது சிஷ்யர் மானவியின் ஜகன்னாததாசர். இவரது காலம் 1728-1809. ஜகன்னாதவிட்டலா என்பது இவரின் அங்கிதம். ஹரிதாச சாகியத்தில் முக்கியப் பங்காற்றிய தாசர் இவர். மாத்வசாகியத்தில் அபாரமான ஞானிகள் என்றும், மகிமை பொருந்தியவர் என்றும், ரங்கனொலித, ரங்கோலி தாசர் என்றும் பெயர் பெற்றவர். மானவியில் இவர் வசித்த வீடு இன்று ஒரு ஆலயமாக இருக்கிறது. இங்கு இருக்கும் ஒரு கம்பத்தில் இவரது சான்னித்யம் இருக்கிறது என்பது அனைவரின் நம்பிக்கை. இன்றும் அங்கு பூஜைகளை ஏற்றுக் கொண்டிருக்கிறார் தாசர்.

தி3ட்ட1 ஜகன்னாதவிட்டல மூர்திய
க4ட்1யாகி மனதொ3ளகி3ட்டுகொண்டு
தட்ட1தி ஸ்வாம்ஷவ இட்டு க1ம்ப3திபோ1த3
த1ட்ட குரு ஜகன்னாதவிட்டல தூ3த1 |

அங்கு தாசர் வரைந்த படங்கள், அவரின் தம்புரி, ஒரகுமணே, அவர் பயன்படுத்திய தட்டுகள், ஸ்ரீ சத்யபோதர் அருளிக் கொடுத்த பாதுகைகள் ஆகியன உள்ளன. திவான் பூர்ணையா சமர்ப்பித்த பல்லக்கு, பல பிரதிமைகள், ஸ்ரீலட்சுமி நரசிம்மரின் பிரதிமை, நரசிம்ம சாலிக்ராமங்கள் மானவியில் உள்ளன. தாசர் இயற்றிய பாடல்கள் ஆயிரக் கணக்கில் உள்ளன. அவற்றில் 200 மட்டுமே கிடைத்துள்ளன. உகாபோகங்கள், சுளாதிகளும் இயற்றியிருக்கிறார். சுமார் 600 ஸ்லோகங்களில் த்ரிபதி நுடியில் தத்வசுவ்வாலி இயற்றியுள்ளார். ஸ்ரீமதாசார்யரின் தத்வசங்க்யான, தத்வவிவேக, தத்வநிர்ணய, தத்வபிரகாசிகா ஆகியவற்றின் தத்வங்களையே இவரது கீர்த்தனைகள் சொல்கின்றன. தாரதம்யத்திற்கு இணங்கி ஸ்ரீஹரிகுருகளை போற்றி புகழ்ந்து பாடிய சிறந்த கிரந்தம் – ஹரிகதாம்ருதசாரம். த்வைத சித்தாந்தத்தின் களஞ்சியமாக இது போற்றப்படுகிறது. அனைத்து கற்றறிந்த அறிஞர்களின் ஒப்புதலையும் பெற்றிருக்கிறது. பக்தர்கள் இதனை மிகுந்த பக்தியுடன் படிக்கின்றனர். மனப்பாடமும் செய்கின்றனர். 32 சந்திகளில் மொத்தம் 988 ஸ்லோகங்களைக் கொண்டுள்ள மிகப்பெரிய கிரந்தம் இதுவாகும்.

ஸ்ரவண மனகா1னந்த3 வீவுது3
ப4வஜனித1 து3க்க2க3ள க1ளெவுது3
விவித3 போ4க3க3ளிஹபரங்க3ளலித்து1 ஸலஹுவுது3 |
பு4வன பா1வனனெனிப1 லகு1மி
த3வன மங்க3ளக1தெ1ய ப1ரமோ
த்ஸவதி3 கி1விகொ1ட்டாலிபு1து3 பூ4ஸுரரு தி3னதி3னதி3 ||
(சந்தி 2 - ஸ்லோகம் 1)

இந்த கிரந்தத்தில், ஸ்ருஷ்டி முதலான அஷ்டகர்த்ருத்வங்கள், ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வம், ஸ்ரீஹரியின் கருணை, தேவ-தானவ தாரதம்யங்கள், ஜீவர்கள் சாதனைகளை செய்யும் முறைகள், பக்தியின் சிறப்புகள், தியானம் செய்யும் முறைகள், பிம்பரூபியைக் காணும் வழிகள், தத்தஸ்வாதந்த்ர்ய என்று இவை அனைத்தையும் குறித்து மிகவும் விளக்கமாக இந்த கிரந்தத்தை இயற்றியுள்ளார் தாசர். கிரந்தத்தின் துவக்கத்திலேயே நரசிம்மதேவரின் வர்ணனை இருக்கிறது.

ஸ்ரீநரசிம்மரைக் குறித்தே பற்பல பாடல்களை தாசர் இயற்றியுள்ளார். நரசிம்மா பாஹி லட்சுமி நரசிம்மா பாஹி என்று வேண்டிக்கொண்டு –

நரசிம்ம நமிபெ[1] நானின்ன சாருசரண க[1]மலக்கெ[1]
நீ என்ன க[1]ரவபி[1]டி[3]து[3] நிஜ ஷரணனெந்தெ[3]னிஸொ
பூ[4]சுர க[1]ருணாம்பு[3]தெ க[3]ருடவாஹன லக்ஷ்மீ நரசிம்ம |

கருடவாகனனான ஸ்ரீ லட்சுமி நரசிம்மரை இங்கு வணங்கியிருக்கிறார். ஏன்? இந்தக் கேள்விக்கான விடையும் இதே பாடலில் இருக்கிறது. புரந்தரதாசரிடமிருந்து கனவில் அங்கிதம் வாங்கியவர் விஜயதாசர். விஜயதாசரின் சிஷ்யர் கோபாலதாசர். இவர்கள் இருவரின் சிஷ்யரே ஜகன்னாததாசர். ஜகன்னாததாசரின் தந்தையான நரசிம்மதாசரும், புரந்தரதாசரிடமிருந்து கனவில் அங்கிதம் வாங்கியவரே. இவரைக் குறித்தே ஜகன்னாதாசர் தன் பாடலில் –

நம்பி[3]தே[3] நின்ன பா[1]தா[3]ம்பு[3]ஜ நரசிம்ஹதாஸராயா..

இந்தப் பாடலின் சரணத்தில்,

முனி உபே[1]ந்திரராயரு நிம்ம சரிதெ[1]ய கே[1]ளி
ஸானுராக[3]தி ஸர்வ மந்தி[1]ரோப[1]தே[3]ஷத[3]
ஆனுபூ[1]ர்வக[1] மாடி, அதி[1] ஸந்தோ[1]ஷதி[3] கொ[1]ட்ட[1]ரு
ஸ்ரீ நரசிம்ம பிரதிமெ சாலிக்ராம ||
அல்லதே... கி[1]ங்க[1]ரனெனிஸி புரந்தரதாசரெ தாஸராயா ||

அவரிந்த[3]ங்கித[1]வஹிஸி நிஸ்ஷங்கெ1யிந்த[3] நீனு தாசராயா ||

என்று அவர் கனவில் அங்கிதம் வாங்கிய கதையை விவரித்துள்ளார். இங்கு சொல்லப்பட்டிருக்கும் உபேந்திரராயர் (தீர்த்தர்), மந்திராலய ராயர் மடத்தின் 11ம் பீடாதிபதி ஆவார். இவரது காலம் 1725 - 1728). இந்த துறவியிடமிருந்து நரசிம்மதாசருக்கு, நரசிம்ம பிரதிமை, நரசிம்ம சாலிக்ராமங்கள் கிடைத்தன என்று பாடியுள்ளார். விஜயதாசரின் சிஷ்யரான திவான் பங்கநாமத திம்மண்ணரின் சிஷ்யரே நரசிம்மதாசர். உபேந்திரதீர்த்தரின் பூரண ஆசியைப் பெற்ற நரசிம்ம பிரதிமையானது, மிகப் பழமையும் பெருமையும் வாய்ந்தது. ஆகவே ஜகன்னாததாசரும் அவற்றை மிகுந்த பக்தியுடன் பூஜித்து வந்தார். அவற்றைப் பற்றி பாடல்கள் பாடினார்.

தன்னுடைய இஷ்டதெய்வம், குலதெய்வம் என்று மிகுந்த பக்தியுடன் பூஜித்து வந்தார். இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென்றால், மானவியின் அருகிலேயே இருக்கும் சிக்கலபரவி கிராமத்தில் இருக்கும் அஸ்வத்த லட்சுமி நரசிம்மதேவர் ஆலயம். தாசசாகித்யத்தை துவக்கியதில் பெரும் பங்காற்றிய முளபாகல் மடத்தின் தலைவரான ஸ்ரீபாதராயர், தனது பயணத்தின்போது சிக்கலபரவிக்கு வந்து, அஸ்வத்த மரத்தில் லட்சுமி நரசிம்மரை பிரதிஷ்டை செய்து, இந்த கிராமத்தை ஒரு க்ஷேத்திரமாக மாற்றினார். இந்த

# 10. நரசிம்மரை வணங்குதல்

லட்சுமி நரசிம்மரின் அருளினாலேயே பிறந்தவர்

விஜயதாசர். இந்த லட்சுமி நரசிம்மரை பூஜித்தவர்கள் ஜகன்னாததாசர் மற்றும் விஜயதாசரின் பிற சிஷ்யர்கள். தமது குருகள் பூஜித்த தெய்வம் என்று இந்த லட்சுமி நரசிம்மரை ஜகன்னாததாசர் மிகவும் விரும்பி பக்தியுடன் தானும் பூஜித்து வந்தார். இஷ்டதெய்வம் என்று கொண்டாடினார். இவரைக் குறித்து பாடல்களையும் இயற்றினார். ஹரிகதாம்ருதசாரத்தில் தாரதம்யத்தின்படி ஹரிகுருகளை பாடியிருக்கிறார். மங்களாசரண சந்தியில் முதல் ஸ்லோகமே இவ்வாறாக இருக்கிறது.

ஶ்ரீரமணி க$^{1}$ரக$^{1}$மல பூ$^{1}$ஜித
சாரு சரண சரோஜ பிரம்ம ச
மீர வாணி ப$^{2}$ணீந்திர வீந்தி$^{3}$ர ப$^{4}$வேந்தி$^{3}$ர முக$^{2}$ வினுத$^{1}$ |
நீரஜப$^{4}$வாண்டோ$^{3}$த$^{3}$ய ஸ்தி$^{1}$தி$^{1}$
கா$^{1}$ரணனே கை$^{1}$வல்யதா$^{3}$யக$^{1}$
நாரசிம்ஹனே நமிபெ க$^{1}$ருணிபு$^{1}$தெ$^{3}$மகெ$^{3}$ மங்க$^{3}$ளவ ||

அனைத்து விருப்பங்களையும் பூர்த்தி செய்பவனான நாரசிம்மனை, தனக்கு (நமக்கு) அருளுமாறு வேண்டிக் கொள்கிறார். ஶ்ரீஹரியின் மனைவியான லட்சுமிதேவிக்கு, ரமணி என்று ஒரு காரணப்பெயர் இருக்கிறது. (ஶ்ரீ என்றால் நாராயணன் என்றும் லட்சுமி என்றும் பொருள் உண்டு). மிகவும் அழகான வடிவுடையவள். ஆகையால் ரமணி என்று அழைக்கப்படும் இத்தகையவளின் கைகளால் பூஜிக்கப்படும் ஶ்ரீஹரியானவர் சாருசரணசரோஜ மகாலட்சுமி தேவியைவிட சிறந்தவர் ஆவார். அத்தகைய ஶ்ரீஹரியின் அழகான பாத-கமலங்களை, மகாலட்சுமி பூஜிக்கிறார். வினுத என்றால் ஸ்ருதி மற்றும் ஸ்ம்ருதிகளால் போற்றப்படுபவர் என்று பொருள்.

நீரஜபவாண்டோதய ஸ்திதிகாரண என்று, படைத்தல் முதலான காரியங்களுக்கு ஶ்ரீஹரியே காரணம் என்று விளக்குகிறார். அவரே அனைத்தையும் படைக்கிறார், காக்கிறார், அழிக்கிறார். தோஷங்கள் இல்லாதவர் மற்றும் மோட்சத்தைக் கொடுக்கக் கூடியவருமாக இருக்கிறார் நரசிம்மர் (நாராயணன்). லட்சுமிதேவியிடமிருந்து பூஜையைப் பெற்றுக்கொள்பவர். இத்தகையை கடவுளை வணங்கி, எமக்கு அருள்வாயாக என்று வேண்டிக்கொள்கிறார். முன்னர் 'பக்தாபராதசஹிஷ்ணு சந்தியில்' மறுபடி ஶ்ரீநரசிம்மரை இப்படியாக வணங்குகிறார்.

ஶ்ரீலகுமிவல்லபகெ$^{3}$ ஸம க$^{1}$ரு
ணாளுக$^{3}$ள நா காணெனெல்லு கு$^{1}$
சேலனவலிகெ$^{3}$ மெச்சி கொ$^{1}$ட்டனு சகலசம்பத$^{3}$வ |
கே$^{1}$ளிதா$^{3}$க்ஷண வஸ்த்ரகள பா$^{1}$
ஞ்சாலிகி$^{3}$த்தனு தை$^{3}$த்யனுத$^{3}$ரவ
ஸீளி ஸந்தை$^{1}$ஸித$^{3}$னு பிரஹ்லாத$^{3}$ன கி$^{1}$ருபாஸாந்திரா ||
(சகலதுரித நிவாரண சந்தி ஸ்லோகம் #1)

இது சகலதுரிதநிவாரண சந்தி ஆகும். ஶ்ரீஹரியின் தசாவதாரங்களில், நரசிம்ம அவதாரத்துடன், மகாபாரத சூதாட்ட சமயத்தில், திரௌபதியின் மானத்தை உடனடியாகக் காத்தவர் கிருஷ்ணன் என்று கிருஷ்ணாவதாரத்தையும் புகழ்கிறார். மிகுந்த பக்தியுடன், அசைக்க முடியாத நம்பிக்கையுடன் ஶ்ரீஹரியை அழைத்தால், ஓ என்று சொல்லாமல் இருப்பானா, நம் தவறுகளை மன்னிப்பவன், கஷ்டங்களை தூர விலக்குபவன், அவனே நம் அப்பன் ஶ்ரீஹரி. செய்த தவறுகளை எண்ணாமல், அவற்றை மன்னித்து அவனின் பக்தர்களுக்கு அருள்பவனான ஶ்ரீஹரி மிகுந்த கருணை கொண்டவன். பக்தியுடன் சுதாமன் சமர்ப்பித்த அவலை ஏற்றுக்கொண்ட ஶ்ரீகிருஷ்ணன் அவனுக்கு அருளினான்.

ஸ்ரீலட்சுமிபதிக்கு சமமான தயாளு (கருணை கொண்டவர்) இந்த உலகத்தில் வேறு யாரும் இல்லை. அவர் கருணைக்கடல் என்பதை இந்த ஸ்லோகத்தில் பற்பல உதாரணங்களுடன் விளக்கியிருக்கிறார்.

சுதாமனின் மனைவி கிருஷ்ணருக்காகக் கொடுத்தனுப்பிய ஒரு கைப்பிடியளவு அவலை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டு, அவனுக்கு ஏகப்பட்ட செல்வத்தை அருளி காப்பாற்றினார். கௌரவர்களின் சபையில் பற்பல அறிஞர்களுக்கு நடுவில் தன் சகோதரனின் மனைவி என்றும் பாராமல் திரௌபதியின் சேலையை இழுத்து அவளுக்கு அவமானம் இழைத்த தருணத்தில் – நீயே கதி கிருஷ்ணா, எனக்கு நீயே கதி என்று பாஞ்சாலி கூப்பிட்டபோது, மிகுந்த கருணையுடன் குறையாக சேலைகளை வழங்கி அவள் மானம் காத்தார்.

தைத்யனான ஹிரண்யகசிபுவைக் கொல்வதற்கு விஷ்ணுவே நரசிம்மராக அவதாரம் எடுக்கவேண்டியதாயிற்று. பிரகலாதனின் பக்திக்கு மெச்சி, அவனின் வாக்கினை உண்மை என்று நிரூபிப்பதற்கு, அசுரன் ஹிரண்யகசிபுவின் உடலைக் கிழித்து அவனைக் கொன்றார். பக்தர்களைக் காப்பாற்ற ஓடி வந்த கருணைக்கடல், பக்தர்களின் சொல்லிற்குக் கட்டுப்பட்டவர் என்று ஸ்ரீஹரியின் நற்குணங்களை சொல்கிறார். மேலும் 32வது சந்தியான கக்ஷதாரதம்ய சந்தியில் நரசிம்ம வர்ணனை வருகிறது.

ஓதி$^{3}$ஸுவ கு$^{3}$ருக$^{3}$ளனெ ஜரிது ஸ
ஹோத$^{3}$ரரிகு$^{1}$பதேஷிஸிதி மஹ
தா$^{3}$தி$^{3}$கா$^{1}$ரண சர்வகு$^{3}$ணஸம்பூ$^{1}$ர்ண ஹரியெந்து$^{3}$ ।
வாதி$^{3}$சுவி த்$^{1}$வத்$^{1}$ப$^{1}$திய தொ$^{3}$ரெ
ந்தா$^{3}$த$^{1}$னுஜ பெசகொ$^{1}$ளளு ஸ்த$^{1}$ம்பதி$^{3}$
ஸ்ரீத$^{3}$னாக்ஷண தோ$^{1}$ரிசித$^{3}$ பிரஹ்லாத சலஹெம்ம ।।
(கக்ஷாதாரதம்ய சந்தி ஸ்லோகம் #36)

கம்பத்தில் தரிசனம் அளிக்குமாறு வேண்டிக்கொண்ட பிரகாலதனைக் குறித்தே இந்த ஸ்லோகம் இருக்கிறது. தாரதம்யத்தில் 19ம் வகுப்பில் வருபவர் பிரகலாதராஜர். அசுர அம்சம் கொண்ட குருகளான சுக்ராசாரியரின் மக்களான சண்டாமர்கர் சிவ சர்வோத்தமத்வத்தை அனைவருக்கும் சொல்லிக் கொடுத்திருந்தனர். இவர்களின் மாணவர்களான பிரகலாதன், சஹ்லாதன் இருவருக்கும் அது சரியாகப் படவில்லை.

இந்த உலகத்தைப் படைத்தவனும், அனைத்து நற்குணங்களைக் கொண்டவனும் ஆனவன் ஸ்ரீஹரி ஸ்ரீமன் நாராயணன் மட்டுமே. ஆனால் இதைப் பற்றி எதுவும் கற்றுத் தராததால், பிரகலாதர், தன் சகோதரருக்கும், தன் நண்பர்களுக்கும், ஸ்ரீமன் நாராயணனே சர்வோத்தமன் என்றும், மஹத்தத்வாதி அபிமானி தேவதைகளான பிரம்மன் முதலானவர்களின் பிறப்பிற்கும் ஸ்ரீஹரியே காரணம் என்றும், அவர்களால் பூஜிக்கப்படுபவனும், அனைத்து உலகங்களும் இந்த ஸ்ரீமன் நாராயணனின் சொல்லிற்குக் கட்டுப்பட்டவையே என்றும் உபதேசித்தார். குரு நாரதரின் உபதேசத்தால் விசேஷ ஞானத்தைப் பெற்ற பிரகலாதன், ஸ்ரீஹரியின் சிறந்த பக்தன். ஸ்ரீமன் நாராயணனே சிறந்தவர், அனைத்து இடங்களிலும் பரவியிருப்பவர் என்றும் குரு மற்றும் தந்தை ஹிரண்யகசிபுவிடம் வாதிட்டார்.

அசுரனான ஹிரண்யகசிபு மிகுந்த கோபத்துடன், உன் கடவுள் எங்கு இருக்கிறான் என்று காட்டு என்று சொல்லி, மிகுந்த ஆத்திரத்துடன் கர்ஜித்தபோது, தூணிலிருந்து வெளிப்பட்டார் நரஹரி.தன் பக்தனான பிரகலாதனின் நம்பிக்கையை உண்மையாக்கினார். தூணில் உக்ர நரசிம்மர் தோன்றினார். திடமான பக்திக்கு மதிப்பளித்தார். இத்தகைய ஸ்ரீஹரியின்

# 10. நரசிம்மரை வணங்குதல்

விசேஷமான மகிமைக்கு, அவதாரத்திற்குக் காரணமான பிரகலாதராஜர், நமக்கும் அத்தகைய பக்தியை வழங்கட்டும் என்று வணங்குகிறார் ஸ்ரீஜகன்னாததாசர்.

பி1ரதி1தி3வசதி3 ஸ்ருதி1 ஸ்ம்ருதி1க3ளிந்த3
சம்ஸ்து1தி1சுத1 லட்சுமி ப1திகு3ணவ
க்1ருதி1பதி1 ஸ்ருஷ்டிஸ்தி1தி1 லய கா1ரண
இத1ர சர்வதே3வதெ1க3ளிகி3ல்லெம்புதே3
ப2லவிது பா3ள்து3த3க்கே1

***

# ஹரிகதாம்ருதசாரத்தில்

# 11. சங்கீதத்தின் அம்சங்கள்

## திருமதி. K. வாருணி ஜயதீர்த்தாச்சார்

14ம் நூற்றாண்டில் ராக தாளங்களுடன் இசையமைக்கப்பட்ட கன்னட ஹரிதாச பாடல்களை நாம் நரஹரி தீர்த்தரின் படைப்புகளில் காணலாம். அவரது படைப்புகள் மிகச்சிலவே கிடைத்துள்ளன. பின்னர் ஸ்ரீபாதராஜரிடமிருந்து துவங்கி வியாசராஜர், வாதிராஜர் என தாச பரம்பரை வளர்ந்தது. ஹரிதாசர்களான புரந்தரதாசர், கனகதாசர், பிரசன்ன வெங்கடதாசர், விஜயதாசர், கோபாலதாசர், ஜகன்னாததாசர் ஆகியவர்களின் சீரிய முயற்சியில் தொடர்ந்த தாச பரம்பரை இன்று வரை வளர்ந்து வந்திருக்கிறது. ஹரிதாச சாகித்யம் இசையுடன் இரண்டறக் கலந்து வளர்ந்தது. கன்னடத்திலும் வேறு மொழிகளிலும்கூட பக்தி சாகித்யங்கள் நிறைய வந்திருக்கின்றன. ஆனால், ஆன்மிகத்துடன் சாஸ்திரிய சங்கீதத்தின் அம்சங்களையும் சேர்த்துக் கொண்ட பக்திசாகித்யம் எது என்று கேட்டால் அது ஹரிதாசர்களின் படைப்புகள் மட்டுமே. புகழ் பெறாத அல்லது நமக்குத் தெரியாத ஹரிதாசர்கள் இன்னும் எவ்வளவோ பேர் இருக்கின்றனர். இதுவரை தெரிந்த ஹரிதாசர்களில், மிகச் சிறந்தவர் என்று சொன்னால் அது 18ம் நூற்றாண்டின் ஸ்ரீஜகன்னாததாசர் ஆவார்.

ஹரிபக்தரான ஸ்ரீநரசிம்மாசார் மற்றும் லட்சுமிபாய் தம்பதியினருக்கு, திருப்பதி ஸ்ரீனிவாசனின் அருளால் கிபி 1728ல் ஜூலை 23ம் தேதி கீலக நாம சம்வத்சரம் சிராவண சுத்த த்விதியையன்று பிறந்த குழந்தைக்கு ஸ்ரீனிவாசாசார்யர் என்று பெயரிட்டனர். ஸ்ரீமத் ஜயதீர்த்தரின் 'ஸ்ரீமன் நியாயசுதா' கிரந்தத்தைப் படித்து அறிஞரானார். இந்தப் புகழ் ஸ்ரீஹரி தனக்குக் கொடுத்தது என்பதை மறந்து, கர்வம் கொண்டு, சாஸ்திரம் படித்த அறிஞர்களுக்கு மட்டுமே மரியாதை கொடுத்து, கன்னடத்தில் ஸ்ரீஹரியைப் புகழ்ந்து பாடல்களைப் பாடிவரும் ஹரிதாசர்களைக் குறித்து குறைந்த / தாழ்ந்த அபிப்ராயத்தையே கொண்டிருந்தார். இந்த அபிப்ராயத்தினால், ஸ்ரீவிஜயதாசருக்கு செய்த அவமானத்தினால், வயிற்றுவலி வந்து சேர்ந்தது. அந்த வலியைத் தீர்ப்பதற்கும், இவருக்கு நீண்ட ஆயுளைக் கொடுப்பதற்கும், விஜயதாசரின் அருளும், கோபாலதாசரின் கருணையும் இவருக்கு வேண்டியிருந்தது. அவர்களின் அருளினால் 'ஜகன்னாதவிட்டலா' என்னும் அங்கிதம் கிடைத்து, அதன் மூலம் கன்னடத்தில் பாடல்களை இயற்றலானார்.

ஹரிதாச சாகித்யமானது சங்கீதத்துடன் எப்படி ஒன்றியிருக்கிறது, இந்த இரண்டிற்குமான சம்பந்தம் எப்படி இருக்கிறது என்பதை விளக்கும் சிறு முயற்சியே இந்த கட்டுரை.

நாஹம் வஸாமி வைகுண்டே ந யோகி ஹ்ருதயே ரமௌ |
மத்பக்தா யத்ர காயந்தி தத்ர திஷ்டாமி நாரத ||

'வைகுண்டத்திலோ, யோகிகளின் இதயத்திலோ நான் இருப்பதில்லை. என் பக்தர்கள் எங்கு பாடுகின்றனரோ அங்கு தயாராக நின்றிருக்கிறேன், நாரதா' என்று ஸ்ரீஹரி சொல்கிறார். ஹரிதாசர்கள் ஹரிபக்தர்கள் ஆனதால், ஸ்ரீஹரியின் எந்தவொரு பேச்சை மீறாமல், அவன் மனம் கோணாமல், அவன் சொன்னதையே மிகவும் மகிழ்வுடன் செய்பவர்கள். போலவே அவனது நற்குணங்களை, மகிமைகளை புகழ்ந்து பாடுவதற்கு, அவனுக்கு மிகவும் பிடித்த சங்கீதத்தையே பயன்படுத்துவது என்று ஹரிதாசர்கள் தீர்மானித்தனர்.

ஜகன்னாததாசரின் பாடல்கள் ராகதாளங்களை தன்னுள்ளே அடக்கிக்கொண்டுள்ளன. ஏனென்றால் எந்த பாடலும் ராகதாளங்கள் இல்லாமல் பாடமுடியாது. இவரது மிகச்சிறந்த கிருதியான ஹரிகதாம்ருதசாரமானது பாமினி ஷட்பதியில் (தகிட தகதிமி) மிஸ்ரசாபு

தாளத்திற்கு சரியாக உள்ளது. உகாபோகத்தைப் போலவும் பாடமுடிகிறது. தத்வங்கள், சித்தாந்தங்கள் இவற்றையே விளக்கும் ஜகன்னாததாசரின் பாடல்களில், சங்கீதத்தின் அம்சங்களையும் காணமுடியும். மனதிற்கான அமைதி, உடலின் ஆரோக்கியம் ஆகியவற்றிக்கு சங்கீதமே நல்ல தீர்வு என்று இன்றைய அறிவியல் ஒப்புக்கொள்கிறது. ஹரிகதாம்ருதசாரத்தை, மிஸ்ரசாபு தாளத்தில், ராகத்துடன் பாடும்போது பிராணாயாமம் செய்த பலன்கள் கிடைக்கின்றது. இது என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து சொல்கிறேன்.

ஜகன்னாததாசரின் கிருதிகளில் இசை என்னும் அம்சத்தை எடுத்துக்கொண்டால், நவவிதபக்திகளில் கீர்த்தனை-பக்தியும் ஒன்று. ஸ்ரீஹரியின் குணங்களை, மகிமைகளை புகழ்ந்து பாடுவதே கீர்த்தனை. கீர்த்தனைகளை ராகத்துடன், தாளத்துடன் பாடும்போது அதுவே சங்கீதமாகும். அன்பு, பக்தி ஆகிய உணர்ச்சிகளை சந்தத்துடன் கூறிய ஸ்வரங்களின் சங்கமத்தால் பாடுவதை ராகம் என்று அகராதி சொல்கிறது. ஸ்ரீஹரியிடம் பக்தி கொண்ட ஹரிதாசர்கள் ‘வேதானாம் சாமவேதோஸ்மி’ என்பதுபோல், வேதங்களையே ஆதாரமாகக் கொண்ட ஹரிதாசர்கள், சாமவேதமான சங்கீதத்தை அவர்களது பாடல்களுக்கு அடிப்படையாகக் கொண்டதில் எந்தவொரு வியப்பும் இல்லை.

ஆனால் பக்திக்கு வேண்டியது ராகமும் இல்லை. தாளமும் இல்லை. ஸ்ரீஹரியிடம் பக்தி மரியாதை மட்டுமே. பாடலுக்கு மயங்கி வேகமாக வரும் ஸ்ரீஹரியை சங்கீதம் – சாகித்யம் இவ்விரண்டின் மூலமாகவும் விரைவில் கண்டுகொள்ளும் திறமையுள்ளவர்கள் ஹரிதாசர்கள்.

பாடலைப் பாடும்போது ஸ்ருதிக்காக வைத்துக்கொண்டு இசைப்பதே தம்புரி எனப்படும். ஏகதாரே, ஏகநாத என்ற பெயருடன், ஒரே தந்தி கொண்ட தம்புரியை ஸ்ருதிக்காக வைத்துக் கொண்டிருந்தனர். பிறகு நான்கு தந்திகளை சேர்த்து ஒரு பெரிய கட்டையில் கட்டி, அதை தம்புரி என்று அழைத்து வந்தனர்.

குண்டு சுரைக்காய்க்கு சமஸ்கிருதத்தில் தம்புரி என்று ஒரு பெயர் உண்டு. அதுவே தம்புரா ஆகியிருக்கிறது என்று தும்புருவை தனது பாடல்களுக்குப் பயன்படுத்தியதால் அதை தம்புரி என்று அழைக்கலாயினர் என்று ஒரு பேச்சு உண்டு. மேலே சொன்னதுபோல், ஹரிதாசர்கள் நான்கு தந்திகளைக் கொண்ட தம்புரியை பயன்படுத்தினர் என்பது நமக்குத் தெரிந்ததே. ஹம்பியில், புரந்தர மண்டபத்தில் இருக்கும் புரந்தரதாசரின் சிலையின் கையில் இருப்பது நான்கு தந்திகளைக் கொண்ட தம்பூரியே ஆகும். இங்கு தம்புரியைப் பற்றி ஏன் சொல்கிறோம் என்றால், ஜகன்னாததாசரும் தமது பாடல்களைப் பாடும்போது தம்புரியைப் பயன்படுத்தி வந்தார் என்பதால். இவர் ஓவியம் வரைவதிலும் நிபுணராக இருந்தார் என்பது அவரது வாழ்க்கைச் சரித்தத்தைப் படித்தால் நமக்குத் தெரிகிறது. அவரது தம்புரி மேலும் அவர் ஓவியங்களை வரைந்து வைத்திருந்தார் என்பதும் அந்த சரிதத்திலிருந்தே நமக்குத் தெரிகிறது.

ஹரிதாச சாகித்யம் தொடங்கிய காலத்திலிருந்து அவரது பாடல்கள் சங்கீதத்தின் மூலமாகவே வெளிப்பட்டிருக்கிறது. அந்தக் காலத்தில் பாமரர்களும் (பாடகர்கள் அல்லாதவர்கள்) பாடுவதற்கு ஏற்றவாறு சில ராகங்கள் இருந்தன. அவை 32 ராகங்கள் இருந்ததால், அவற்றை ‘பத்தீஸ ராகங்கள்’ என்று அழைத்து வந்தனர். அவையும் வெவ்வேறு சமூகங்களைச் சேர்ந்தவையாக இருந்தன. இந்த பத்தீஸ ராகங்களைத் தவிர, இன்னும் பல ராகங்களை, சூளாதிகளின் ஏழு தாளங்களை, சாபு தாளங்களை ஹரிதாசர்கள் பயன்படுத்தி வந்தனர். ஸ்ரீபாதராஜரிடமிருந்து துவங்கி விஜயதாசர் வரை, அவர்களது சில பாடல்களில் சில பத்தீஸ ராகங்களின் பெயர்களை சொல்லியிருக்கின்றனர். ஜகன்னாததாசரின் தமது

பாடல்களில் பத்தீஸ ராகங்களைப் பயன்படுத்தி, மொத்தம் 23 ராகங்களின் பெயர்களை பயன்படுத்தியிருக்கிறார்.

| | | | |
|---|---|---|---|
| 1. நாட | 2. சங்கராபரணம் | 3. பஹாடி | 4. காம்போதி |
| 5. கமாஜ் | 6. பூபாள | 7. தோடி | 8. சாவேரி |
| 9. மத்யமாவதி | 10. தன்யாசி | 11. நாதநாமக்ரியா | 12. பந்துவராளி |
| 13. வராளி | 14. ஸ்ரீ | 15. சௌராஷ்ட்ர | 16. தேவகாந்தார |
| 17. ரேகுப்தி | 18. ஆரபி | 19. சாரங்க | 20. முராரி |
| 21. மாயா மாயவகௌள | 22. தேசி | 23. பைரவி | |

ஜகன்னாததாசரின் ஒரு பாடல் 'மாலகௌளஸ' என்னும் ராகத்தில் பாடப்படுகிறது. இது ஹிந்துஸ்தானி சாஸ்த்ரீய சங்கீதத்தின் ஒரு ராகத்தின் பெயரே மாலகௌளஸ. இதற்கு சமானமாக, கர்னாடக சங்கீதத்தில் ஹிந்தோளம் என்று ஒரு ராகம் உள்ளது. மாளவகௌள ராகத்திற்கு மாயாமாளவகொள என்னும் பெயர் உண்டு. பதினாறாம் நூற்றாண்டில் புரந்தரதாசர் மாயவகௌளத்திற்கு ருஷப, பஞ்சமங்களை கொடுத்து வழிமுறைப்படுத்தினார். அதற்கு சுத்தஸ்வர-சப்தகங்களைச் சேர்த்து பயிற்சி பாடல்களைப் பாடுவதற்கு ஏற்றவாறு மாற்றினார். சங்கீத சாஸ்திர கிரந்தங்களை எழுதியவரான ராமாமாத்யன் அவர்கள் 'ராகாணம்-உத்தமோத்தம:' என்றும், 16ம் நூற்றாண்டின் பண்டரி-விட்டலன், ராஜராஜன் என்றும் மாளவகௌள ராகத்தை புகழ்ந்திருக்கின்றனர். இந்த ராகம், சுத்தஸ்வர-சப்தகங்களைக் கொண்டது, இன்றும் 15ம் மேளமாகி பாடப்பட்டு வருகிறது.

யோகி பாரோ நீ த்யாகி பாரோ என்னும் பாடலை ஜகன்னாததாசர் ராகமாலிகையில் பாடியுள்ளார். ஏழு பத்திகள் உள்ள இந்தப் பாடலின் ஐந்தாவது பத்தியை மாயாமாயவ கொள ராகத்தில் பாடியுள்ளார். மைசூரின் திரு N.மூர்த்திராயரின் தொகுப்பிலிருந்து இந்த தகவல்கள் தெரிய வருகின்றன. இதே பாடலின் இறுதிப் பத்திக்கு சுருடி ராகம் பாடப்பட்டிருக்கிறது. சங்கீதக் கச்சேரி செய்பவர்கள் மங்களம் பாடுவதற்கு சுருடி ராகத்தையே பயன்படுத்தும் பழக்கம் இருக்கிறது. சங்கீதம் அறிந்தவர்களுக்கு இந்த விஷயமும் தெரியும்.

தேவகாந்தார மற்றும் தேவகாந்தாரி ராகங்களை ஜகன்னாததாசர் தமது பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். தேவகாந்தாரம் என்பது மிகப் பழமையாக ஒரு ராகமாகும். லாலி கோவிந்த லாலி என்னும் பாடலில் ஸ்ரீபாதராஜர் 'தேவகந்தர்வ பாடிதூகிதரு தேவகாந்தாரதிந்த' என்று இந்த ராகத்தை பயன்படுத்தியிருக்கிறார்.

தேவகாந்தார ராகம் இன்றைய ஆபேரி ராகத்தை ஒத்திருக்கிறது. இதை கர்னாடக தேவகாந்தாரி என்றும் அழைக்கின்றனர். ஸ்ரீபுரந்தரதாசர் இயற்றிய 'ஹசுகள கரெவ த்வனி' என்னும் சுளாதிக்கு ஸ்ரீசுப்பராம தீட்சிதர் (1839-1906) இந்த ராகத்தை பயன்படுத்தியுள்ளார். தஞ்சாவூர் அரசனான துளஜேந்திரன் இதே ராகத்தை பாடியிருக்கிறார். சங்கீத விற்பன்னர் சென்னகேசவனய்ய அவர்கள் தமது பாடலை 'ப்ராசீன தேவகாந்தாரி' ராகத்திலேயே பாடியிருக்கிறார். 'ஸ்ரீனிகேதன பாலயமாம்' என்னும் பாடலில் ஜகன்னாததாசர் தேவகாந்தார என்னும் ராகத்தை பயன்படுத்தியிருக்கிறார். இன்றைய கரகரப்ரிய ராகம், ஸ்ரீராகத்திற்கு அருகில் வருகிறது. அபேரி, ஆபேரி என்று தற்போது அழைக்கப்படும் இந்த ராகம் கரகரப்ரியா ராகத்திலிருந்தே பிறந்தது என்று சொல்கிறார்கள்.

தேவகாந்தாரி மிகப் பழமையான ராகமாகும். சாருகமகங்களைக் கொண்டிருக்கும் இந்த ராகத்தை, சத்குரு ஸ்ரீதியாகராஜர் (1767-1843) தமது மிகவும் புகழ்பெற்ற க்ஷீரசாகரசயன என்னும் பாடலில் பயன்படுத்தியிருக்கிறார். இந்த ராகம், தீரசங்கராபரண மேளமாக

இன்றைக்கும் பாடப்பட்டு வருகிறது. 'நமோ நமோ கமலாலய' என்ற பாடலில் ஜகன்னாததாசர் தேவகாந்தார ராகத்தை பயன்படுத்தி யிருக்கிறார்.

பத்தீஸ ராகங்கள் அல்லாமல், மேலும் 34 ராகங்களை பாடியிருக்கின்றனர். தாசர்கள் தமது பாடல்களை வெவ்வேறு ராகங்களில் பாடியிருக்கலாம் அல்லது இசையமைத்திருக்கலாம் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் அப்படி பாடிய ராகங்களை கீழே கொடுத்திருக்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| 1. அடாணா | 2. தர்பார் | 3. புன்னாகவராளி | 4. குஞ்சாடி |
| 5. காபி | 6. பேகடா | 7. நவரோஜு | 8. கானட |
| 9. நீலாம்பரி | 10. கன்னட | 11. தேசி தோடி | 12. பீம்ப்ளாஸ் (ஆபேரி) |
| 13. வசந்த பைரவி | 14. மோஹன | 15. கல்யாணி | 16. பூர்வி |
| 17. கன்னட காம்போஜி | 18. த்விஜாவந்தி | 19. புன்னாகவராளி | 20. தனாசரி |
| 21. தேசிய தோடி | 22. பூப் (மோகனம்) | 23. பரஜு | 24. பிலஹரி |
| 25. பூர்வி கல்யாணி | 26. கேதார கௌள | 27. யமுனா கல்யாணி | 28. பீலு |
| 29. சுரபி | 30. ஆனந்தபைரவி | 31. தனாஶ்ரீ | 32. பெஹாக் |
| 33. அசாவேரி | 34. யதுகுல காம்போதி | | |

தாளங்களில் சுளாதி தாளங்களான த்ருவ, மட்ய, ரூபக, ஜம்பெ, த்ரிபுட, அட்ட, ஏக ஆகியவற்றை பயன்படுத்தியிருக்கின்றனர். மற்ற தாளங்களான ரூபக, ஆதி, சாபு தாளங்களையும் பயன்படுத்தியிருக்கின்றனர். யக்ஷகானத்தில் பயன்படுத்தும் ஏழு எழுத்துக்களைக் கொண்ட அஷ்டதாளம் 1929ல் உடுப்பியின் பாவஞ்சே குருராஜராவ் தொகுத்துள்ள ஜகன்னாததாசரின் பாடல்கள் (பாகம் 1) புத்தகத்தில் இருக்கும் 'பாஹி பத்மதளாயதாம்பக' என்னும் பாடலில் பயன்படுத்தியதாக தெரியவருகிறது. இது தகிட, தக, தீம் என்னும் ஏழு எழுத்துக்களால் ஆனது. யக்ஷகானத்தில் இதை த்ரிபுட என்றும் அழைக்கின்றனர். த்ரிவுட, த்ரிபுட, த்ரிவிடி, த்ரிபுடி என்று அனைத்தும் ஏழு எழுத்துக்களைக் கொண்ட தாளமே ஆகும். ஐந்து நடைகளில் ஒன்றான திஸ்ர- நடை 'கோபாலதாசராய நின்னய பாத நா பொந்திதேனோ நிஸ்சய' என்னும் பாடலில் பயன்படுத்தியிருக்கிறார். 1929ல் உடுப்பியின் பாவஞ்சே குருராஜராவ் தொகுத்துள்ள ஜகன்னாததாசரின் பாடல்கள் (பாகம் 1) புத்தகத்தில் இந்த விவரம் தெரியவருகிறது. சுளாதி சப்த தாளத்தில் வரும் அட்ட-தாளத்திற்கு 14 எழுத்துகள் உள்ளன. அதை திஸ்ர-நடைக்கு பயன்படுத்தினால் ஒரு சுற்றுக்கு 10 எழுத்துகள் வருகின்றது. பொதுவாக நாம் இந்தப் பாடலை

கோ-பால-தா-ஸ-ரா-ய-நி-ன்னய-பாதா -- என்று திஸ்ர நடையில் பாடுகிறோம். ஆனால், தாசர் பயன்படுத்தியிருக்கும் தாளம் கண்டசாபு. 10 எழுத்துகளை ஐந்து ஐந்தாகப் பிரித்து ஒரு சுற்றுற்கு ஐந்து என்று பயன்படுத்தப்படுகிறது. அப்படிப் பாடினால், கோ-பால-தா-சரா-யா-நி-ன்னய-பாத -- (இதை பாடிக்காட்டினால் மட்டுமே புரிந்துகொள்ள முடியும்)

இதே விதத்தில் சங்கீதத்தின் அம்சங்களை ஜகன்னாததாசரின் பாடல்களில் பார்க்கலாம். இந்த அம்சங்களுக்கும் ஹரிதாச சாகித்யத்திற்குமான பிரிக்கமுடியாத சம்பந்தத்தையும் நாம் அறியமுடியும்.

***

# ஹரிகதாம்ருதசாரத்தில்
# 12. தேவதா-வர்ணனை
## டாக்டர் சகுந்தலா ஷெட்டி, ராய்ச்சூர்

மத்வ சித்தாந்தத்தை பண்டிதர் முதல் பாமரர் வரை அறியுமாறு, அனுபவிக்குமாறு, அபரோக்ஷ ஞானிகளான தாசவர்யரான ஸ்ரீநரஹரி தீர்த்தரிலிருந்து துவங்கி ஸ்ரீபாதராஜர் மற்றும் ஸ்ரீவியாசராஜர் காலத்திலிருந்து, ஸ்ரீஹரியைக் குறித்து கன்னடத்தில் பாடல்களை இயற்றி தாச பரம்பரையை, தத்வபிரசாரத்திற்கு பயன்படுத்தினர். ஸ்ரீபுரந்தரதாசர், கனகதாசர் முதலான தாசஸ்ரேஷ்டர்கள் ஸ்ரீமன் நாராயண தரிசனத்தை செய்தவாறு ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை சாதாரண மக்களுக்குக் காட்டினர். 18ம் நூற்றாண்டில் ஸ்ரீவிஜயதாசரும் அவருக்குப் பிறகு ஜகன்னாததாசர் பிறந்தார்.

மான்வியின் ப்யாகவாட கிராமத்தில் ஸ்ரீனிவாசராக பிறந்து, வேதவேதாங்கங்களின் சாரத்தை ஹரிகதாம்ருதசாரத்தில் எழுதியிருக்கிறார். தர்மத்தின் அடிப்படையில், இந்த உலகத்தைக் காப்பதற்கு, ஹரிகதாம்ருத என்னும் அக்ஷய பாத்திரத்தில், பாவத்தைப் போக்கும் சர்வோத்தமனான ஸ்ரீமன் நாராயணனின் கதை என்னும் அம்ருதத்தின் சாரத்தைக் கேட்டாலே போதுமானது. இது மோட்சத்திற்கு முக்கிய சாதனமாகும். இந்த அக்ஷய பாத்திரம் தினமும் புதிய விஷயங்களைக் கொடுத்தவாறு இருக்கிறது.

ஹரிகதாம்ருதசார குருகள
கருணதிந்தாபனிது பேளுவே
பரம பகவத்பக்தரிதனாதரதி கேளுவுது

என்று ஸ்ரீஹரியை வணங்கும் அனைத்து தேவதைகளும் விஷ்ணு பக்தர்களும் இந்த கிருதியை கேட்கவேண்டும் என்று ஜகன்னாததாசர் வணங்கிக் கேட்டுக்கொண்டு, முதலில் அவரது இஷ்ட- தேவரான ஸ்ரீநரசிம்மதேவரை வணங்குகிறார்.

ஸ்ரீ நாராயணனுக்கு மனைவியாக இருக்கும் லட்சுமிதேவியின் தாமரை போன்ற கரங்களினால் எப்போதும் பூஜை பெற்றுக்கொள்ளும் மற்றும் ஸ்ரீஹரியின் சேவையிலேயே இருக்கும் மற்றும் பிரளய காலத்தில் சுத்த-லட்சும்யாத்மக ஸ்ரீ லட்சுமியிடமிருந்து வணங்கப்பெற்று, ஆனந்தமாக வீற்றிருப்பார். நான்முகப் பிரம்மன், வாயுதேவர், சரஸ்வதி பாரதியர், கருடதேவர், சேஷதேவர், பார்வதி-பதியான ருத்ரதேவர் - இவர்களிலிருந்து துவங்கி அனைவராலும் வணங்கப்படுபவன். பிரம்மாண்டத்தின் படைத்தல், காத்தல், அழித்தல், கட்டுப்படுத்துதல், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோட்சம் ஆகியவற்றைச் செய்யும் கமலநாபனான நரசிம்மனே - ஸ்ரீபரமாத்மனே, எல்லா தேவதைகளினாலும் வணங்கப்படும் ஸ்ரீமன் நாராயணனை வணங்கியவாறு லட்சுமியை வணங்குகிறார். ஸ்ரீமன் நாராயணனின் பாதசேவை செய்யும் லட்சுமிதேவி ஸ்ரீஹரியின் குணங்கள், புதிய புதிய விஷயங்களைப் பார்த்தவாறு மிகவும் மகிழ்ச்சியடைகிறார். மூன்று குணங்களுக்கும் அபிமானியான, மகாலட்சுமி, தினமும் நம்மை காப்பாற்றட்டும் என்று லட்சுமிதேவியை வர்ணிக்கிறார்.

தேவதைகளில் சிறந்தவரான ஜீவோத்தமரான பிரம்மதேவரைக் குறித்து தாசர் வேண்டுகிறார்.

நிருபமானந்தா3த்மப4வ நி
ர்ஜரசபா4ஸம்ஸேவ்ய ருஜுக3ண
த3ரசே ஸத்1வப்1ரசுர வாணிமுக2ஸரோஜேன |
க3ருட சேஷ சஷாங்க1த3ளசே

# 12. தேவதா-வர்ணனை

க[1]ரர ஜனக[1] ஜக[3]த்கு[3]ரவே த்[1]வ
ச்சரணக[3]ளிக[3]பிவந்திசுவே பா[1]லிபு[1]து ஸன்மதிய ||
(மங்களாசரண சந்தி ஸ்லோகம் #3)

ஜீவகோடிகளில் ஒப்பிடுவதற்கு உவமையே இல்லாதவர், தோஷங்களே இல்லாதவர், எப்போதும் ஆனந்தமாக இருப்பவர், ருத்ரதேவரே முதலான அனைத்து தேவதைகளும் வணங்கக்கூடியவர், அறியாமை இல்லாமல், தவறான பாதையில் செல்லாமல் ஸ்ரீஹரியையே வணங்கும் 200 ருஜு கணஸ்தர்களில் பிரம்ம பதவிக்கு யோக்யராகி அவர்களில் முதன்மையானவர், நற்குணங்களைக் கொண்டவர், மஹத்தத்வாத்மக (சாத்விக) சரீரம் உள்ளவர், சரஸ்வதியின் முக-கமலங்களுக்கு சூரியனானவர், தமது கிரணங்களால் சரஸ்வதிதேவியின் முகத்தை மலரச் செய்பவர், கருட சேஷ ருத்ரர்களுக்கு தந்தையானவர், ஜகத்குரு எனப்படும் பிரம்மனின் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குகிறார்.

பிரம்மனுக்கு சமமான இன்னொரு தேவதையான வாயுதேவரைப் பற்றி தாசர் விளக்குகிறார். ஜீவர்களின் ஸ்தூல-தேகத்தில் இருந்து அவர்களின் சைதன்யத்திற்கு வாயுதேவர் காரணமாகிறார். மூச்சை உள்ளிழுப்பது ஸ்வாசம் (ஸ); மூச்சுக் காற்றை வெளிவிடுவது உச்ஸ்வாசம் (ஹம்). இத ஸ்வாச - உச்ஸ்வாசத்தை அனைத்து ஜீவர்களுக்குள்ளும் நின்று 21,600 முறை செய்பவர். இதையே ஹம்ஸ மந்திரம் என்கிறோம். சாத்விகர்களுக்கு சுகம், ராஜஸருக்கு மிஸ்ர-சுகம், தாமசருக்கு துக்கம் - இந்த மூன்று விதமான ஹம்ஸ மந்திரத்தைச் செய்கிறார். முக்தி யோக்யம் உள்ள சாத்விகர்களுக்கு, உயிர் பிரியும்போது, வைகுண்ட சுகம், அதமர்களுக்கு அபார துக்கத்தையும் கொடுப்பவர். உலகத்தில் ஜீவோத்தமரான வாயுதேவரை, நமக்கு நல்ல ஞானத்தைக் கொடுத்து அருள்வாயாக என்று வேண்டிக் கொள்கிறார்.

நாராயணரின் ஸ்தோத்திரத்தை செய்ய உதவுமாறு சரஸ்வதிதேவியை தாசர் வேண்டுகிறார். நான்முகப் பிரம்மனின் மனைவியானவர், தேவர்களின் சமூகத்திற்கு அபிமானியானவர், கைகளில் வீணை தரித்து, உலகத்திற்கு தாய் என்று அழைத்துக் கொள்பவர், லட்சுமியின் கணவனான நாராயணனை வணங்குவதற்கு சுத்தமான களங்கமற்ற புத்தியைக் கொடுத்து, நம் முகத்தில் எப்போதும் நின்று நிலைத்திருக்குமாறு சரஸ்வதிதேவியை பக்தியுடன் வேண்டிக்கொள்கிறார் தாசர்.

பிறகு பாரதிதேவியை வணங்குகிறார் தாசர். நாராயணனின் மகளாகி, வாயுதேவரின் மனைவியாகி, மிகவும் ரகசியமான ஸ்ரீஹரி தத்வங்களை அஞ்ஞானிகளான நமக்கு விளக்கவேண்டும் என்று வேண்டுகிறார்.

பாதராயணரான வேதவியாசரை வேண்டிக் கேட்டுக்கொள்வதாவது.

வேத[3]பீ[1]ட[2] விரிஞ்சி ப[4]வ ச
க்ராதி[3]சுர விக்ஞானதா[3]யக[1]
மோத[3] சின்மயகா[3]த்ர லோக[1]பவித்ர சுசரித்[1]ர |
சேத பே[4]த விஷாத[3] கு[1]டிலா
ந்தாதி[3] மத்[3]ய விதூ[3]ர ஆதா[3]
நாதி கா[1]ரண பா[3]த[3]ராயண பா[1]ஹி சத்[1]ராண ||
(மங்களாசரண சந்தி ஸ்லோகம் #7)

வேதங்களை பீடமாகக் (ஆசனமாகக்) கொண்டவரான, பாதராயண என்று அழைக்கப்படும் வேதவியாஸரூபியான ஸ்ரீஹரியே, உன் புகழ் பாடுவதற்கு எனக்கு சக்தியைக் கொடுத்து எனக்கு அருள்வாயாக என்று ஸ்ரீஜகன்னாததாசர் வேண்டுகிறார்.

ஸ்ரீவாயுதேவரின் அவதாரமான ஸ்ரீமத்வாசார்யரை வேண்டி வர்ணிக்கிறார். பரத-கண்டத்தில் மணிமந்தன் முதலான தைத்யன், ஹரித்வேஷிகள் பிறந்தனர். ஹரிசர்வோத்தமத்வம் என்னும் தத்வத்திற்கு எதிராக, பல குபாஷ்யங்கள் எழுதியபோது, மத்யகேஹபட்டர் மற்றும் வேதவதி ஆகிய பிராமண தம்பதியினருக்கு, பாரதிரமணரான வாயுதேவர் பிறந்து, மத்வாசாரியர் என்று பெயர் பெற்று, 14 லோகங்களையும் வென்று புகழ்பெற்று, 21 குபாஷ்யங்களை நிராகரித்து, ஹரிசர்வோத்தமத்வம் என்னும் சித்தாந்தத்தை நிறுவிய மத்வாசாரியருக்கு சாஷ்டாங்க நமஸ்காரங்களை செய்வேன் என்று ஜகன்னாததாசர் வணங்குகிறார்.

உமாவின் கணவரான மஹேஸ்வரனை வணங்கும் ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீஹரியின் இருப்பை அற்புதமாக வர்ணிக்கிறார். பார்வதிதேவியின் மனதை மகிழ்விப்பவர், உலகத்தின் அழித்தல் தொழிலை செய்பவர், யானைத் தோலை உடையாக அணிந்தவர், மன்மதனை தனது மூன்றாவது கண்ணினால் அழித்தவர், கைலாச மலையில் வசிப்பவர், தன் இடது கண்ணில் சந்திரனைப் போன்ற அமைதியைக் கொண்டவர், சூரியனைப் போன்ற தேஜஸ்ஸினை தனது வலது கண்ணில் கொண்டவர். உமாபதியானவர் வேண்டியவர்களுக்கு வேண்டிய இஷ்டார்த்தங்களை எப்போதும் கொடுக்கிறார்.

ஸ்ரீஹரியின் பக்தரான நமக்கு மங்களத்தை செல்வத்தைக் கொடுக்கவேண்டுமென்று வேண்டுகிறார். பின்னர் இந்திராதி தேவதைகளை வணங்கி, யதிகளான ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தர், ஸ்ரீடீகாசார்யரு, ஸ்ரீபாதராஜரு, ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், ஸ்ரீபிரக்ஞாதீர்த்தர் ஆகிய யதி-ஸ்ரேஷ்டர்களையும் தாசகூட சமூகத்தில் ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீபாகண்ணதாசர் ஆகியவர்களை வணங்குகிறார்.

ஸ்ரீஜகன்னாததாசர் தேவதைகள் மட்டுமே வர்ணிக்காமல், அனைத்து உலகத்தையும் படைத்த ஸ்ரீஹரி படைத்த ஜீவர்கள், ஜடபொருட்கள் என அனைத்தையும் தன் வயிற்றில் வைத்து, அனைத்து இடங்களிலும் வியாபித்தவனாக, பிம்ப-க்ரியை மூலமாக இந்திரியங்களின் வியாபாரங்களை நடத்துகிறார் – என்கிறார். அதாவது, அனைவரிடத்திலும் அனைத்திலும் ஸ்ரீஹரியே வியாபித்திருக்கிறார்.

சேத1னாசேத1ன விலக்ஷண
நூத1ன பதா3ர்த்த1க3ளொளகெ3 ப3லு
நூத1னதி3சுந்த3ரகெ1 சுந்த3ர ரசக்கே1 ரசரூப1 |
ஜாத1ரூபோ1த3ர ப4வாத்யரொ
ளாத3த1பி1ரதி1ம ப்1ரபா4வ த3
ராத1லதொ3ளெம்மொட3னெ ஆடு3த1லிப்ப1 நம்மப்ப1 ||
(கருணா சந்தி ஸ்லோகம் #13)

ஸ்ரீஹரியின் அம்சம் நம்முள் இருப்பதனால், ஜீவிகளான மக்களை தந்தை-தாயின் ரூபத்தில் நின்று அனைத்து நேரங்களிலும் காக்கிறார் என்கிறார் தாசர். நமது கர்வம், அஹம், பாவகர்மங்களை தூர ஓட்டுவதற்கு, ஞான, பக்தி, வைராக்யகம் என்னும் மந்திரங்களை உச்சரித்து, ஜீவர்களின் தேகத்தில் நுழைந்து, வைகுண்டத்திற்கு அழைத்துப் போவதற்குக் காத்திருக்கிறார் ஸ்ரீஹரி என்கிறார் தாசர்.

ஒட3ல நௌலந்தத3லி ஹரிநம்
மொட3னெ தி1ருகு3வ நொந்த3ரெக்1ஷண
பி3டதெ3 பெ3ம்ப3லனாகி3 ப3க்தா1தீ3னனெந்தெ3னிஸி |
த1டெ3வ து3ரித1வ்க3க3ள கா1மத3
கொ1டுவ சக1லேஷ்ட1க3ள சந்த1த1

நடெ[3]வ நம்மந்த[3]த[3]லி நவசுவிசேஷ சன்மஹிம ||
(கருணா சந்தி ஸ்லோகம் 25)

ஸ்ரீஹரி நம்முடனேயே பிம்பரூபியாக இருக்கிறார் என்றால், நம் நிழலானது நம்முடனே இருந்தாலும் நமது செயல்களுக்கு எப்படி அதற்கு தொடர்பில்லையோ அப்படி பிம்பக்ரியை என்பது மட்டும் உண்டு. பிரதிபிம்பக்ரியை என்பது கிடையாது. அதாவது பிம்பரூபி ஸ்ரீஹரி ஸ்வரூப யோக்யதைக்கு தக்கவாறு செயல்களைச் செய்தால் ஜீவனான பிரதிபிம்பன் அதையே செய்கிறான் என்றும் ஸ்ரீஹரி, பக்தனுக்குக் கட்டுப்பட்டவன் என்றும் சொல்கிறார். மேலும் சரீரத்தின் ஒவ்வொரு உறுப்புகளிலும் ஸ்ரீஹரியின் ரூபத்தைப் போல எந்தவொரு பலன்களையும் எதிர்பார்க்காமல், கண்களை இமை காப்பதுபோல், பற்கள் பொருட்களைக் கடித்து நாக்கிற்குக் கொடுப்பதைப்போல், ஸ்ரீஹரியும் எந்தவொரு பலனையும் எதிர்பார்க்காமல் பிரதிபிம்பனான பக்தர்களுக்கு அருள்கிறார் என்று ஸ்ரீஹரி எப்போதும் நம்மைக் காப்பாற்றுவதை சொல்லியவாறு, ஸ்ரீஜகன்னாததாசர் ஸ்ரீஹரியின் அவதாரங்களை வர்ணிக்கிறார்.

மீன கூர்ம வராஹ நரப[1]
ஞ்சானனாது[1]லஷௌர்ய வாமன
ரேணுகா[1]த்மஜ ராவணாரி நிஷாசரத்வம்ஸி |
தே[3]னுகா[1]சுரமத[1]ன த்[1]ரிபு[1]ரவ
ஹானிகை[1]சித[3] நிபு[1]ண க[1]லிமுக[1]
தா[3]னவர சம்ஹரிஸி த[4]ர்மதி[3] கா[1]ய்த[3] சுஜரஜன ||
(கருணா சந்தி ஸ்லோகம் #30)

ஸ்ரீஹரியானவர் மத்ஸ்யாவதாரம் எடுத்து, வேதங்களைக் காப்பாற்றினார். கூர்மாவதாரத்தினால் மந்தரமலையை தன் முதுகில் தாங்கிப் பிடித்தார். வராகாவதாரத்தினால் பூமியைக் காப்பாற்றினார். சிம்மரூபியான நரசிம்மாவதாரம், வாமனாவதாரத்தினால், த்ரிவிக்ரமரூபத்தினால் பாகீரதியைக் கொண்டு வந்து, ரேணுகாவின் மகனாக பரசுராமனாக அவதரித்து, அசுரர்களான ராவண, கும்பகர்ண, கர, தூஷணர்களைக் கொல்பவனாக, த்ரிபுராசுரர்களை ருத்ரதேவர் மூலமாக அழிப்பவனாக, இப்படி ராம, கிருஷ்ண, புத்த மற்றும் கல்கி அவதாரங்களை ஸ்ரீஹரி எடுத்தார் என்று ஜகன்னாததாசர் கூறுகிறார்.

பிரம்மாண்டத்தைப் படைத்த ஸ்ரீஹரியானவர் நான்கு யுகங்களில் அவதாரம் எடுத்தார். க்ருதயுகத்தில் மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம அவதாரங்களையும்; த்ரேதாயுகத்தில் வாமன, பரசுராம, ராம அவதாரங்களையும்; த்வாபரயுகத்தில் கிருஷ்ண, த்வாபர மற்றும் கலியுக சந்தியில் பௌத்தாவதாரமும் ; மற்றும் இந்த கலியுகத்தின் இறுதியில் கல்கி; என்று பத்து துஷ்டர்களைக் கொல்வதற்காக பத்து அவதாரங்களை எடுக்கிறேன் என்று ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஹரியின் ஸ்வரூபத்தை அனைத்து சந்திகளிலும் பஞ்சபூதங்களில், பஞ்சகோஷகளில், பிரம்மாண்டத்தில் என அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியானவர் சர்வோத்தமனாக இருக்கிறார் என்று விளக்கும் ஹரிகதாம்ருதசார கிரந்தமானது கன்னட ஹரிதாச சாகித்யத்தின் உச்ச கிரந்தமாகக் கருதப்படுகிறது. பாமினி ஷட்பதியில் இயற்றப்பட்டுள்ள இந்த கிரந்தத்தில் ஸ்ரீஹரியிடம் காட்டும் பக்தியின் சிறப்பினை விளக்குகிறது. மத்வமதத்தின் ரகசியங்களை எடுத்துரைக்கும், ஸ்ரீஹரியின் கதாம்ருதத்தின் சாரத்தை விளக்குகிறது.

ஸ்ரீஹரியைப் பற்றி நமக்கு விளக்கியவாறு பஞ்சபூதங்கள், பஞ்சகோஷங்கள், பஞ்சேந்திரியங்கள், பிரம்மாண்டம் என அனைத்தைப் பற்றி சொல்லும்போதும், ஸ்ரீஹரி ஒவ்வொரு தேவதைகளின் ரூபத்தில் அவதரித்ததை விளக்கும்போதும், ஸ்ரீஜகன்னாததாசர் ஒரு கற்றறிந்த பண்டிதர், ஞானிகள் என தெரியவருகிறது. ஹரிகதாம்ருதசாரத்தில்

ஸ்ரீஹரியின் ரூபங்கள் மிக அழகாக விளக்கப்பட்டிருப்பது தாச சாகித்யத்தில் வேறெங்கும் காணமுடியாததாகும்.

***

# ஸ்ரீஜகன்னாததாசரின்
# ஹரிகதாம்ருதசாரம் மற்றும்
# 13. தத்வசுவ்வாலி

## டாக்டர் R.G.குடி

வசன சாகித்யத்தைப் போல, தாச சாகித்யமும் கிராமிய நாட்டுப்புறப் பாடல்களிலிருந்து துவங்கியது என்று சொல்லலாம். ஆனால், போகப்போக அது தன்னை விரிவு படுத்திக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஷரணருக்கு (வசன சாகித்யகாரர்களுக்கு) அந்தப் பிரச்னை இருந்திருக்க வில்லை.

வியாசராஜரின் தலைமையில் அப்போதே தலைசிறந்து விளங்கிய த்வைத சித்தாந்தத்தின் சிறப்புகளை கன்னடத்தில் விளக்கும்படியான முயற்சிகள், தாச சாகித்யத்தின் வளர்ச்சி மற்றும் மாற்றம் என்று எடுத்துக்கொள்ளப்பட்டது. ஆனால், சரணர்களைப் போல தாசர்களுக்கு விஷயத்தைப் பற்றி விளக்குவதிலாகட்டும், முடிவைப் பற்றி தீர்மானிப்பதிலாகட்டும், சுதந்திரம் இருந்திருக்கவில்லை. ஆகையால், த்வைத சித்தாந்தத்தை கன்னடத்தில் விளக்கும் வேலைகள் வேகமாகத் துவங்கியும், பின்னர் அந்த வேகம் சிறிது குறையத் தொடங்கியது. அப்போது வெவ்வேறு விதங்களில், கன்னடத்தில் காவியங்களைப் படைத்து, மக்களை ஈர்க்க வேண்டிய கட்டாயத்தில் தாசர்கள் இருந்தனர். இதற்காக இருக்கும் பல்வேறு சாகித்ய வழிமுறைகளில் தாசர்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து, அவற்றை பின்பற்றத் துவங்கினர். இப்படி தாசர்கள் தாச சாகித்யத்தை வளர்ப்பதற்காக பல வழிகளில் முயன்றனர்.

கீர்த்தனை, சுளாதி மற்றும் உகாபோகங்கள் ஆகிய பல கிருதிகளை ரகளெ, த்ரிபதி, சாங்கத்ய, ஷட்பதி ஆகிய பல்வேறு நுடிகளில், வைகுண்ட வர்ணனே, லட்சுமிஷோபானே, ஹரிபக்திசார, மத்வ நாம, ஹரிசர்வோத்தம சார, குண்டக்ரியெ, ஸ்வப்னபத ஆகிய சிறிய மற்றும் பெரிய காவியங்களை இயற்றினர். கூடவே புடுபுடுகெ பத, டொள்ளின பத, கோலு ஹாடு, சுக்கி பத, கொரவஞ்சி பத, கணி பத, ஜோகுள, லாவணி ஆகிய நாட்டுப்புற மெட்டுகளிலும் சாகித்யங்களை இயற்றினர்.

இவற்றிற்கெல்லாம் மகுடமான ஹரிகதாம்ருதசாரம் மற்றும் தத்வசுவ்வாலிகள் ஆகிய சித்தாந்தத்தை விளக்கும் கிரந்தங்கள் உருவாயின. கீர்த்தனை, சுளாதி மற்றும் உகாபோகங்களில் பின்னப்பட்டிருக்கும் த்வைத சித்தாந்த விஷயங்களைப் போல, மற்ற வழிகளிலும் விளக்கப்பட்டிருப்பதைக் கண்டு மனம் மகிழ்ச்சியடைகிறது. மற்ற வழிகள் எனப்படும் தாச சாகித்யங்களை 'பிரமேய கிரந்தங்கள்' மற்றும் 'காவியங்கள்' என்று அப்போதே பிரித்து வைத்ததைப் போல, பிரமேய கிரந்தம் என்று அழைக்கப்பட்ட ஹரிகதாம்ருதசார மற்றும் தத்வசுவ்வாலிகளில் த்வைத சித்தாந்தம் எப்படி சொல்லப்பட்டிருக்கிறது என்பதை இப்போது பார்ப்போம்.

கன்னட சாகித்யத்தின் கூடவே நமது மத சாகித்யமும் தொடர்ந்து வளர்ந்து வந்திருப்பதைக் காண்கிறோம். பம்ப என்பரிடம் தொடங்கிய ஜைன புராணத்தைப் போல, வசனம், ஷட்பதிகள் மூலம் வளர்ந்த ஷிவசரணர்களின் சாகித்யத்தை கவனிக்க வேண்டும். தார்மிக / வைதிக விஷயங்களை கன்னடத்தில் சொல்லலாமோ என்னும் சந்தேகம் அப்போதிருந்த வைதிக பிராமணர்களின் மனதில் இருந்ததால், த்வைத, அத்வைத மற்றும் விசிஷ்டாத்வைத என்னும் புகழ்பெற்ற மூன்று மதங்களின் தத்வங்கள் கன்னடத்தில் வெளிவருவதில் தாமதம் ஏற்பட்டது. 17வது நூற்றாண்டிற்குப் பிறகே சித்தாந்த கிரந்தங்கள் ஒவ்வொன்றாக வெளிவரத் துவங்கின. அவற்றில்:

1. அத்வைத சாஸ்திரத்தை விவரிக்கும் மகாலிங்கம் அவர்களின் அனுவமாம்ருதம் (1675).
2. விசிஷ்டாத்வைதத்தை விளக்கும் கேசவனின் திருவேங்கடாசார்ய ஷதகம் (1750) மற்றும்
3. த்வைத சித்தாந்த்தை நிரூபிக்கும் ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரம் (1775) என உதாரணம் சொல்லலாம்.

இந்த மூன்று கிரந்தங்களும் ஏறத்தாழ ஒரே காலகட்டத்தில் வெளிவந்துள்ளன. மூல சித்தாந்தங்கள் தோன்றிய அதே வரிசையில் இந்த கன்னட கிரந்தங்களும் வந்திருக்கின்றன என்பதை நினைக்கும்போது மனது மகிழ்ச்சியடைகிறது.

பிரமாண கிருதிகளே மிகக்குறைவு. அதிலும் த்வைத சித்தாந்தத்தை விளக்கும் கன்னட சாகித்யங்கள் அந்தக் காலத்தில் இல்லவே இல்லை எனலாம். அதில் ஆச்சரியமான விஷயம் என்னவென்றால் த்வைத சித்தாந்தத்தை ஒரே இடத்தில் சேகரித்து அதை விளக்கும் சமஸ்கிருத கிரந்தமும் மிகக்குறைவே. இதன் அடிப்படையில், த்வைத சித்தாந்தத்தின் தத்வங்களை ஒருங்கே சேகரித்து, அதையும் கன்னடத்தில் மொழிபெயர்த்து பாமர மக்களுக்கும் புரியுமாறு விளக்குவதற்கு தோன்றிய ஹரிகதாம்ருதசாரத்தின் மகிமையை உணரலாம். ஹரிசர்வோத்தம முதலான தத்வங்களை விவரிக்கும் இந்த ஹரிகதாம்ருதசாரம், மத்வ சித்தாந்தத்தின் களஞ்சியம் / கையேடு என்றே சொல்லலாம்.

988 ஸ்லோகங்களைக் கொண்ட பாமினி ஷட்பதி நுடியில் எழுதப்பட்டுள்ள இந்த ஹரிகதாம்ருதசார கிரந்தத்திற்கு ஸ்ரீஜகன்னாததாசரின் சிஷ்யரான ஸ்ரீதவிட்டலர் (கர்ஜிகிதாசர்) 24 ஸ்லோகங்களைக் கொண்டும், இன்னும் பலரும் பல-ஸ்ருதியை எழுதியிருக்கின்றனர். பத்பனாபதாசரின் பாவபிரகாசிகை, குருஹ்ருதய பிரகாசிகா ஆகியோரின் கன்னட உரையுடன், சங்கர்ஷண ஒடெயரின் சமஸ்கிருத உரையும், ஹரிகதாம்ருதசாரத்திற்கு அழகு சேர்க்கின்றன. தற்போது வெளிநாடுகளிலும் புகழடைந்திருக்கும் ஹரிகதாம்ருதசாரம் ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது என்பதை அறிகிறோம்.

சாஸ்திரங்களின் சாரம் எனப்படும் இந்த உத்தம கிரந்தத்தை கன்னடத்தில் கொடுத்து, வாழ்நாள் முழுக்க நினைத்து வணங்கப்படும் ஜகன்னாததாசரின் பாண்டித்யத்தை நம்மால் எடைபோடவே முடியாது.

பு$^{3}$த்தி$^{4}$ வித்$^{3}$யாப$^{3}$லதி பே$^{1}$ளித$^{3}$
ஷூத்த$^{4}$ கா$^{1}$வ்யவித$^{3}$ல்ல த$^{1}$த்வ சு
ப$^{1}$த்த$^{4}$தி$^{1}$க$^{3}$ளனு தி$^{1}$ளித$^{3}$ மானவனல்ல புத$^{4}$ரிந்த$^{3}$ |
மத்$^{4}$வவல்லப$^{3}$ தா$^{1}$னே ஹ்ருத$^{3}$யதொ$^{3}$
ளித்து$^{3}$ நுடி$^{3}$த$^{3}$ந்த$^{3}$த$^{3}$லி நுடி$^{3}$தெ$^{3}$ன
ப$^{1}$த்த$^{4}$க$^{3}$ள நோட$^{3}$த$^{3}$லெ கி$^{1}$விகொ$^{1}$ட்டா1லிபுது$^{3}$ பு$^{3}$த$^{4}$ரு ||
(சர்வபிரதீக சந்தி ஸ்லோகம் #18)

சமஸ்கிருதத்தின் ஸ்ரீஜயதீர்த்தரின் பணிவை நினைவுபடுத்தும் ஜகன்னாததாசரின் இந்த வாக்கியம், குறைவாகப் படித்தவர்களின் கர்வத்தைக் கண்டிப்பதுடன், அத்தகைய கவிகளின் மேல் நமக்கு இருக்கும் மரியாதையை மேலும் உயர்த்துகிறது.

ஹுப்பள்ளியின் S.S.காரந்த் அவர்கள் தொகுத்த ஹரிகதாம்ருதசார கிரந்தத்தை, ஹுப்பள்ளியின் சிடிபுக்ஸ் நிறுவனத்தார் வெளியிட்டிருக்கின்றனர். ஆண்டு தெரியவில்லை. விலை 3 ரூபாய்கள் எனத் தெரிகிறது. இந்தப் புத்தகத்தில் மொத்தம் 267 பக்கங்கள் உள்ளன. அதன் பொருளடக்கம் இவ்வாறு உள்ளது.

## 13. தத்வசுவ்வாலி

| | |
|---|---|
| 1. மங்களாசரண சந்தி (13) | 20. குணதாரதம்ய சந்தி (29) |
| 2. கருணா சந்தி (31) | 21. ப்ருஹத்தாரதம்ய சந்தி (57) |
| 3. வியாப்தி சந்தி (32) | 22. சகலதுரித நிவாரண சந்தி (35) |
| 4. போஜனரசவிபாக சந்தி (30) | 23. அபரோக்ஷதாரதம்ய சந்தி (63) |
| 5. விபூதி சந்தி (40) | 24. பிம்பாபரோக்ஷ சந்தி (31) |
| 6. பஞ்சமஹாயக்ஞ சந்தி (35) | 25. ஆரோஹணதாரதம்ய சந்தி (19) |
| 7. பஞ்சதன்மாத்ர சந்தி (33) | 26. அவரோஹணதாரதம்ய சந்தி (7) |
| 8. மாத்ருகா சந்தி (32) | 27. அனுக்ரமணிகா தாரதம்ய சந்தி (5) |
| 9. ஜீவப்ரகரண சந்தி (31) | 28. விக்னேஸ்வர சந்தி (21) |
| 10. சர்வப்ரதீக சந்தி (25) | 29. அணுதாரதம்ய சந்தி (16) |
| 11. த்யானப்ரக்ரிய சந்தி (32) | 30. தைத்யதாரதம்ய சந்தி (25) |
| 12. நாடிப்ரக்ரிய சந்தி (45) | 31. நைவேத்யசமர்ப்பண சந்தி (25) |
| 13. நாமஸ்மரண சந்தி (33) | 32. கக்ஷதாரதம்ய சந்தி (56) |
| 14. பித்ருகண சந்தி (31) | என்று மொத்தம் 32 சந்திகள் உள்ளன. |
| 15. ஸ்வாச சந்தி (29) | |
| 16. தத்தஸ்வாதந்த்ர்ய சந்தி (37) | |
| 17. ஸ்வகதஸ்வாதந்த்ர்ய சந்தி (15) | |
| 18. பிம்போபாசனா சந்தி (40) | |
| 19. ஸ்தோத்ரப்ரகரண சந்தி (35) | |

இவற்றில்,
1 முதல் 10 சந்திகள் வரை ஞானோபாய என்றும்
11 முதல் 17 சந்திகள் வரை மோட்ச சாதனோபாய என்றும்
18 முதல் 32 சந்திகள் வரை விஷயங்களை விவரிக்கும் சந்திகள் என்று சொல்கின்றனர்.

ஆனால் எந்த சந்தியிலும் சர்வகுண பரிபூர்ணம் முதலான வர்ணனைகள் இல்லை என்று சொல்லமுடியாது. (அனைத்திலுமே உள்ளது). மோட்ச சாதனோபாய சந்திகளில் ஞானோபாய விஷயமும் ஒன்றே ஆனதால், ஹரிசர்வோத்தமன் என்னும் விஷயங்கள் ஞானோபாயத்தைப் போல, மோட்ச சாதனோபாய சந்திகளிலும் காணப்படுகின்றன. போலவே, பக்தி, கர்மாசரணை போன்ற விஷயங்கள் மோட்ச சாதனோபாய சந்திகளிலும், ஞானோபாய சந்திகளிலும்கூட காணக்கிடைக்கின்றன. இப்படி எந்த சந்தி எந்த விஷயத்தைப் பேசுகிறது என்று வரையறுப்பது மிகவும் கடினம். இப்படி பிரிப்பதும் மிகவும் கடினமே. ஜகன்னாததாசரோ அல்லது அவர் சொல்லி வேறு யாராவதோ எழுதிய கைபிரதி கிடைத்தாலே இது சாத்தியம். ஆனால், கிரந்தத்தைப் படிப்பதற்கு ஏதுவாக இந்த சந்திகளை எப்படி பிரிக்கலாம் என்பதைப் பற்றி ஆராய்ச்சி செய்யலாம்.

ஹரிகதாம்ருதசார குருகள
கருணதிந்தாபனிது பேளுவே
பரம பகவத்பக்தரிதனாதரதி கேளுவுது

என்னும் பல்லவியுடன் துவங்கும் மங்களாசரண சந்தி மற்றும் விக்னேஸ்வர ஸ்தோத்திர சந்தி இவ்விரண்டையும் விட்டுவிட்டு மற்ற 30 சந்திகளை 1. ஹரியின் மகிமை 2. தாரதம்யம் 3. ஜீவனின் விஷயங்கள் 4. சாதனை விஷயங்கள் என்று நான்கு விதங்களாகப் பிரிக்கலாம்.

வியாப்தி, விபூதி, ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய, சர்வப்ரதீக, சகலதுரித நிவாரண, க்ரீடாவிலாஸ மற்றும் கருணா சந்திகளில் ஸ்ரீஹரியின் ஸ்வரூப நற்குணங்களையும், ஹரிசர்வோத்தம த்வத்தையும் விளக்கியிருக்கிறார்.

தாரதம்யத்தில் வரும் அணு, அனுக்ரமணிகா, அவரோஹண, ஆரோஹண, குண, தேவதா, தைத்ய, ப்ருஹத் என்று இந்த எட்டு சந்திகளில் சுரர், அசுரர், நரர் என்று அனைவரின் தாரதம்யமும் விளக்கப்பட்டிருக்கின்றன.

ஜீவப்ரகரண, தத்தஸ்வாதந்த்ர்ய என்னும் இரு சந்திகளில் ஜீவனின் ஸ்வரூப குணங்களை விளக்கியிருக்கிறார். கர்மவிமோசன, கல்பசாதன, நைவேத்ய, பஞ்சாக்னிஹோத்ர, பஞ்சதன்மாத்ர, பித்ருகண, போஜனரஸ, மாத்ருகா, ஸ்வாஸ, நாடி, த்யான, நாமஸ்மரண மற்றும் பிம்பாபரோக்ஷ என்னும் 13 சந்திகளில் சாதனை விஷயங்கள் பேசப்பட்டிருக்கின்றன. ஸ்ரீஹரியின் அருளுக்காக ஜீவன் செய்யவேண்டிய சாதனைகள் பற்பல உதாரணங்கள் மூலம் விளக்கப்பட்டிருக்கின்றன.
ஹரிகதாம்ருதசாரம் அனைத்து ஹரிபக்தர்களின் உயிர். வேதம், உபநிஷத்கள், பிரம்ம சூத்திரம், பாகவதம் முதலானவற்றில் ஏற்கனவே நிரூபிக்கப்பட்ட ஹரி சர்வோத்தமத்வ வர்ணனை, ஸ்ரீஹரியின் அனைத்து இடங்களிலும் நிலைத்திருக்கும் தன்மை, அனைத்து நற்குணங்களை விவரித்தல், தோஷங்கள் இல்லா தன்மைகளை விவரித்தல் ஆகிய அனைத்தையும் இங்கும் காண்கிறோம். வியாப்தி, விபூதி, ஸ்வகதஸ்வாதந்த்ர்ய, சர்வப்ரதீக, சகலதுரித நிவாரண, க்ரீடாவிலாஸ, கருணா என இந்த 7 சந்திகளில், பல்வேறு உதாரணங்களினால் விளக்கியிருக்கும் ஹரி சர்வோத்தமத்வம், ஹரிகதாம்ருதத்தின் பெயர்க் காரணத்திற்கு சரியான பொருள் கொடுக்கிறது எனலாம்.

எல்லி கே1ளித3ரல்லி நோடி3த3
ரல்லி பே3டி3த3ரல்லி நீடித3
ரல்லி ஓடித3ரல்லி ஆடி3த3ரல்லி இருதி1ஹனு
ப3ல்லித3ரிக3தி ப3ல்லித3னு சரி
இல்ல இவகா3வல்லி நோடலு
கு1ல்லமானவரொல்லன பிரதி1மல்ல ஜக3க்1கெ1ல்ல
(வியாப்தி சந்தி ஸ்லோகம் #21)

என்னும் ஸ்லோகத்தில் தாசர் ‘அந்தர்பஹிஸ்சதத் சர்வம் வியாப்த நாராயணஸ்தித:’ என்று ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறார் என்கிற நாராயண உபநிஷத்தின் வாக்கியத்தை விளக்குகிறார். அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பதோடு, அனைத்தையும் அவனே நடத்துகிறார் என்றும் சொல்கிறார்.

‘அணோரணீயான் மஹதோ மஹீயான்’ என்று காடகோபநிஷத்தில் சொல்லியவாறு ‘கர்தும், அகர்தும், ந்யதாகர்தும், சமகர்த’ என்று ஸ்ரீஹரியின் மிகப் பெரிய சக்தியினை தாசர் விளக்கும்விதம் மிக அழகானது.

அணு மஹத்தி1னொளிப்ப1 க4னப1ர
மணுவினொளடகி3ஸுவ சூக்1ஷ்மவ
முணுகி3சுவ தே1லிசுவ ஸ்தூ2லக3ளவின மாயவிது3
(வியாப்தி சந்தி ஸ்லோகம் #19)

அனைத்தையும் செய்கிறவனும், எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவனுமாக இருந்தாலும் ‘ஆலயகளொளகிப்ப தீப | ஜ்வாலேவர்த்திகளனுசரிஸி ஜன | ராலிகளிகொப்புவ தெரதி ஹரிதோர்ப சர்வத்ர ||’என்பதுபோல ஸ்ரீஹரி அனைவருக்கும் சுலபமாக காட்டிக்கொள்வதில்லை. ஆனால் அவரை ‘அத்ருஸ்ய அதவா ஞானகோசர’ என்பதுபோல் ஞானத்தினால் மட்டுமே காணமுடியும் என்பதை அறியவேண்டும்.

த்1ருண க்1ருதா1லயதொ3ளகெ3 பொ1கெ3 ஸன்

த$^{3}$ணிஸி ப்ரதி$^{1}$சித்ரத$^{3}$ல்லி பொ$^{1}$ரெம
ட்ட$^{1}$னலனிரவனு தோ$^{1}$ரி தோ$^{1}$ரத$^{3}$லிப்ப தெ$^{1}$ரனந்தெ$^{1}$ |
வனஜஜாண்டதொ$^{3}$ளகி$^{1}$ள ஜீவர
த$^{1}$னுவினொளஹொரகி$^{3}$த்து$^{1}$ கா$^{1}$ணிஸனிமிசேஷனு
சக$^{1}$ல க$^{1}$ர்மவ மாள்ப$^{1}$னவரந்தெ ||
(வியாப்தி சந்தி ஸ்லோகம் #12)

விளக்கு பளிச்சென்று எரிந்துகொண்டிருந்தாலும், தூரத்தில் இருப்பவர்களுக்கு அது விட்டுவிட்டு எரிவதைப் போல தெரியும். அதுபோல, ஞான பக்திகள் இல்லாமல், ஸ்ரீஹரி யிடமிருந்து தூரத்தில் இருந்தால், அவர்களின் கண்ணுக்கு அவன் தெரிவதில்லை. ஒரு குடிசையினுள் நெருப்பு இருந்தால், அதிலிருந்து வெளிவரும் புகையிலிருந்து உள்ளே இருக்கும் நெருப்பினை அறிவதுபோல, நமக்கு அப்பாற்பட்டு பல செயல்கள் நடக்கும்போது அதிலிருந்து ஸ்ரீஹரியின் இருப்பை நம்மால் அறியமுடியும். இங்கு குடிசை, மனது என்று இரு பதத்திற்கும் பொருந்துமாறு 'த்ருணக்ருதாலய' என்னும் சமஸ்கிருதச் சொல்லை பயன்படுத்தியதின் மூலம் ஜகன்னாததாசரின் புலமை வெளிப்படுகிறது. இப்படியாக, ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் இருந்தாலும், அவரவர்களின் தகுதிக்கேற்ப தரிசனம் கொடுக்கிறான் என்று தெரியவருகிறது.

அனைத்து ஜீவர்களிலும் ஸ்ரீஹரி இருந்தாலும், அந்த ஜீவனுக்கு உண்டாகும் துக்கம், வரும் பாவங்கள் இதிலெல்லாம் ஸ்ரீஹரியை சம்பந்தப்படுத்தக்கூடாது. ஸ்ரீஹரி, எவ்வித தோஷங்களும் அற்றவர் என்று பகவத்கீதையில் சொல்லப்பட்டிருக்கும் விஷயத்தை ஜகன்னாததாசர் பின்வருமாறு பாடுகிறார்.

கா$^{1}$த$^{3}$ க$^{1}$ப்பி$^{3}$ண ஹிடி$^{3}$து$^{3}$ ப$^{3}$டி$^{3}$யலு
வேத$^{3}$னெயு லோஹக$^{3}$ளிக$^{3}$ல்லதெ$^{3}$
ஆது$^{3}$தே$^{3}$னெ அனலகா$^{3}$வ்யதெ$^{1}$யேனு மாடித$^{3}$ரு |
ஆதி$^{3}$தே$^{3}$வனு சர்வஜீவர
கா$^{1}$து$^{3}$கொ1ண்டிஹ ஔஹொரகெ$^{3}$ துக்
கா$^{4}$திக$^{3}$ள சம்ப$^{3}$ந்தவாகு$^{3}$வுதே$^{3}$னோ சின்மயகே$^{3}$ ||
(வியாப்தி சந்தி ஸ்லோகம் #27)

ஸ்ரீஹரி, அனைத்து ஜீவர்களிலும் இருந்தாலும், அந்த ஜீவனுக்கு வரும் நோய், நொடி, சாவு, துக்கம் இப்படி எதிலும் சம்பந்தப்படாமல் தனித்து இருக்கிறார் என்பதை காதகப்பிண என்னும் உவமையினால் விளக்குகிறார். அந்தந்த ஜீவர்களின் தகுதிக்கேற்ப, அவர்கள் செய்யும் செயல்களுக்கேற்ப ஸ்ரீஹரி பலன்களைக் கொடுக்கிறார் என்பதாலேயே, அவர் பாரபட்சம் உள்ளவர் என்றும் தயை இல்லாதவர் என்றும் சொல்லமுடியாது என்றும் அவருக்கு எவ்வித தோஷங்களும் இல்லை என்னும் விஷயத்தையும் விளக்குகிறார் தாசர்.

இப்படியாக ஸ்ரீஹரி, அனைத்து நற்குணங்கள் நிரம்பிய வனாகவும், தோஷங்கள் இல்லாதவனாகவும் இருப்பதால், அவனே சர்வோத்தமன் என்பதை பல உதாரணங்களில் விளக்க முற்பட்டிருக்கும் ஸ்ரீஜகன்னாததாசரின் முயற்சி, வெற்றியடைந்திருக்கிறது என்றே சொல்லமுடியும்.

தாரதம்யம் ததோஞேயம் சபோச்சத்வம் ஹரேஸ்ததா |
ஏதத்வினன கல்யாபி விமுக்தி: ஸ்யாத் கதஞ்சன ||

என்று ஆசாரியர் சொல்வதைப்போல, ஹரிசர்வோத்தமத்வ ஞானத்துடன் தாரதம்ய ஞானமும் முக்திக்கு மிகவும் அவசியம். ஹரிசர்வோத்தமத்வ ஞானத்தைப் பெறுவதற்கே

இந்த தாரதம்ய ஞானம் அவசியம். ஸ்ரீஹரியை அறிந்து, மற்ற ஞானானந்தாதிகளுக்கு எந்தவொரு வரையறையும் இல்லை என்பதை அறிந்து, ஸ்ரீஹரி ஒன்றே ஞானானந்தாதி சகலகுண சம்பூர்ணன் என்று தெரிந்து, அதன்மூலம் அவன் ஒருவனே சர்வோத்தமன் என்பதை அறியவேண்டும்.

பவமான மதத்தைச் சேர்ந்தவர்களுக்கு தாரதம்யம் என்னும் தத்வம் மிகவும் முக்கியமானது. அதற்காகவே பாகவத, ஆனந்ததீர்த்தரின் மஹாபாரத தாத்பர்ய நிர்ணயம் ஆகியவற்றில் தாரதம்யக் கருத்துகள் மிகவும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. மோட்சத்தை விரும்புபவர்களுக்கு மிகவும் முக்கியமான கிரந்தமான ஹரிகதாம்ருதசாரத்திலும், இந்த தாரதம்ய விஷயம் மிகவும் விளக்கமாக கையாளப்பட்டுள்ளது. தாரதம்யத்தை விளக்குவதற்கு இந்த கிரந்தத்தில் எட்டு சந்திகள் பயன்பட்டிருப்பதைக் காணும்போது, இதன் சிறப்பு விளங்குகின்றது.

இந்த தாரதம்ய தத்வத்தை சூளாதிகளில் மிகச் சிறப்பாக விளக்கிய பெருமை ஸ்ரீவிஜயதாசரையே சேரும். ஞானானந்தத்தை அடைவதற்கு மிகவும் தேவையான இந்த தாரதம்யம் இரு விதமானது - ஆரோகணம் (ஏறுவரிசை) - அவரோகணம் (இறங்குவரிசை). உலகில் சிறு கிருமி முதல், அனைத்திற்கும் காரணமான ஸ்ரீஹரி வரைக்கும் விளக்குவது ஆரோகண தாரதம்யம் என்றால், அதற்கு எதிர்ப்பதம் அதாவது ஸ்ரீஹரியில் துவங்கி, படிப்படியாக கீழிறங்கி விளக்குவது அவரோகண தாரதம்யம் ஆகும். இதை விளக்குவதற்காக ஜகன்னாததாசர் - அணு, அனுக்ரமணிகா, அவரோகண, ஆரோகண, குண, தேவதா, தைத்ய, ப்ருஹத் - என்ற தலைப்புகளில் எட்டு சந்திகளில் பாடியிருக்கிறார்.

அசையாப் பொருட்களான மலைகளின் அபிமானி தேவதைகள் அந்த அசையாப் பொருட்களைவிட உத்தமர்கள் ஆவர். சிறு கிருமிகளைவிட பசு, பறவைகள் உத்தமானவை என்றால், அவர்களைவிட மனிதர்கள் சிறந்தவர்கள். அவர்களைவிட நற்காரியங்களைச் செய்யும் சஜ்ஜனர்கள் உத்தமர்கள். அவர்களைவிட மனித சக்ரவர்த்திகள் உத்தமர்கள். பிறகு மனித கந்தர்வர்கள். பிறகு வரிசையாக, ரிஷிகள், சிரபித்ருகள், தும்புரர், ஊர்வசி முதலான அப்ஸர ஸ்த்ரியர்கள், அஜானஜ தேவதைகள், அக்னிபுத்ரிகள், கர்மாதிபதி புஷ்கர, சனி, அஸ்வினி தேவதைகளின் மனைவியர் உஷா, கங்கா, சங்ஞா, ஷாமளா, ரோகிணி ஆகியோர் உத்தமர்கள். இவர்களைவிட ப்ருது, நஹுஷ, ஷஷபிந்து, ப்ரியவ்ருத, பரிக்ஷித், யயாதி, பரத, மாந்தாத ஆகிய சக்ரவர்த்திகள், சனக, சனந்தன, சித்ரகுப்தர், ஜயந்தன் முதலான கர்மஜ தேவதைகள் ஆகியோர் உத்தமர்கள்.

இவர்களைவிட, குபேரன், விஸ்வக்சேனன், கணபதி, அஸ்வினி தேவதைகள், மித்ர (12 ஆதித்யர்களில் முதலாமவர்), தாரா, நிரருதி, ப்ராவஹி (ப்ரவஹ வாயுவின் மனைவி) ஆகியோர் உத்தமர்கள்.இவர்களைவிட, சப்தரிஷிகள் (மரீசி, அத்ரி, ஆங்கிரஸ, புலஸ்த்ய, புலஹ, க்ருது, வசிஷ்ட), விஸ்வாமித்ர, வைவஸ்வத மனு, ஸ்வாஹாபதி அக்னி, ப்ரஸூதி (தக்ஷனின் மனைவி), ப்ருகு, நாரத, வருண, யமன், தக்ஷ, சசி, ரதி, அஹங்காரிக ப்ராண ஆகியோர் உத்தமர்கள்.

இவர்களைவிட, இந்திரன், காமன், பார்வதி, வாருணி, சௌபர்ணி, கிருஷ்ணனின் ஆறு மனைவியர் (ஜாம்பவதி, லக்ஷணா, காளிந்தி, நீலா, பத்ரா, மித்ரவிந்தா) - இவர்களில் ஜாம்பவதி சிறந்தவள். பிறகு ருத்ர, சேஷ, கருடர் ஆகியோர் சிறந்தவர்கள்.

பக்தி, தகுதி, ஞானம் ஆகிய குணங்களில் இவர்களைவிட சிறந்தவர் பிரம்ம, வாயு, சரஸ்வதி, பாரதி ஆகியோர். ஜீவோத்தமர் என்று அழைக்கப்படும் இந்த பிரம்மா, வாயுகளைவிட கோடி குணங்கள் அதிகம் உள்ளவர் லட்சுமிதேவி. ஜகன்மாதா என்று அழைக்கப்படும் லட்சுமிக்கு கணவன் ஸ்ரீஹரி. அவனே சர்வோத்தமன்.

ஈசு மஹிமெக3ளுள்ள லகு1மீ ப1
ரேஷனானந்தா3ம்ஷ கு3ணதொ3ளு
லேஷ லேஷகெ1 சரியெனிஸளாவாவ கா1லத3லி
(ஆரோகண தாரதம்ய சந்தி ஸ்லோகம் #13)

என்று சொல்லியதைப் போல, லட்சுமியானவர் மிகுந்த மகிமை பொருந்தியவர் ஆனாலும், ஸ்ரீஹரிக்கு சமமானவர் அல்ல. ஆக ஸ்ரீஹரிக்கு சமமானவர் என்று யாருமே இல்லை ஆதலால், அவரைவிட சிறந்தவர் யாருமே இல்லை என்பது தெளிவாகிறது.

ஸ்ரீஹரியே சர்வோத்தமன். இதைபோல, தைத்யர்களிடமும் தாரதம்யம் உள்ளது. தேவதைகளிடமும் தாரதம்யம் உள்ளது. இந்த விஷயங்களை ஸ்ரீஜகன்னாததாசர் இவ்வாறு விவரிக்கிறார்.

கிர்மீர, கும்பகர்ண, வேன, ஹம்ஸ, டிபிகரு, காலகேய, துந்துமார, லவண, த்ருணாவர்த, கேளி, தேனுக, பாண, த்வாபர, ஹிடிம்ப, ஷம்பர, ஸால்வ, தாரக, பக, ஹிரண்யாக்ஷ, ஹிரண்யகசிபு, மணிமந்த, மதுகைடப, காலநேமி, விப்ரசித், பௌம, அலக்ஷ்மி மற்றும் கலி என்று ஒவ்வொருவரும் தமக்கு மேல் இருப்பவரைவிட நூறு குணங்கள் குறைவானவர்கள். இவர்கள் அனைவரில் முதலாம் தைத்யன் கலி ஆவான்.

இவன போ1லுவ பா1பி1 ஜீவரு
பு4வன மூரரொளகி3ல்ல நோட3லு
நவவிதத்4வேஷக3ள கா3க1ர னெனெஸி கொ1ளுதி1ப்ப1
(குண தாரதம்ய சந்தி ஸ்லோகம் #20)

என்பதுபோல இந்த கலியானவன், பரமதுஷ்டன். மகாபாபி ஆவான். நற்காரியங்களுக்கு தடைபோடுவதில் இவன் மிகச் சிறந்தவன். ஆனால் இவனைக் கண்டு சாதகர்கள் பயப்படத் தேவையில்லை.

ப4வரதலி ப3ங்காரதலி நட1 யுவதி1 த்3யோதா1பே1யத3லி ம்ருஷத3லி |
க3விஸி மோஹிஸி கெ1டிசுவனு எந்த3ரிது த்1யஜிசுவுது3 ||

என்கிற ஜகன்னாததாசரின் வாக்கின்படி, கலிக்குப் பிடித்தமானவற்றை விலக்கி, அவனின் இடையூறுகளை முறியடிக்கலாம். இப்படி தாரதம்யத்தின் சிறப்புகளை இங்கே பார்க்கலாம்.

இத்தகைய விவரமான தாரதம்யத்தின் ஞானத்தின்படி ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிந்து தெளிவுற வேண்டும். ஸ்ரீஹரியின் குறைகளற்ற குணங்களை அறிந்துகொள்ளும் ஜீவன், அவன் மேல் மிகுந்த பிரியம்/ பக்தி கொண்டால், அந்த தூய்மையான பக்தியின் மூலம் வாழ்க்கையிலிருந்து நிரந்தர முக்தியை பெறுகிறான். முக்தியைப் பெறுவது என்றால், தன்னுடைய ஸ்வரூப சுகத்தை அனுபவித்தல் என்கிறது த்வைதம். ஜீவன், ஞானானந்த ஸ்வரூபன் என்றால், அவன் ஏன் வாழ்க்கையில் துக்கங்களைப் பெறவேண்டும்? என்று கேட்கலாம். இதற்கான பரிகாரம்,

ஜீவனின் மூல ஸ்வரூபத்திலேயே அடங்கியிருக்கிறது. ஹரிகதாம்ருதசாரத்தின் ஜீவப்ரகரண சந்தியானது இந்த விஷயங்களை தெளிவுபடுத்துகிறது.

அஹமித்யேவ யோ வேத்ய: ஸ ஜீவ இதி கீர்த்தித: |
ஸ துக்க ஸ சுகே சைதஸ பாத்ரம் பந்த மோக்ஷயோ: ||

என்றால் நான் என்னும் நினைப்பு ஜீவனுக்கு அனைத்து நிலைகளிலும் இருக்கும்.

அனைத்து விதமான சுகதுக்கங்களும் அவனுக்கு வரும். உடலின் எந்த பாகத்திலும் சுகம் அல்லது துக்கம் ஏற்பட்டாலும், அதனை அனுபவிக்கும் ஜீவன் 'அணு' ரூபமானவன் என்றால் வியப்படைவது சகஜம்.

கு1து3ரெ பா3லத3 கொ1னெய கூ1த3ல
து1தி3 விபா4க3வ மாடி3 ஷத1வித3
வத3ரொளந்த3னு நூறு பா4க3வ மாட3லெந்திஹுதோ3 |
விதி3த1வாதி3 சமஸ்த1 தி3விஜர
மொத3லு மாடி த்ருணாந்த1 ஜீவரொ
ளதி3க1 ந்யூனதெ1 இல்லவெந்தி3கு3 ஜீவ ப1ரமாணு ||
(ஜீவப்ரகரண சந்தி ஸ்லோகம் #7)

ஜீவன் அணு ரூபமானவன். மிகச்சிறியவன் என்பதற்கு ஒரு உதாரணத்தைத் தருகிறார் ஜகன்னாததாசர். குதிரையின் வாலின் ஒரு முடியை நூறு பாகங்களாகப் பிரித்து அதில் ஒரு பாகமே ஜீவன் என்கிறார். நெருப்பில் சுட்டோ, ஆயுதங்களால் பிளந்தோ, நீரில் மூழ்கடித்தோ, ஜீவனைக் கொன்றுவிட முடியாது என்னும் பகவத்கீதையின் விஷயத்தை பல தாசர்கள் தங்கள் பாடல்களில் சொல்லியிருக்கிறார்கள். இப்படி அழிக்கமுடியாத, முடிவில்லாத ஜீவன், 'பரமாணு பிரதேஷேஷு ஹ்யனந்தா ஜீவராசிய' என்பது இதையே விளக்குகிறது.

ஆகையால் ஒருமுறை சம்சாரத்தில் இறங்கிய ஜீவன் பற்பல பாவங்களை செய்யத் துவங்குகிறான். இப்படி பற்பல பிறவிகளில் செய்த பாவங்களே அவனை மறுபடி மறுபடி சம்சாரத்திலேயே தள்ளுகின்றன. வினைப்பயனை அனுபவிக்கும்போது அதனுடன் குறைந்தது பத்து பிறவிகள் எடுக்கவேண்டியிருக்கிறது. இத்தகைய கர்மங்களினாலேயே ஜீவன் நிரந்தரமாக கஷ்டங்களை அனுபவிக்கிறான். இதைப் போல, ஒரு ஜீவனை மறுபடி மறுபடி சம்சாரத்திற்குள் தள்ளுவதில் முக்கிய பங்காற்றுவது – பொருட்களின் மேல் இருக்கும் ஆசை / அபிமானம். இவைகளுடன் 'ஸ்வகுணாச் சாதிகா' மற்றும் 'பரமாச்சாதிகா' என்னும் ஒரு மாயைகளும் சேர்கின்றன. இன்று நாம் ஜீவனின் காணும் சுதந்திரத்திற்கு 'ஸ்வகுணாச்சாதிகா' என்னும் விஷயமே காரணம். ஜீவனில் இருக்கும் இந்த ஸ்வதந்த்ரத்தின் அளவு எவ்வளவு என்பதை தாசர் விளக்குகிறார்.

த்விதி1ய பா1த3வ தெ1கெ3து3 கொ1ண்ட3த3
ஷத1விபா4க3வ மாடி3 தா1 விம்
ஷதி1 உமேஷனொளிட்டு1 இந்த்ரனொளைதி3க1 ஹத்து1 |
ரதி1பனொளகி3னிதி3ட்டகி3ள தே3
வதெ1க3ளொளகீ3ரைது3 ஜீவ
ப்ரத1தி1யொளு த3ஷ வைத3தி3க1 நால்வத்து1 தை3த்1யரொளு
(க்ரீடாவிலாச சந்தி ஸ்லோகம் #12)

என்பதை கவனிக்க வேண்டும். ஸ்ரீஹரியிடம் இருக்கும் ஸ்வதந்திரத்தில் பாதியை நான்கு பாகங்களாகப் பிரித்து, அதில் ஒன்றை நூறு பாகங்களாகப் பிரித்து, அதை சிவனுக்கு 20, இந்திரனுக்கு 15, மற்ற தேவதைகளுக்கு 10, தைத்யர்களுக்கு 45 என்று பிரித்துக் கொடுத்தபோது மீதம் இருந்த 10ஐ மனிதர்களுக்குக் கொடுத்தார். அதையும் அனைத்து மனிதர்களும் பிரித்தெடுத்துக் கொண்டால், நம் ஒவ்வொருவருக்கும் கிடைப்பது எவ்வளவு? சிறிதளவே அரிசி போட்டு வடித்து, அதை நூற்றுக்கும் அதிகமான பேர் பிரித்து சாப்பிடுவதைப் போல. ஒவ்வொருவருக்கும் கிடைக்கும் ஸ்வதந்திரம் மிகமிகக் குறைவு.

## 13. தத்வசுவ்வாலி

ஜீவன் தானே ‘ஸ்வதந்திரன்’ என்ற பிரமையில் இருப்பதற்குக் காரணமான இந்த ஸ்வதந்திரமே ‘தத்தஸ்வாதந்த்ர்ய’ என்னும் பெயரில் அழைக்கப்படுகிறது. மிகமிகக் குறைவாக இருப்பதை, இல்லை என்றே நாம் பொதுவாக சொல்வதைப் போல, ஜீவனுக்கும் எந்தவித சுதந்திரமும் இல்லை என்றே சொல்ல வேண்டியதாகிறது.

இப்படி ஜீவனில் இருக்கும் அஸ்வாதந்த்ர்ய, அல்ப சுகத்வம் ஆகிய குணங்களைப் பற்றி அறிவு அவனுக்கு ஆகாமலிருக்க ‘ஸ்வகுணாச்சாதிகா’ என்பது தடையாக இருக்கிறது. ‘பரமாச்சாதிகா’ என்பது ஸ்ரீஹரியிடமிருக்கும் பரம-ஸ்வாதந்த்ர்ய, சர்வோத்தமத்வ ஆகியவற்றைத் தெரிந்து கொள்ளும் அறிவு ஜீவனுக்கு வராமலிருக்க தடையாக இருக்கிறது. இதன் முடிவு என்னவென்றால், ஜீவன், தானே சுதந்திரன், தானே சர்வர்கர்த்ரு (அனைத்தையும் நடத்துபவன்) என்று நினைத்து, அந்த நினைப்பே அவனை சம்சார சாகரத்தில் தள்ளுகிறது.

ஜீவனகெ3 து1ஷத3ந்தெ3 லிங்க3வு
சாவகா1ஷதி3 பொந்தி3 சுத்த1லு
ப்ராவரண ரூபத3லி இப்புது3 ப4க3வதி3ச்செயலி |
கே1வல ஜட3ப்1ரக்ருதியிதகதி
தே3வதெ1யு மஹாலகு1மி யெனிப1ளு
ஆவிரஜிய ஸ்னான ப1ரியந்த1ரதி3 ஹத்தி1ஹுது3 ||
(ஜீவப்ரகரண சந்தி ஸ்லோகம் #13)

ஜீவனின் ஸ்வரூப தேகத்தின் மேல் ஒரு கவசத்தைப் போல லிங்கதேகம் இருப்பதைப்போல, ஜீவன் பிறப்பு/இறப்பு களிலிருந்து தப்புவதில்லை. ஸ்ரீஹரியிடம் சுத்தமான பக்தியைப் பெற்றபிறகு, விரஜா நதி ஸ்னானத்தினால் அவனின் லிங்கதேகம் பங்கம் ஆனபிறகே பிரம்மாதிகளுக்கும் முக்தி என்கிறது த்வைதம். சுகஸ்வரூபன் என்னும் ஜீவனின் மேல் ஒரு உறையைப் போல இருக்கும் இந்த லிங்கதேகம் என்னும் கவசம் விலகிய உடன், ஜீவன் ஸ்வரூபானந்தத்தைத் தேடத் துவங்குகிறது. இப்படி ஒரு ஜீவனுக்கு அவனது ஸ்வரூபா னந்தத்தைத் தேடுவதற்குத் தடையாக லிங்கதேகம் இருக்கிறது.

இது மட்டுமல்லாமல், ஜீவனுக்கு துக்கமயமான வாழ்க்கை கிடைப்பதற்கு மேற்கூறியவைகளுடன், ஸ்ரீஹரியின் விருப்பமும் சேர்கின்றது. ‘தேன வினாத்ருணமபி ந சலதி’ என்று ஒரு புற்கட்டு அசைவதற்கும் ஸ்ரீஹரியின் விருப்பம் தேவை என்று த்வைதம் சொல்வதைப் போல, சம்சாரத்தில் மூழ்கியிருக்கும் ஜீவன், பற்பல பிறவிகளில் சுற்றி, நிரந்தர துக்கத்தை அனுபவித்து பிறகே ஸ்ரீஹரியின் விருப்பம் அவசியம் என்று நினைத்தால் அதில் வியப்படைய ஒன்றுமில்லை.

க1விஸி மாயாமரண மோஹவ
ப4வகெ1 கா1ரணனாகு3வனு சம்
ஸ்ரவண மனனவ மாள்ப1ரிகெ3 மோசக1னெனிசுதி1ப்ப1 ||
(பிம்பாபரோக்ஷ சந்தி ஸ்லோகம் #8)

ஈ ஷரீரகெ3 பு1ருஷ த்ரிகு3ணதி3
ஸ்ரீ ஸஹித1 தா1னித்து3 ஜீவரி
கா3ஸெ லோப4ஞான மத3 மத்1ஸர கு1மோஹ க்ஷுதா1 |
ஹாஸ ஹருஷ சுஷுப்தி1 ஸ்வப்னபி1
பா1ஸ ஜாக்3ருதி1 ஜன்ம ஸ்தி2தி1 ம்ருதி1
தோ3ஷ பு1ண்ய ஜயாப1ஜய த்3வந்த்3வக3ள க1ல்பிஸித3 ||
(பிம்பாபரோக்ஷ சந்தி ஸ்லோகம் #7)

ஜீவன் மற்றும் ஸ்ரீஹரி இருவரும் ஞானானந்தாதி ஸ்வரூபியாக இருந்தாலும், அஞ்ஞானம், காம, மாயை ஆகியவற்றில் ஜீவன் மூழ்கி சம்சாரத்தில் சுழல்கிறான். இருக்கும் அனைத்து ஜீவராசிகளிலும் ஒரே ஒரு கூட்டத்திற்கு மட்டும் இத்தகைய சம்சாரச் சுழல் சிக்குகிறது. துக்கத்தைத் தரக்கூடிய இந்த வாழ்க்கையே, ஜீவனுக்கு சாதனையை செய்யக்கூடிய இடமாகும் என்பது கவனிக்கத்தக்கது.

ஸ ஏவ க்ரீடனார்தாய ஜீவானாம் கதி ஹேதவே |
தேஹ யோகேன சம்ஸ்ருஜ்ய ||

என்பதுபோல, வாழ்க்கை எனப்படும் இந்த படைப்பு, ஸ்ரீஹரிக்கு ஒரு விளையாட்டு என்றால், ஜீவர்களுக்கு அவரவர்களுக்கு சத்கதியைக் கொடுப்பதற்காக என்று சொல்லலாம்.

இப்படியாக பற்பல பாவங்களினால் சம்சாரத்திலேயே மூழ்கியிருக்கும் ஜீவன், இத்தகைய சம்சாரத்திலிருந்து விடுதலை பெறுவதற்குத் தேவையான சாதனைகளை ஹரிகதாம்ருதசாரத்தில் சொல்லியிருக்கிறார். இதன் மொத்த விவரங்கள் – கர்மவிமோசன, கல்பசாதனை, நாமஸ்மரண, நைவேத்ய, பஞ்சாக்னிஹோத்ர, பித்ருகண, போஜனரஸ, மாத்ருகா, ஷ்வாஸ, நாடி, த்யான மற்றும் பிம்பாபரோக்ஷம் என்னும் 13 சந்திகளில் விளக்கியிருக்கிறார் தாசர். இதில் பற்பல சாதனைகளின் ஒவ்வொரு விவரமும் மிகச் சிறப்பானவை என்று தாசர் இங்கு சொல்லியிருக்கிறார்.

க்3ருஹகு1டும்ப4 த4னாதி3க3ள ஸன்
னஹக3ளுள்ளவராகி3 விஹிதா1
விஹித1 த4ர்ம சுக1ர்மக3ள தி1ளியத3லெ நித்1யத3லி |
அஹர மைது2ன நித்3ரெகொ3ளகா3
கி3ஹரு சர்வ ப்1ராணிக3ளு ஹ்ருத்
கு3ஹ நிவாஸியனரியதலெ ப4வதொ3ளகெ3 தொ1ளலுவரு ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் #24)

உத்தம செயல்களை செய்வதற்கு உதவும் இந்திரியங்களை சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ளாமல், சம்சாரக் கடலில் ஜீவன் மூழ்குகிறான். தற்காலிக விஷயங்களின் மேல் மனதைப் பறிகொடுத்து, இந்திரியங்களை வீணடிப்பதன் மூலம், இந்த சம்சாரத்திலிருந்து தப்பிப்பதற்காக அவன் செய்யும் நற்செயல்கள் அனைத்தும் வீணாகவே முடிகின்றன.

இந்திரியங்களை ஸ்ரீஹரியிடம் ஈடுபடுத்துமாறு தாசர் இப்படியாக கூறுகிறார்.
ஹரியே முக்2ய நியாமக1னு என்
த3ரிது3 பு1ண்யாபு1ண்ய ஹர்ஷா
மருஷ லாபா4லாப4 சுக2துக்கா2தி3 த்வந்த்3வக3ள |
நிருத1 அவனங்க்4ரி சமர்ப்பி1ஸி
நரக1 பூ4 ஸ்வர்கா4ப1வர்க3தி
க1ரண நியாமக1ன சர்வத்ரத3லி நெனெவுதி1ரு ||
(ஸ்தாவரஜங்கம சந்தி ஸ்லோகம் #14)

தன்னை மேன்மேலும் சம்சாரத்தில் மூழ்கடிக்கும் சுக துக்கங்களிலிருந்து விடுதலை பெறுவதே ஜீவனுக்கான சாதனையாகும். பகவத்கீதையில் ஸ்ரீஹரி சொன்னதைப் போல, இருவிதமான கர்மங்களையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்து, அவற்றிலிருந்து தப்பிக்கும் வழியின்மேல் கவனத்தை செலுத்தவேண்டும். இதைப் போலவே ‘ந அஹம் கர்த்தா ஹரி:

கர்த்தா தத்பூஜா கர்மஜாகிலம்’. அதாவது – எதையும் நான் செய்வதில்லை. அனைத்திற்கும் ஸ்ரீஹரியே காரணம். அனைத்து செயல்களும் ஸ்ரீஹரியின் பூஜையே ஆகும் என்னும் சமர்ப்பண பாவத்துடன் சாதகர்கள் சாதனைகளை செய்யவேண்டும். மத்வாசாரியர் சொன்ன இந்த விஷயத்தை தாசர் இவ்வாறு கூறுகிறார்.

நானு நன்னது எம்ப3 ஜட3மதி1
மானவனு தி3னதி3னதி3 மாடு3வ
ஸ்னான ஜப தே3வதா1ர்ச்சனெயு மொத3லாத3 க1ர்மக3ள |
தா3னவரு செளெதொய்வரல்லதெ3
ஸ்ரீனிவாசனு ஸ்வீக1ரிஸ மித்
தா3னெ பக்1வ க1பித்த2ப2ல ப4க்ஷிஸிதவோலஹுது3 ||
(சர்வப்ரதீக சந்தி ஸ்லோகம் #13)

என்று தாசர் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கும் செயல்கள் என்றால் அது தேவபூஜை, பிரார்த்தனைகள் மட்டுமல்ல. உணவு உண்பது, தூக்கம் என்று அனைத்து வித செயல்களும் என அனைத்தையுமே சமர்ப்பிக்க வேண்டும் என்பதே ‘சாதன பிரகரண’த்தின் சாராம்சம் ஆகும். ஸ்ரீஹரியை எப்போதும் நினைத்திருப்பதே ‘அனுசந்தானம்’. அப்படி அனைத்து நேரங்களிலும் நினைக்காவிட்டால், செய்யும் தேவபூஜைகளும் வீணே என்கிறார் தாசர். அதற்கே த்வைத சித்தாந்தத்தில் ‘அனுசந்தானத்திற்கு’ மிக முக்கியத்துவம் கொடுக்கின்றனர்.

ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் இருக்கிறார் என்னும் சிந்தனை சாதகர்களுக்கு இருந்தே ஆகவேண்டும். அதுபோல பலவிதமான பொருட்களில், மற்றும் மனித உடலின் பல பாகங்களில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களின் அறிவு, ஒரு ஞானிக்கு மிகவும் அவசியம் ஆகும்.

க1பில நரஹரி பா4ர்க3வ த்1ரய
வபு1ஷ நேத்1ரதி3 நாசிகா1ஸ்யதி3
ஷபர நாமக1 ஜிஹ்வெயலி த3ந்த1த3லி ஹம்ஸாக்1ய |
த்ரிபதி3பாத்3ய ஹயாஸ்ய வாச்யதொ3
ளபரிமித1சுக2 பூர்ண சந்த1த1
க்ருபணதொளகி3த்த3வரவர ரஸ ஸ்வீக1ரிஸி கொ1டுவ ||
(போஜனரசவிபாக சந்தி ஸ்லோகம் #7)

ஜகன்னாததாசரின் இந்த ஸ்லோகம் ஒரு சாதகனுக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. மனித உடல் உறுப்புகளில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களைப் பற்றிய அறிவு இருந்தால், அந்தந்த உறுப்புகளால் நடக்கும் செயல்கள் அனைத்தும் ஸ்ரீஹரியின் பூஜையே ஆகும்.

அதுபோலவே, சாப்பாட்டின் பல்வேறு பதார்த்தங்களில் ஸ்ரீஹரியின் பல ரூபங்களை நினைக்கும் விஷயத்தையும் தாசர் சொல்கிறார்.

அன்னமானி ஷஷாங்க1தொ3ளு கா1
ருண்ய சாக3ர கே1சவனு பர
மான்னதொ3ளு பா4ரதி1யு நாராயணனு ப3க்ஷ்யதொ3ளு |
ஸொன்னக1திரனு மாத4வனு ஷ்ருதி1
சன்னுத1 ஸ்ரீலக்ஷ்மி க்3ருத1தொ3ளு
மான்ய கோ3விந்தா3பித3னு இருதி1ப்பனெந்தெ3ந்து3 ||
(நைவேத்ய ப்ரகரண சந்தி ஸ்லோகம் #14)

புருஷ சூக்தத்தில் 'சாஷனானஷனே அபி' என்றால் ஸ்ரீஹரி அனைவருக்குள்ளும் இருந்து, உணவின் ரசத்தை ஏற்றுக்கொண்டாலும், அவன் ஒரு 'உபவாஸி' என்கின்றனர். இதையே தாசராயரும் நினைவுபடுத்துவது கவனிக்க வேண்டிய விஷயம். பற்பல உணவுப் பொருட்களில் இருக்கும் இத்தகைய ஸ்ரீஹரியின் ரூபங்களை சிந்தித்தவாறு உணவு உட்கொண்டால் அதுவே ஒரு யக்ஞம் எனப்படுகிறது. ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்காத பொருட்களை சாதகர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்று பகவத்கீதையில் சொல்வதைப் போல, மத்வரின் சதாசாரஸ்ம்ருதியின் வாக்கியங்களும், நைவேத்தியத்தின் சிறப்புகளை விளக்குகிறது.

ஈஸனலி விக்3ஞான ப4க3வத்1
தா3ஸரலி சத்ப4க்தி விஷயனி
ராசெ மித்1யாவாதி3யலி ப்ரத்1வேஷ நித்1யத3லி ।
ஈ சமஸ்த1 ப்ராணிக3ளலி ர
ரமேஷனிஹனெந்த3ரிது1 அவரபி4
லாஷேகள3 பூ1ரைசுவுதெ3 மஹயக்1ஞ ஹரிபூஜெ ।।
(ஜீவப்ரகரண சந்தி ஸ்லோகம் #2)

தேவபூஜையானது மஹாயக்ஞம் என்று சொல்லப்படுகிறது. தனது சாதனைகளால் ஸ்ரீஹரியை மகிழ்ச்சிப்படுத்திய பக்தனுக்கு ஸ்ரீஹரி, அமிர்தத்தையே கொடுக்கிறான். அதுமட்டுமல்ல, அந்த பக்தனை காப்பாற்றுவதற்காக தன்னையே கொடுக்கிறான். ராமாயண மற்றும் பகவத்கீதையில் வரும் ராமன் மற்றும் கிருஷ்ணனின் உதாரணத்தையே பின்வருமாறு தாசர் சொல்கிறார்.

க1ண்ணிகெ3வெயெந்த3த3லி கை1 மை
தி1ண்ணிகொ1த3கு3வ தெ1ரதி3 ப1ல்க3ளு
ப1ண்ணு ப2லக3ளனகி3து3 ஜிஹ்வெகெ3 ரஸவனீவந்தெ1।
பு1ண்ய ப2லவீவந்த3த3லி நுடி3
வெண்ணினான் மாண்ட3தொ3ளு லட்சுமண
நண்ணனொத3கு3வ ப4க்தரவசர க1மரக3ண ஸஹித1।।
(கருணா சந்தி ஸ்லோகம் #27)

என்று ஜகன்னாததாசர் நினைவூட்டுகிறார். எப்போதும் கண்களுடனேயே இருந்து, அதை தூசியிடமிருந்து காப்பாற்றும் இரப்பைகளை, அந்தக் கண்கள் காண்பதே இல்லை. அதுபோல, எப்போதும் நம்முடனேயே இருந்து நம்மைக் காப்பாற்றும் ஸ்ரீஹரியை நாமும் மறக்கிறோம் என்று தகுந்த உதாரணத்துடன் தாசர் விளக்குகிறார். ஜீவன் நன்றி மறந்தவன் ஆனாலும், ஸ்ரீஹரி மட்டும் 'ஸ்மரிசுவ அபராதகள தா ஸ்மரிஸ' அதுமட்டுமல்ல 'சகலேஷ்ட ப்ரதாயக'னாக, தன்னை கருணைக்கடலாக நினைக்கிறான். இத்தகைய ஸ்ரீஹரியின் பெயரைச் சொல்வதும் கூட ஒரு நற்செயலே ஆகும். ஹரிபக்தர்களால் தெரியாமல் செய்யப்படும் தவறுகள்கூட அவர்களுக்கு பாவத்தைத் தராது. அதுமட்டுமல்ல, இந்த நாமஸ்மரணையானது எப்போதும், எந்த இடத்திலும் செய்ய வேண்டியதாகும். அதையே ஜகன்னாததாசர் இவ்வாறு கூறுகிறார்.

மக்க1ளாடி3சுவாக3 மட3தி3யொ
ளக்க1ரதி3 நலிவாக3 ஹய பல்
லக்கி1 க3ஜ மொத3லாத3 வாஹனக3ளேரி மெரெவாக3।
பிக்கு1வாக3 ஆக1ளிசுத1லி தே3
வக்கி1 த1னயன ஸ்மரிஸுதி1ஹ நர

ஸிக்க1னெம தூ3த1ரிகெ3 ஆவாவல்லி நோடித3ரு ||
(நாமஸ்மரண சந்தி ஸ்லோகம் #1)

என்று நாமஸ்மரணையை செய்யும் விதங்களைப் பற்றியும் அதன் சிறப்பினையும் விளக்கியிருக்கிறார் தாசர். ஹரிகதாம்ருதசாரத்தில் முழுக்கவும் மேலோட்டமாகத் தெரியும் நாமஸ்மரணையின் சிறப்புகள், நாமஸ்மரண சந்தியில் நன்றாக, ஆழமாக விளக்கப்பட்டுள்ளது.

இப்படி, ஒரு சாதகர், தற்காலிக விஷயங்களில் ஈடுபடாமல், இந்திரியங்களைக் கட்டுப்படுத்தியவாறு, ஸ்ரீஹரியின் உண்மையான ஞானத்தை மற்றும் ஆழமான பக்தியை அடையும்போது, அவன் முக்திக்கு யோக்யனாகிறான். இதையே ஹரிகதாம்ருதசாரத்தில் 'ஹரிபாரம்ய', 'தாரதம்ய', 'ஜீவனவிசார' மற்றும் 'சாதனவிஷயங்கள்' என அனைத்தும் விளக்கப் பட்டிருப்பதை பார்க்கிறோம். த்வைத சித்தாந்தத்தின் பிற விஷயங்கள் அனைத்தும் இந்த முக்கிய விஷயங்களிலேயே அடங்கியிருக்கின்றன.

'சங்க்ஷேப விஸ்தாராப்யஞ்ச ப்ரவதந்தி மனீஷிண' அதாவது ஞானிகள் ஒரு விஷயத்தை சுருக்கமாகவும், விளக்கமாகவும் சொல்வதில் வல்லவர்கள். ஜகன்னாததாசரிடமும் இந்த சிறப்பினைக் காண்கிறோம். 'ஹரிபாரம்ய', 'தாரதம்ய', 'ஜீவனவிசார' மற்றும் 'சாதனவிஷயங்கள்' ஆகிய விஷயங்கள் ஹரிகதாம்ருதசாரத்தில் மிகவும் விளக்கமாகவும் அதே சமயத்தில் பல இடங்களில் சுருக்கமாகவும் விளக்கப் பட்டிருக்கின்றன.

ஸ்ரீரமணி க1ரக1மலபூ1ஜித1
சாருசரண சரோஜரஜ பிரம்ம ச
மீரவாணி ப2ணீந்த்3ர வீந்த்3ர ப4வேந்தி3ர முக1 வினுத1 |
நீரஜப4வாண்டோ3த3ய ஸ்தி1தி1
கா1ரணனே கை1வல்யதா3யக1
நாரசிம்மனே நமிபெ க1ருணிபு1தெ3மகெ3 மங்க3ளவ ||

என்னும் இந்த கிரந்தத்தின் முதல் ஸ்லோகம் இந்த விஷயத்திற்கு ஒரு சிறந்த உதாரணமாகும். 'நீரஜ பவாண்டோதய ஸ்திதி காரணனே' என்பது அ-ஸ்வதந்த்ரனான ஜீவன், ஸ்ருஷ்டி என்னும் வாழ்க்கையில் இறங்குகிறான். இதை ஜீவனைப் பற்றிய விஷயம் எனலாம். 'கைவல்யதாயக' என்பது சாதனையைப் பற்றியது. 'ஸ்ரீரமணி கரகமல பூஜித சாருசரண சரோஜரஜ' மற்றும் 'பிரம்மசமீரவாணி பணீந்த்ரவீந்த்ர பவேந்த்ர முகவினுத' என்னும் இரு வரிகள் அவரோகண தாரதம்யத்துடன், ஸ்ரீஹரியின் மகிமையையும் பறைசாற்றுகிறது. ஸ்ரீஹரியின் சர்வகுண பர்பூர்ண, சர்வதோஷவிதூர ஆகிய பிரம்மசூத்ர பாஷ்யத்தின் வாக்கியங்களையே ஜகன்னாததாசர் மேற்கண்ட ஸ்லோகத்தில் விளக்கியிருக்கிறார்.

த்வைத சித்தாந்தத்தின் மற்ற விஷயங்களையும் இதனுடனேயே பொருள் கொள்ளலாம். 'நீரஜபவாண்டோதய ஸ்திதி காரணனே' என்பதில் 'ஜகத் சத்யம்', 'பஞ்சபேத' என்னும் இரு பிரமாணங்களையும் விளங்கிக் கொள்ளலாம். 'கைவல்யதாயக' என்பதில் 'முக்தி' மற்றும் 'முக்தி சாதனை'க்குத் தேவையான சுத்த பக்தி என்னும் பிரமாணங்கள் விளங்குகின்றன. 'ஸ்ரீரமணி கரகமல பூஜித சாருசரண சரோஜரஜ' மற்றும் 'பிரம்மசமீரவாணி பணீந்த்ரவீந்த்ர பவேந்த்ர முகவினுத' என்னும் இரு வாக்கியங்களில் 'ஜீவன் ஸ்ரீஹரிக்கு தாசன்' என்றும் 'ஸ்ரீஹரியே சர்வோத்தமன்' என்றும் விளக்குகிறார்.

இப்படியாக த்வைத சித்தாந்தத்தின் தத்வங்களை முதல் ஸ்லோகத்திலேயே சுருங்கச் சொல்லிய தாசர், பின்வரும் சந்திகளில் அவற்றையே மிக விளக்கமாகச் சொல்லியுள்ளார்.

பாதாள பாதுகெ விதாத்ரு லோகவெ முகுட
ஸ்வேத த்வீபவெ நினகெ ஒட்யாண |வைகுண்ட
ஆதபத்ரவனெ நினகீவ ||(தத்வசுவ்வாலி)

ஒட்டியாணம் என்னும் ஆபரணத்தின் விவரம் இதில் காணலாம். இடுப்பில் கட்டும் இந்த ஆபரணத்தை, தங்கம் அல்லது வெள்ளியில் செய்து கட்டிக்கொள்வர். மேகலை, காஞ்சிதாம என்ற பெயர்களிலும் அழைக்கப்படும் இந்த ஆபரணம் ஒரு காலத்தில் அனைவரும் அணிந்திருந்தனர். இன்றோ அது காணக்கிடைக்காதது.

பாதுகை என்று ஒரு சொல்லை இங்கு பயன்படுத்தியிருக்கிறார். பாதுகை அல்லது பாதரட்சை என்றும் அழைக்கலாம். இதை கிராமங்களில், மெட்டு, கால்மரி, கெர என்றும் அழைக்கின்றனர். பழைய கன்னடத்தில் ஜோடு என்று இதற்குப் பெயர். இதையெல்லாம் தவிர, இன்னொரு பெயரான 'சம்மாளிகெ' என்னும் நாட்டுப்புறப் பெயரை தாசர் பயன்படுத்தியிருக்கிறார்.

ஜாலி நெக்கிலு க்ஷுத்ரஷிலெ பரி
கால புருஷன பாதிபவு ச
சம்மாளெகெய மெட்டிதவகுண்டே கண்டககள பய ||

நாட்டுப்புறப் பாடல்களில் மங்கல பாடல்கள் ஏகப்பட்டது உள்ளன. திருமணம் முதலான நிகழ்ச்சிகளில் இவை பாடப்படுவது வழக்கம். ஜகன்னாததாசரும் இதே போல் ஒரு நாட்டுப்புற மங்கலப் பாடலைப் பாடியுள்ளார்.

நமோ நமோ ரமெ கமல சம்பவெ
ஹிமனகஜாரமண சம்மதெ
தமரிபு ஷத சமசன்னிபெ இப
கமனெ இந்திரெ ஷோபானே ||

என்று தொடங்கும் 6 நுடிகளைக் கொண்ட இந்த பாடலில் அங்கங்கு ஹேளல பங்கார, ஹஸிய ஜகுலிகெ, அந்திகி, குசகுப்பஸ என்னும் கிராமிய சொற்கள் நிறைந்திருப்பதைக் காணலாம்.

குடிசைகள் மற்றும் பசுக்கள் மேயும் விளைநிலங்களே அதிகமாக இருக்கும் கிராமங்களில் அடிக்கடி வயல்களில், புற்கட்டுகள் தீக்கிரையாகும் காட்சிகள் காணக்கிடைக்கலாம். இதையே தாசர் 'தூல ராஷியொளனல பொக்கந்தெ' என்கிறார். அதாவது, புற்கட்டுகள் தீக்கிரையாவது போல என்று உதாரணத்தைக் கொடுக்கிறார்.

ஹரிதாச சாகித்யத்தில் சரணாகத தத்துவம், ஆத்ம நிவேதனம் போன்றவற்றை பல்வேறு இடங்களில் பார்க்கலாம். பகவந்தனை ஒரு நொடி மறப்பதுகூட பல்வேறு பாவங்களுக்கு சமம் அல்லது ஏற்கனவே செய்திருக்கும் புண்ணியத்தை அழிக்கும் செயலாகும் என்று நம்புபவர்கள் ஹரிதாசர்கள். இப்படி மறத்தலுக்கு பிராயச்சித்தம் என்றால், ஆத்ம நிவேதனம் அல்லது மன்னிப்பு கேட்டல். இந்த மறத்தல் எந்தெந்த பாவங்களுக்கு வழிவகுக்கிறது என்பதை சொல்லும் பாடல் 'சிரி ரமண தவ சரண தொரகுவுது ஹ்யாங்கின்னு பரம பாபிஷ்ட நானு' என்னும் பாடல்.

இந்தப் பாடலில், கிராமத்தினரின் நடவடிக்கைகள் பலவற்றை இந்த கீழ்க்கண்ட பத்திகளில் காணலாம்.

காகு புத்திகளிந்த குடுகுடி நசிபுடி

ஹாகி பங்கிய சேதிதெ |
லோக நிந்திதனாகி பாபக்கெ கைஹச்சி அ
நேக ஜோஜுகளாடிதே பிடதெ ||

வித்தவித்தவர பென்ஹத்தி தூதர களுஹி
குத்திகெய நா கொய்சிதெ |
ஹத்து ஜனரென்ஹணக்கெ நித்ய கல்ஹொடெயுதிரெ
ம்ருத்யு தேவதெயெனெஸிதெ பிடதெ ||

எந்நேரமும் சீட்டாட்டத்தில் ஈடுபட்டிருப்போரை கிராமத்தில் இன்றும் பார்க்கலாம். கிராமங்களின் தேசம் எனப்படும் பாரதத்தில், கிராமங்களே அரசாங்க முடிவுகளில் முக்கிய இடங்களை வகிக்கின்றன. கிராமங்களில் நாம் இன்று காணும் பல பிரச்னைகளை சுமார் 250 ஆண்டுகளுக்கு முன்னரே ஸ்ரீஜகன்னாததாசர் தம் பல பாடல்களில் சொல்லியிருப்பதைப் பார்த்தால், கிராமங்களின் நிலை அன்றும் இதே போலவே இருந்தது என்று தெரிய வருகிறது. இத்தகைய பிரச்னைகளை களைவது தம் கடமை என்று அறிந்து, பல ஹரிதாசர்கள், தங்கள் காவிய, கிரந்தங்களின் மூலமாக அவற்றை பாடியிருக்கிறார்கள் என்றும் அறிகிறோம்.

'சேஷபர்யங்கஷயன விஷயதபிலாஷெ பரிஹரிஸி காயோ' என்னு பாடலில் தாசர், சஞ்சலப்படும் மனதினை மன்னிக்குமாறு பகவந்தனிடம் முறையிடுகிறார்.

பகவந்த நின்ன குணவ வர்ணிசதெ
பகவதியரவயவகளா
சொகஸினிந்தலி வர்ணிஸி என்ன நா
லகெ எரடு மாடிகொண்டே ||

இதில் 'நாலிகெ எரடு மாடிகொண்டு' என்று சொல்லியிருப்பதை கவனிக்கவேண்டும். ஓரிடத்தில் ஆன்மிக விஷயங்கள் இன்னொரு இடத்தில் தினப்படி லௌகிக விஷயங்கள் என இரு வகையான நடைகளின் நிலைமைகளையும் கவனித்து என்னைக் காப்பாற்று என்பதே ஜகன்னாததாசரின் கோரிக்கை.

கோள் மூட்டுபவர்கள் / வீண் அரட்டை அடிப்பவர்களை இரு நாக்குகளினால் பேசுபவர்கள் என்கிறார் தாசர். இன்று ஒரு பேச்சு நாளை ஒர் பேச்சு என்று இருப்பவர்களிடம் நம்பிக்கை வைக்கக்கூடாது. மகாகவி குமாரவியாச தனது விதுரநீதி நூலில் சஜ்ஜனர்களைக் குறித்து – 'சஜ்ஜனர்கள் இரு விதமாக பேசமாட்டார்கள்' என்று சொல்லியிருப்பதை இங்கு கவனிக்கலாம்.

அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியின் சன்னிதானம் கிராமங்களில் மிகவும் விசேஷமாக இருக்கிறது என்பது ஹரிகதாம்ருதசாரத்தில் ஒரு ஸ்லோகத்தில் தாசர் விளக்குகிறார்.

கிராமபனொளக்ரணி எனிஸுவனு
க்ராமணி எனிசுவனு ஜனரொளு
க்ராமப க்ராமகளொளகெ ஸ்ரீமான்யனெனிசுவனு ||

ஸ்ரீமனோரம தானெ யோக
க்ஷேம நாமகனாகி சலஹுவ
ஈ மஹிமெ மிக்காத தேவரிகுண்டே லோகதொளு ||

தாசசாகித்யத்திற்கும் நாட்டுப்புற பாடல்களுக்கும் மிக நெருங்கிய தொடர்பு இருப்பது நிஜம். ஆனால், ஜகன்னாததாசர் சமஸ்கிருதத்தில் சிறந்த அறிஞர் என்று அறியப்படுபவர். ஆனால் இத்தகையவரின் கிருதிகளில், கிராமத்து நாட்டுப்புறப் பாடல்களை தேடி ஒரு கட்டுரை எழுதவும் என்று டாக்டர். ஷீலாதாஸ் அவர்கள் கேட்டுக்கொண்டபோது, மறுபேச்சில் லாமல் ஒப்புக்கொண்டேன். ஏனென்றால் நாட்டுப்புறத்தின் த்ரிபதி நுடியில் இயற்றப்பட்டுள்ள தத்வசுவ்வாலியிலிருந்து ஓரிரு விஷயங்களைக் கற்றுக்கொண்டு அதைப் பற்றி எழுதலாமே என்கிற காரணம்தான். ஆனால், இத்தகைய நோக்கத்துடன் படிக்கத் துவங்கியபோது, மேன்மேலும் பற்பல விஷயங்கள் கிடைத்து இந்த கட்டுரை மிகப் பெரியதாக வளர்ந்துவிட்டது.

ஸ்ரீஜகன்னாததாசரின் சாகித்யம் மற்றும் நாட்டுப்புற இலக்கியங்களை ஒப்பிட்டுப் பார்த்தால், மாமரத்திற்கும் குயிலுக்கும் எப்படி தொடர்பு ஏற்பட்டது என்னும் பழமொழியே நினைவுக்கு வருகிறது. ஆனால் நாட்டுப்புற பாடல்கள் என்னும்போது, அவர்களின் வாழ்க்கைமுறை, தொழில்கள், தினப்படி வேலைகள் என்னும் பற்பல விஷயங்கள் இருக்கின்றன என்றும் அவற்றைப் பற்றியும் சிந்தித்து ஸ்ரீஜகன்னாததாசர் அவற்றை எப்படி விளக்கியிருக்கிறார் என்பதை நான் இங்கு விளக்க முயன்றிருக்கிறேன்.

சொல்லவந்த கருத்துகளுக்கு இந்த கட்டுரை எவ்வளவு அருகில் இருக்கிறது என்று மட்டுமே இந்த கட்டுரை படித்தால் புரியுமே தவிர ஸ்ரீஜகன்னாததாசரின் சாகித்யத்தின் அழகினையோ, பக்தியின் ஆழத்தையோ, சித்தாந்தத்தின் விளக்கங்களையோ எதிர்பார்த்து வந்தவர்களுக்கு இந்தக் கட்டுரையில் பதில் இல்லை.

ஜகன்னாததாச சம்புட என்னும் ஒரு தொகுப்பிற்காக என்னிடமிருந்து ஒரு கட்டுரையை கேட்டவர்களுக்கு சரியான ஒரு கட்டுரையைக் கொடுத்திருக்கிறேன் என்னும் நம்பிக்கை எனக்கு இருக்கிறது. மேலும் இதன் மூலம், ஸ்ரீஜகன்னாததாசருக்கு சேவை செய்யும் பாக்கியம் கிட்டியதற்கு மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன்.

***

# 18. மானவியின் மகான்

## ஸ்ரீஜகன்னாததாசர் -
## திரு. விஜயராவ் குபனேஷி, மானவி

ஹரிதாச சாகித்யமானது, ஹரிசர்வோத்தமத்வம் மற்றும் தாசத்வத்தின் மகிமைகளை விளக்கும் வழியினைப் பிடித்து, அபரோக்ஷத்தை சம்பாதிப்பதாக இருக்கிறது. 'தாசோஹம் கௌசலேந்த்ரஸ்ய' என்று முதன்முதலில் வாயுதேவரால் 'தாச' என்னும் சொல் பிறந்தது. 'தாசோஹம்' என்னும் சொல், ஒருவருக்கு கட்டுப்பட்டிருப்பதை காட்டுகிறது. அப்படி கட்டுப்பட்டவருக்கு தலைவர் ஒருவரே இருக்கிறார். அந்த தலைவர் யாரென்று தெரிவிப்பதற்கு இந்த தாச சாகித்யம் வளர்ந்து 'ஹரியே சர்வோத்தமனு தருவாயதவரெல்ல ஆதன தாசரு' என்று தெளிவாக சொல்கிறது. வாயுதேவரே ஸ்ரீமன் மத்வராக அவதரித்து,

க்ஷிதியொளகெ மணிமந்த மொதலா
ததிதுராத்மரு ஒந்ததிக விம்
சதி குபாஷ்யவ ரசிஸே நடுமனெயெம்ப பிராஹ்மணன |
சதிய ஜடரதொளவதரிஸி பா
ரதி ரமண மத்வாபிதானதி
சதுரதச லோகதொளு மெரெதப்ரதிமகொந்திசுவே ||

ஸ்ரீவாயுதேவரின் சாட்சாத் அவதாரியான ஸ்ரீமத்வராயர், 21 துர்மதங்களைக் கண்டித்து 22வதாக ஒரு மதத்தை நிறுவி, ஜீவ ஈச தாரதம்யாதி தத்வங்களை நிரூபித்தார்.

சுஜீவர்கள், பகவந்தனின் அபரோக்ஷத்தைப் பெறுவதற்கு ஹரிதாச சாகித்ய சாதனையானது ஒரு சுலபமான வழியாகும். இந்த சாகித்யத்தை முதன்முதலில் பேசுமொழியில் துவக்கி வைத்தவர் ஸ்ரீநரஹரி தீர்த்தர். 'அங்கித நரஹரிவிட்டல' (13ம் நூற்றாண்டு). பிறகு ஸ்ரீபாதராயர் (ரங்கவிட்டல). ஸ்ரீவியாசராயர் (ஸ்ரீகிருஷ்ண), ஸ்ரீவாதிராஜர் (ஹயவதன), ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர், ஸ்ரீஜகன்னாததாசர். இப்படியாக பற்பல தாசவரேண்யர்கள், அபரோக்ஷ ஞானிகள் அவதரித்து, பாமர மக்களுக்கு அவர்களின் கஷ்டங்களிலிருந்து விடுதலை அளிக்க, தாம் இருக்கும்போதே தமது எல்லையற்ற கருணைப் பார்வையால் மற்றும் சாகித்ய ரூபத்தினாலும் அவர்களுக்கு உதவி செய்துள்ளனர். தாச– சதுஷ்டயர்களில் ஒருவரான மானவியின் ஸ்ரீஜகன்னாததாசர் – இவரது வரலாறு மற்றும் கிருதிகள் தாச சாகித்யத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன.

**வாழ்க்கை:**

ராய்ச்சூர் மாவட்டம் மானவி தாலுக்காவில் பாக்யவாட கிராமத்தில் கணக்காயராக இருந்த நரசப்ப மற்றும் லக்ஷ்மம்ம என்னும் தம்பதிகளின் மகன் ஸ்ரீனிவாசன். 8 வயது குழந்தையான ஸ்ரீனிவாச, அப்போதைய ஸ்ரீமடத்து பீடாதிபதிகளாக இருந்த ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் முன், பஞ்சரத்ன ஸ்லோகத்தை இயற்றிக் காட்டிய அவனது திறமையைக் கண்ட ஸ்ரீகளவர், அவனை தன்னுடைய சிஷ்யனாக ஏற்று, தொடர்ந்து 8 ஆண்டுகளில் தத்வ பிரகாசிகா, வேதாந்த கல்விகளைக் கற்பித்தார். அங்கு நடந்த வித்யுத் கோஷ்டியில் ஸ்ரீனிவாச, 'ஆசார்ய' என்னும் பட்டத்தைப் பெற்று, ஸ்ரீனிவாசாசார்யர் ஆனார். பிறகு அன்றைய உத்தராதி மடத்து பீடாதிபதிகளாக இருந்த ஸ்ரீசத்யபோத தீர்த்தரிடம், தர்க்க, நியாய, மீமாம்ச முதலான தத்வ சாஸ்திரங்களை கற்று, ஸ்ரீனிவாசாசார்யராக மானவிக்கு திரும்பி வந்து, அங்கு ஒரு சமஸ்கிருத பாடசாலையைத் துவக்கினார். பின், தாமரசம்மா என்னும் நற்குணங்கள் வாய்ந்த ஒரு பெண்மணியை திருமணம் செய்தார்.

ஆசார்யரின் பாண்டித்திற்கு தக்கவாறு அவர், பரான்னனேம (பிறர் கையால் உண்ணாதது), ஸ்த்ரீபாகனேம (பெண்கள் சமைத்ததை உண்ணாதது) மற்றும் நைவேத்யனேம (நைவேத்தியம் ஆகாததை உண்ணாதது) ஆகிய நியமங்களை துவக்கினார். கன்னடத்தில் பதங்களை இயற்றும் தாசர் என்றால் இவருக்கு ஆகாது. அத்தகைய சமயத்தில், சாட்சாத் ப்ருகு அம்சத்தவரான ஸ்ரீவிஜயதாசரை அவமானம் செய்ததன் மூலம், பயங்கரமான வயிற்றுவலியைப் பெற்றார். அதன் தீவிரம் தாளாமல், திருப்பதியில் மற்றும் மாஞ்சாலே ராகவேந்திரரின் சேவையை செய்து, பின் தன் கனவில் வந்த செய்தியின் மூலம் – குருவை அவமானம் செய்ததால் வந்த பிரச்னை குருவாலேயே தீரும் – என்னும் பகவந்தனின் சங்கல்பத்திற்கேற்ப, மறுபடி விஜயராயரிடமே அபயம் வேண்டி, அவரின் ஆணைப்படி, ஸ்ரீகோபால்தாசரிடம் செய்து, அவர் தன்வந்திரி நாமக பகவந்தனுக்கு நைவேத்தியம் செய்த சோள ரொட்டியைப் பெற்றார்.

ஸ்ரீபாண்டுரங்கனின் கருணையால், ஸ்ரீகோபாலதாசரிடமிருந்து அவரது 40 ஆண்டுகளை ஆயுர்தானம் பெற்று, குருகளின் ஆணையின்படி பண்டரிபுரத்திற்கு சென்றார். அங்கு சந்திரபாகா ஆற்றில் ஸ்னானம் செய்திருந்தபோது, அவர் தலையில் வந்து இடித்த ஒரு மரப்பலகையில் ‘ஜகன்னாதவிட்டலா’ என்று எழுதியிருந்தத்தைப் பார்த்து, அதையே பாண்டுரங்கனின் ஆணையாக ஏற்று, தன் அங்கிதமாக வைத்துக்கொண்டார். ஸ்ரீகோபாலதாசர் மூலமாக அபரோக்ஷத்தைப் பெற்று, ஹரிதாசராக ஜகன்னாததாசர் ஆனார். பல்வேறு இடங்களுக்கு பயணம் செய்து, பற்பல சிஷ்யர்களைப் பெற்று, புகழ்பெற்றார்.

**ஸ்ரீமத் ஹரிகதாம்ருதசாரத்தின் மகிமை:**

ஹரிகதாம்ருதசார கிரந்தம், ஹரிதாச சாகித்யத்தின் ஒரு விலைமதிப்பில்லா ரத்னம். ஆசார்யர் மத்வரின் மொத்த சித்தாந்தத்தையும் கன்னடத்தில் அழகான நுடிகளில் இந்த கிரந்தம் விளக்குகிறது. அதனால், இந்த கிரந்தமானது, மாத்வ சித்தாந்தத்தின் அகராதி என்று சொல்லப்படுகிறது. 32 சந்திகளில் சுமார் 988 பாமினி ஷட்பதி நுடிகளில் சொல்லப்படாத சாஸ்திர பிரமேயங்களாகட்டும், விளக்கப்படாத சித்தாந்தமாகக்கும் இல்லவேயில்லை என்றால் அதில் வியப்பில்லை.

ஜகன்னாததாசரானவர், அத்வைத ஸ்தாபகரான சங்கராசார்யரின் பீடத்தில் வந்த வித்யாரண்ய ஸ்வாமிகளைப் போல, விசிஷ்டாத்வைத ஸ்தாபகரான ராமானுஜாசார்யரின் பீடத்தில் வந்த வேதாந்த தேசிகரைப் போல, த்வைதத்தை ஸ்தாப்பித்தவரான ஸ்ரீமத்வாசார்யரின் பீடத்தில் வந்த ஜயதீர்த்தரைப் போன்றவராவார். ஸ்ரீபுரந்தரதாசர் மூலமாக மறுபடி வளர்ந்த பாகவத தர்மத்திற்கு, ஒரு புத்தொளி பாய்ச்சியர் ஜகன்னாததாசர், என்று பேலூர் கேசவதாசர் கூறியதை மறுக்கமுடியாது. புகழ்பெற்ற தாச– சதுஷ்டயர்களில் இறுதியானவரான ஸ்ரீஜகன்னாத தாசர் மாத்வ தத்வ ஞானத்தின் சாரத்தை கன்னடத்தில் ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்தின் மூலமாக கொடுத்திருக்கிறார்.

இந்த கிரந்தத்தை தாசர் 32 சந்திகளாக இயற்றியிருக்கிறார். கிரந்தத்தை இயற்றியதில் ஒரு ரகசியம் அடங்கியிருக்கிறது. பரமகுருகளான வாயுதேவருக்கு மொத்தம் 32 லட்சணங்கள். இது சாஸ்திரத்தில் சொல்லப்பட்டது. அத்தகைய வாயுதேவரின் லட்சணங்களை நினைவுபடுத்திக் கொள்வதற்காகவே 32 சந்திகளாக தம் கிரந்தத்தை இயற்றியிருக்கிறார். வாயுதேவரின் அருள் எங்கு இருக்கிறதோ, அங்கு கலிபிரவேசம் ஆவதற்கு சாத்தியமில்லை. இதுவும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷயமே. ஆகையால், பிற லௌகிக கிரந்தங்களைப் போல, ஹரிகதாம்ருதசார கிரந்தத்தின் மேல் கலி ஆவேசம் ஆவதற்கு சாத்தியமில்லை.

’முகுந்தபக்த்யை குருபக்தி ஜாயை’ || ’அப்யச்யுதோ குருத்வாரா’
என்னும் ஸ்லோகங்கள் ஸ்ரீஹரியைக் குறித்தான பக்தி சாதனை வழியில், குருவின் முக்கியத்துவத்தை சொல்கின்றன. வாயுதேவரில் ஸ்ரீஹரியின் சான்னித்யம் விசேஷமாக இருக்கிறது. இதனை அறிந்த தாசர், வாயுதேவரின் நற்குணங்களை நினைவுபடுத்திக் கொள்வதன் மூலம், அந்த ஸ்ரீஹரியின் மகிமைகளை பாடி புகழ்ந்திருப்பதில், அந்த பகவந்தனின் சான்னித்யம் இந்த கிரந்தத்தில் எப்போதும் இருப்பதாக பார்த்துக் கொண்டிருக்கிறார்.

எந்தவொரு கிருதியும் கிரந்தம் என்று அழைக்கப்பட வேண்டுமெனில், அதிகாரி, சம்பந்த மற்றும் பிரயோஜன பலன் என்னும் லட்சணங்கள் அதில் இருக்கவேண்டும். ஸ்ரீஹரி கதாம்ருதசாரத்தின் துவக்கத்திலேயே இப்படியாக சொல்கிறார் தாசர்.

ஹரிகதாம்ருதசார குருகள
கருணதிந்தா பனிது பேளுவே
பரமபகவத் பக்தரிதனாதரதி கேளுவுது ||

இந்த கிரந்தத்தின் விஷயம் ஸ்ரீஹரி. பகவத்பக்தர்களே இதற்கு அதிகாரிகள். ஆதரதி கேளுவது என்றால் பக்தியுடன் கேட்பது. இதை செய்வதே ‘சம்பந்தம்’. அமிர்த என்றால் ஸ்வரூபானந்தத்தைத் தரும் மோட்சமே இதற்கு பிரயோஜனம். ஆகையால், ஹரிகதாம்ருதசாரம், சாதகர்களால் பக்தியுடன் வணங்கப்படும் கிரந்தம் இது. 32 சந்திகளை சொல்லும் முறையிலும்கூட, தாசரின் காவியத் திறன் புலப்படுகிறது. கிரந்தத்தின் முதலாம் சந்தியை மங்களாசரணத்திற்காக ஒதுக்கியிருக்கிறார். பாகவதாதி புராணங்களைப் போல, ஸ்ரீமன் நியாயசுதாதி கிரந்தங்களைப் போல, இங்கும் துவக்கத்தில் ஒரு சந்தி முழுக்க மங்களாசரணத்தைப் பாடியிருக்கிறார்.

இந்த மங்களாசரண சந்தியில் 13 நுடிகள் இருப்பதற்கும் ஒரு ரகசியம் இருக்கிறது. சாதகர் ஆனவர்கள் இதன் உள் அர்த்தத்தை அறியவேண்டும். ‘அக்னிர்வெ வேதானாமமம:விஷ்ணுபரம:’ அதாவது, அக்னியிலிருந்து துவங்கி விஷ்ணுவின் வரை மொத்தம் 15 படிகள் உள்ளன. இது தேவதா தாரதம்யம். அக்னி வாக்– அபிமானி. இவரிலிருந்து தொடங்கி சதுர்முக பிரம்மன் வரை 13 தேவதைகள் உள்ளனர். இந்த சாதனா ரகசியத்தைப் புரிந்து உபாசனை செய்பவர்களை அந்த தேவதைகள் ஸ்ரீலட்சுமி நரசிம்மனிடம் அனுப்புகின்றனர். இது மங்களாசரண சந்தியின் மகிமை.

ஹரி–கதா–அம்ருத–சார என்னும் நான்கு சொற்கள் பிரம்மசூத்திரத்தின் நான்கு அத்தியாயங்களின் அர்த்தங்களை பிரதிபலிக்கிறது. அனைவரின் இதயத்திலிருக்கும் பிம்பரூபி பரமாத்மனுக்கு ஹரி என்று பெயர். ஹரி என்னும் சொல், ஹ்ரு என்னும் மூலச்சொல் அதாவது அபகரிக்கும் என்னும் பொருளைக் கொடுக்கிறது. அதாவது, அனைவரின் மனதில் இருக்கும் பாவங்களையும் அபகரிப்பதால் அவன் பெயர் ஹரி. ஹ்ரு என்னும் மூலச்சொல்லுக்கு முன் பிற எழுத்துக்களை சேர்த்தால் – சம்ஹார, விஹார, ஆஹார, ப்ரஹார ஆகிய சொற்கள் உருவாகின்றன. ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அக்ஞான, பந்த, மோக்ஷ என்னும் பகவந்தனின் அஷ்ட கர்த்ருத்வங்களை ஹரி என்னும் சொல் விளக்குகிறது.

’சுதா ஓதி பத ஹேளு’ என்பது ஹரிதாச பரம்பரையில் வந்த ஒரு பழமொழி. இதற்கேற்ப வாழ்ந்து காட்டிய தாசர் என்றால் அது நம் ஜகன்னாததாசர்தான். ஸ்ரீமத்வரின் சர்வமூல கிரந்தங்களை, அதற்கு வந்துள்ள டீகா, டிப்பணி, வியாக்யானங்களை படித்து புரிந்து கொள்ளாமல், பெயருக்கு மட்டும் ஹரிதாசர் என்று கூறிக்கொள்ளலாமா? வெறும் தாள, தம்புரி வைத்துக்கொண்டு பாடிவந்தால் ஹரிதாஸ்யம் கிடைத்துவிடுமா? பெரியவர்கள்

சொன்னபடி நடக்கவேண்டும். பகவந்தன், இவன் தன் பக்தன் என்று எண்ணி அருளவேண்டும். இதற்கு மிகச்சரியான உதாரணம் ஸ்ரீஜகன்னாததாசர். வியாச சாகித்ய, தாச சாகித்ய என இரண்டிலும் சாதனை செய்த அவர், ஆசார்ய மத்வரின் தத்வங்களின் சாரத்தை அப்படியே ஹரிகதாம்ருதசாரத்தில் விளக்கியிருக்கிறார்.

வேதாந்த சாஸ்திரம், தர்ம சாஸ்திரம், மீமாம்ஸ சாஸ்திரம், பாகவதாதி புராணங்கள், பாரத, ராமாயண, மத்வ முனிகளின் நிர்ணய கிரந்தங்களின் சாரம் என இவை அனைத்தின் சங்கமமே ஸ்ரீஹரிகதாம்ருதசாரம். தமது இந்த கிருதியின் விஷயம் என்ன என்பதை ஸ்ரீஜகன்னாததாசரே இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீபாரதி தேவியை வணங்கியவாறு:

சதத ஹரியலி குருகளலி ச
த்ரதிய பாலிஸி பாகவத பா
ரத புராண ரஹஸ்ய தத்வகளருபு கருணதலி ||

என்று சொன்னபிறகு, இத்தகைய ரகசியத்தையே நாம் அங்கு பார்க்கவேண்டுமல்லவா? ஆகையால், சர்வக்ஞ சாஸ்திரங்களில் இருக்கக்கூடிய விஷயங்களே ஸ்ரீஹரிகதாம்ருதசாரத்தின் ஆதார. இவற்றுடன் கீதா, பிரம்மசூத்ர, பாரத, பாகவத, ஸ்ரீவிஷ்ணு புராண, பிரகாச சம்ஹிதை, பஞ்சராத்ராகம ஆகியவற்றின் சாரமே ஹரிகதாம்ருதசாரம் என்று சொல்ல வேண்டும்.

ஸ்ரீரமணி கரகமல பூஜித
சாருசரண சரோஜ பிரம்ம ச
மீர வாணி பணீந்த்ர வீந்த்ர பவேந்த்ர முக வினுத |
நீரஜபவாண்டோதயஸ்திதி
காரணனே கைவல்யதாயக
நாரசிம்ஹனே நமிபெ கருணிபுதெமகே மங்களவ ||

பாகவத புராணத்தின் மங்களாசரணமான ‘ஜென்மாத்யஸ்ய யதோ’ மற்றும் பாகவத தாத்பர்யத்தின் மங்கள ஸ்லோகமான ‘ஸ்ருஷ்டி, ஸ்திதி, ப்ரமேஹா’ என்னும் ஸ்லோகங்களின் சாரம் இப்படியாக இருக்கிறது.
பிரம்மருத்ராதி தேவதைகள், மனிதர்கள், தைத்யர்கள் ஆகிய சேதன அசேதனர்களில் இருக்கும் அனந்த குணங்களை யார் கொண்டிருக்கிறாரோ அத்தகைய தோஷங்கள் அற்றவன், உலகத்தின் தலைவனான பகவந்தனை நான் தியானிக்கிறேன். முன்பு சொன்ன தாசரின் பதமானது, இந்த பாகவத ஸ்லோகங்களின் சாரமாகவே இருக்கிறது.

ஓம் ஜன்மாத்யஸ்ய யத: ஓம்
விக்ல்போபிஷிஷ்டபலி வாத்வாத ஓம்

என்னும் இரு பிரம்மசூத்ர வாக்கியங்களின் விஷயமே மேலே சொல்லப்பட்டுள்ள பத்யத்தில் வந்துள்ளது. ‘தியோ யோன: பிரசோத யாத்’ என்றால் ‘நாரசிம்ஹனே கருணிபது எமகே மங்களவா’. இந்த பத்யத்தில் நாராயண, வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன மற்றும் அனிருத்த என்று பஞ்சரூபி பகவந்தனின் சிந்தனை இருக்கிறது. ஆகையாலேயே, ஹரிகதாம்ருத சாரமானது:

பரம தத்வ ரஹஸ்யவிது பூ
சுரரு கேள்வுது சாதரதி || -- என்கிறார்.

மங்களாசரண சந்திக்குப் பிறகு, கருணா சந்தியை வைத்திருக்கிறார் தாசார்யர். பக்தன் பகவந்தனை பிரார்த்திக்கும் விதத்தை மற்றும் பகவந்தன் பக்தனின் பிரார்த்தனைக்கு செவி சாய்த்து அவனிடம் ஓடி வருவதை இந்த சந்தியில் மிகவும் சுவைபட விளக்கியிருக்கிறார்.

ஸ்ருதிததிகளகபிமானி லகுமி
ஸ்துதிகளிகெ கோசரிசதப்ரதி
ஹத மஹைஸ்சர்யாத்யகில சத்குணகணாம்போதி |
ப்ரதிதிவஸ தன்னங்க்ரி சேவா
ரத மஹாத்மரு மாடுதிஹ சம்
ஸ்துதிகெ வஷனாகுவனிவன காருண்யகேனெம்பே ||

ஆனாலும் 'பகுதரு மாடுதிஹ சம்ஸ்துதிகெ' மெச்சி அவர்களின் பிறவிப்பயனை விடுவித்து, பக்தி செய்தால் தன்னையே கொடுப்பான், பக்தர்களின் கஷ்டங்களை தடுத்து, அவர்களுக்கு அனைத்து வித நன்மைகளையும் செய்து, அவர்களின் நிழல் போல இருக்கும் அவனின் கருணைக்கு எல்லை இருக்கிறதா? ஹரிகதாம்ருதசாரமானது, படிப்பவர்களின் கைகளைப் பிடித்து, ஸ்ரீஹரிக்கு பக்கத்தில் அழைத்துச் செல்வதில் வெற்றி அடைந்திருக்கிறது.

அடுத்தது ஸ்ரீஹரியின் வியாப்தியை (நீக்கமற நிறைந்திருப்பதை) விளக்கும் சந்தி. மாத்வ சித்தாந்தத்தின் முக்கிய காரணிகளான தாரதம்ய தத்வ, நாமஸ்மரணை, நாடி பிரகரண ஆகிய தத்வங்களை மிகவும் அற்புதமாக இங்கு வர்ணித்திருக்கிறார். 32 சந்திகளும் ஒரே மாதிரியான விஷயங்களையே சொல்வது போல தோன்றினாலும், சந்திகளை தனித்தனியாகப் படித்துப் பார்த்தால், அவற்றில் சொல்ல வந்த விஷயங்களின் சிறப்பு புரியும்.

ஹரிகதாம்ருதசாரம், பகவத் விருப்பத்தினால், குருகளின் அருளால் வந்த ஒரு அற்புத கிரந்தமாகும். குருகளான கோபாலதாசர், தம் குருகளான ஸ்ரீவிஜயதாசரின் ஆணையின் பேரில், 40 ஆண்டுகால தம் ஆயுளை ஸ்ரீஜகன்னாததாசருக்கு தானம் செய்த சந்தர்ப்பத்தின் விளைவே ஸ்ரீஹரிகதாம்ருதசார கிரந்தம்.

வியாஸதீர்த்தரொலவோ விட்டலோ
பாஸக ப்ரபுவரிய புரந்தர
தாசராயர தயவோ திளியது ஓதி கேளதலெ |
கேஷவன குணமணிகளனு ப்ரா
ணேஷகர்ப்பிஸி வாதிராஜர
கோஷகொப்புவ ஹரிகதாம்ருதசார பேளிதரு ||

இந்த கிரந்தத்தை படித்தால், கேட்டால், பாராயணம் செய்தால் வரக்கூடிய பலன்களைப் பற்றி ஸ்ரீதவிட்டல தாசர் கூறியது இது.

பக்தர்களின் கஷ்டங்களைப் போக்கி, அவரின் விருப்பங்களைப் பூர்த்தி செய்து, நிழல் போல எப்போதும் அவர்களுடனேயே இருந்து அவர்களைக் காத்து வரும் இறைவனின் கருணைக்கு எல்லை இருக்கிறதா? என்று கேட்கிறார்.

குருட கண்கள படெவ பதிரனி
கெரடு கிவி கேள்வஹவு பெளெயத
முருட மதனாக்ருதிய தாள்வனு கேள்தமாத்ரதலி |
பரடு ஹைனாகுவது பேள்தரெ
கொரடு பல்லைசுவுது ப்ரதிதின

ஹூருடிலாதரு ஹரிகதாம்ருதசாரவனு படிஸே ||

இதுவே ஹரிகதாம்ருதசாரத்தின் மகிமை. ஒரு கிரந்தத்தின் மகிமைகளைப் புரிந்துகொள்ள வேண்டுமெனில், அந்த கிரந்தத்தைக் குறித்தான வியாக்யானங்களை (உரை) கவனிக்க வேண்டும். இந்த கன்னட கிரந்தத்திற்கு இருவர் சம்ஸ்கிருதத்தில் உரைகளை எழுதியுள்ளனர். மற்றும் 6 கன்னட உரைகளும் இருக்கின்றன. சாகித்யத்தின் பார்வையில் பார்த்தால், கன்னடத்தின் உத்தம கிரந்தம் என்று இதை சொல்லலாம். உவமைகள், சொற் பிரயோகம், சித்தாந்தங்களை விளக்கும் விதம் என சாகித்யத்தின் அனைத்து சிறப்புகளையும் இந்த கிரந்தத்தில் காணலாம். இந்த கிரந்தமானது 14 மொழிகளில் அச்சிடப்பட்டுள்ளது.

**கீர்த்தனைகள் - உகாபோகங்கள் - சுளாதிகள்**

மானவியின் ஸ்ரீரங்கவலித தாசர சேவா சமிதியினர் 1996ம் ஆண்டு வெளியிட்ட 'பாக்யவாடத ஸ்ரீரங்கவலித ஸ்ரீஜகன்னாததாசர் கிருதிரத்ன மாலா' என்னும் புத்தகத்தின்படி, தாசர் இயற்றியவை கீர்த்தனைகள் 206, உகாபோகங்கள் 2 மற்றும் சுளாதிகள் 4. மாத்வ சித்தாந்தத்தை தக்க உதாரணங்களுடன், ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டுவதில் இவரது கீர்த்தனைகள் தலைசிறந்தவை. இவரது பல கீர்த்தனைகள், லௌகிகத்திலிருந்து பாரமார்த்திகத்திற்கு நம்மை கடத்தும் படகுகளாக இருக்கின்றன. தம் ஸ்வரூபோத்தாரக குருகளான ஸ்ரீகோபால தாசரிடமிருந்து துவங்கி, பிற தாசர்கள், க்ஷேத்திர மகிமைகள், நதிகள், தாரதம்ய ஸ்தோத்திரங்கள், தேவதைகள், பீடாதிபதிகள், வாயுதேவர் என்று ஸ்ரீஹரி வரைக்கும் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். இவை அனைத்தும் சாஸ்திரங்களுக்கேற்பவாறு இருக்கின்றன.

ஸ்ரீராகவேந்திர மற்றும் ஸ்ரீஉத்தராதி மடத்து யதி பரம்பரை களைப் பற்றியும் தாசர் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். ராயர் மடத்தில் ஸ்ரீசுக்ஞானேந்திர தீர்த்தர் மற்றும் ஸ்ரீஉத்தராதி மடத்தில் ஸ்ரீசத்யசந்த தீர்த்தர் வரைக்குமான யதிகளைப் பற்றிய பாடல்களை இயற்றியிருக்கிறார்.

**உகாபோக**:
ஆரு வந்திசலேனு ஆரு நிந்தஸலேனு
ஆரு ஷாபிசலேனு ஆரு கோபிசலேனு
ஆரு முனிது மாதனாடதித்தரேனு
மாருதாந்தர்யாமி ஜகன்னாத விட்டலன
காருண்ய பாத்ரவ கருண என்னோளகிரெ

சமூகத்தில் மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதை தாசர் இந்த கீர்த்தனையில் விளக்கியிருக்கிறார்.

சிரிரமண தவசரண
தொரகுவுது ஹ்யாங்கின்னு பரம பாபிஷ்ட நானு |ப|

காகு புத்திகளிந்தா குடிகுடி நஸ்யபுடிஹாகி பங்கியாசேதிதே
லோக கண்டகனாகி பாபக்கெ கை ஹச்சி
அனேக ஜோஜுகளாடிதே பிடதே ||

ஆடுமாடுகளைப் போல வாழும் மனிதர்களைக் குறித்து அவர் மிகவும் பாசத்துடன், தார்மிக வழியில் நடக்குமாறும், பாவங்களை களைந்து கொள்ளுமாறும் கூறுகிறார். இந்த கீர்த்தனை பாவம் செய்து நொந்து, பகவந்தனிடம் சரணாகதி ஆகி, உத்தம வாழ்க்கையை நடத்திக் கொள்வதற்கு உபயோகமாக இருக்கிறது.

இன்றைய சமூகத்தில், மற்றவர்களைக் குறித்து திட்டுவது, அறிவுரை கூறுவது, பரிகாசம் செய்வது இதுவே அதிகம். இத்தகையவர்களுக்கு தக்க செய்தியைக் கூறுவதுடன் தாசர், ஆத்யாத்ம சாதனைக்குத் தேவையான வழிகளையும் உபதேசிக்கிறார்.

மலவ தொளெதளு தாயி கைகளிந்தலி நித்ய
தொளெவ நிந்தக தன்ன நாலகியிந்த

அதாவது, ஒரு தாயானவள் தன் குழந்தையின் மலத்தை தன் கையால் துடைப்பதைப் போல, கெட்டவர்கள் தன் வாயிலிருந்து மலத்தை கழிக்கின்றனர் என்கிறார். இந்த அடுத்த பத்யத்தில் பெண்களைக் குறித்து ஸ்ரீதர்மத்தைப் பற்றி விளக்குகிறார்.

சாரித டங்குர யவமனு பாபி நாரேரனௌதந்து
நரகதல்லிடிரெந்து உத்தம குருஹிரியர
நிந்துசுவளாஹெத்த மக்கள மாரி பதுகுவள

பலவிது பாளுதக்கெ
சிரி நிலயன குணகள திளிது பஜிசுவுதே ||

27 நுடிகளைக் கொண்ட இந்த கீர்த்தனையானது தாசரின் மிகவும் அற்புத கீர்த்தனையாகும். மனிதனின் வாழ்க்கையின் தேவையை, முக்கியத்துவத்தை, கடமைகளை இங்கு விவரிக்கிறார். பாகவத தர்மத்தின் போதனையை செய்கிறார். தாசரின் விசா ல திருஷ்டி இங்கு தெரிகிறது. சமூக மேம்பாடு, சுத்தமான பக்தி, லௌகிகத்திலிருந்து பாரமார்த்திகத்திற்கு செல்ல வேண்டிய பாதை – இவை அனைத்தும் இந்த கீர்த்தனையில் விளக்கப்பட்டிருக்கிறது.

லோகதல்லி யாதர பய ஸ்ரீனாதன பரம ப்ரீதிய படெதவகெ

**ஸ்ரீஜகன்னாத தாசரின் தத்வசுவ்வாலிகள்:**

ஸ்ரீஜகன்னாததாசரால் இயற்றப்பட்ட அபூர்வமான கிருதிகள் தத்வசுவ்வாலிகள். த்ரிபதி சந்தஸ்ஸில் இருக்கும் இத்தகைய கிருதிகள் ஹரிதாச சாகித்யத்தில் வேறெங்கும் காணப்படுவதில்லை. கணவனை இழந்த தன் மருமகள் கோபம்மாவிற்காக, நித்யமங்களத்தைக் கொடுக்கும் சுவ்வாலிகளை இயற்றிக்கொடுத்தார் ஜகன்னாததாசர்.

சம்ஸ்கிருத மொழியில் இருந்த மத்வ தத்வங்களை தாசர், எளிய மொழியில், நடையில் தத்தம் வீட்டு வேலைகளை செய்தவாறே, ஆடிப்பாடத்தக்க ஒரு சுலபமான கிருதியை இயற்றுவதற்கு தாசர் நினைத்தார். அதன் முடிவே தத்வசுவ்வாலிகள்.

900 தத்வசுவ்வாலிகள் இருக்கிறதென்று பேலூர் கேசவதாசர் சொல்கிறார். இவை அனைத்தும் அச்சில் இல்லை. ஸ்ரீஹரிதாச பாரதி பிரகாஷன, பெங்களூரு – இவர்கள் 349 நுடிகளை மட்டும் தேடிப் பிடித்து அச்சிட்டிருக்கின்றனர். 1981ம் ஆண்டில் கே.எம். கிருஷ்ணராவ் அவர்கள் ஸ்ரீ ஜகன்னாத தாசரின் கிருதிகள் என்னும் புத்தகத்தில் 408 நுடிகளை வெளியிட்டிருக்கின்றனர்.

இந்த சுவ்வாலிகள் முக்கியமாக ஸ்ரீஹரியைக் குறித்தே இருப்பதால், மங்களபிரதனான பகவந்தனைக் குறித்தே பாடப்பட்டிருப்பதால், இவை எப்போதும் நன்மைகளையே கொடுக்கின்றன என்று சொல்கின்றனர்.

இந்த சுவ்வாலிகளில் பல்வேறு விஷயங்கள் இருக்கின்றன. இதில் சித்தாந்தம் இருக்கிறது. ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீமன் மத்வாசார்யரின் கிரந்தங்களான மகாபாரத தாத்பர்ய நிர்ணயம், பாகவத தாத்பர்ய, உபநிஷத் பாஷ்யங்கள், கீதா பாஷ்யம், த்வாதச ஸ்தோத்திரம், கிருஷ்ணாம்ருத மஹார்ணவம், விஷ்ணு ரகசியம் ஆகியவற்றை ஆதாரமாக வைத்துக்கொண்டு த்ரிபதி சந்தஸ்ஸில் தத்வங்களை நிரூபித்திருக்கிறார்.

பரமாத்மனின் சர்வ- வியாப்தித்வ, வாயுதேவரின் லட்சணங்கள், பரமாத்ம ஜீவரின் பிம்ப பிரதிபிம்ப பாவம், சத்வ ரஜஸ் தமஸ் ஜீவர்களின் கர்த்ருத்வ, கர்மங்களை பின்பற்றுவதற்கான வழிமுறைகள், சர்வகர்ம சமர்ப்பணம், என்று பல்வேறு பிரமாணங்கள் இங்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீனிவாஸ ஸ்துதி, நவகிரக ஸ்தோத்திரங்கள், ருத்ரதேவரின் ஸ்தோத்திரம், வாயுதேவரின் ஸ்தோத்திரம், பிரம்மதேவரின் ஸ்தோத்திரம், ஸ்ரீ-பூ-துர்கா ஸ்துதி, ருக்மிணி விலாஸ, தசாவதார ஸ்தோத்திரம், ஸ்ரீ வெங்கடேச ஸ்துதி, ஸ்ரீகிருஷ்ண ஸ்தோத்திரம், மாயாவாத கண்டனெ என்று பல அத்தியாயங்கள் இதில் உள்ளன.

இறுதியில் 5 நுடிகளில் மங்களம் செய்திருக்கிறார். ஜகன்னாததாசர், தமது கீர்த்தனைகளில், சுளாதிகளில், ஹரிகதாம்ருத சாரத்தில் கொடுத்துள்ள சித்தாந்த விஷயங்களை தத்வசுவ்வாலிகளில் தொகுத்திருக்கிறார். ஆனால், அவர் விளக்கும் நடை மாறுபட்டிருக்கிறது. சந்தஸ்ஸும் வேறு. சாமான்யரின் இதயத்தை சேருமாறு ஒரு எளிய நடையில் சுவ்வாலிகளை இயற்றியிருக்கிறார்.

துவக்கத்தில் ஸ்ரீவிக்னேஸ்வர ஸ்துதியை செய்திருக்கிறார்.

அம்பிகாதனய பூதம்பராதி சுரகதம்ப
சம்பூஜ்யனிரவத்ய | நிரவத்ய நின்ன
பாதாம்புஜகளெம்ம சலஹலி
நவகிரகங்களைக் குறித்து பாடியுள்ள சுவாலிகள் மிகவும் அற்புதமாக இருக்கின்றன. இதைத் தவிர தாசர் நவக்கிரகங்களுக்கென்று தனியாக வேறு ஸ்தோத்திரங்களை இயற்றியவரில்லை. கிரகங்களைக் காணும் அவரது பார்வை முற்றிலும் வித்தியாசமாக இருக்கிறது. மக்களின் வாழ்க்கையில் பிரச்னைகள் வந்தால், துக்கங்கள் ஏற்பட்டால், இது என்ன கிரகச்சாரம் என்று நாம் கிரகங்களை திட்டுவது வழக்கம். இதனை அனுபவித்திருக்கும் / பார்த்திருக்கும் தாசர், இப்படியாக நவக்கிரகங்களை பாடியிருக்கலாம்.

நவக்ரஹ தேவதெகளு தணிசோரே
தணிசோரே இவரன்னு அஹிதரெந்தெனுத கெடபேடி

ஸ்ரீஹரியின் தாசர்கள் இந்த நவகிரக தேவதைகள் என்றாவது தொந்தரவு செய்வார்களா என்றால் இல்லை. அதற்காக, அந்த தேவதைகளை தூஷிக்கத் தேவையில்லை. அப்படி தூஷித்து அவர்களின் கோபத்திற்கு ஆளாகாதீர்கள் என்கிறார் தாசர். ஜகன்னாதவிட்டலனை இரவும்பகலும் இடைவிடாமல் யார் கொண்டாடுகின்றரோ அந்த மகாத்மர்களுக்கு சத்கதியைக் கொடுத்து காப்பாற்றுவார்கள். இந்த கிரக தேவதைகள், ஸ்ரீஹரியின் ஆணைப்படி ஞான, பக்தி, வைராக்கியங்களை அருள்பவர்கள்.

எங்கும், எப்போதும், எந்நேரமும் ஸ்ரீஹரியை நினைப்பதே விதி. அவனின் மறதி தோஷங்களை ஏற்படுத்தும் என்கிறார். உன்னை எப்போதும் நினைக்கும் பக்தர்களுக்கு வேறு தோஷங்கள் வருமா? தாசரின் பார்வையே மடி. எங்கேயும் ஹரி ரூபத்தைக் காண்பவர்க்கு அதுவே மடி. அப்படி பார்க்காதிருப்பதே விழுப்பு. தாசரின் உபதேசம் இதுவே.

# 19. பலவிது பாள்துதக்கே

## திரு. பரசுராம் பெடகேரி

ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய ஹரிகதாம்ருதசாரம் என்னும் கிரந்தம் தாசசாகித்யத்தின் உச்ச கிரந்தம் என்ற பெயர் பெற்றிருக்கிறது. அந்த ஹரிகதாம்ருதசாரத்திற்கு சாரம் என்று அழைக்கப்படும் 'பலவிது பாள்துதக்கே' என்னும் பாடல், அணுஹரிகதாம்ருதசாரம் என்று புகழ் பெற்றிருக்கிறது. 27 பத்திகளைக் கொண்ட, நட்சத்திரப் பாடல் என்று அழைக்கப்படும் இந்த பாடலில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்கள் ஏராளமானது.

ப2லவிது3 பா3ள்து3த3க்கே1
ஸிரி நிலயன கு3ணக3ள தி1ளிது3 ப4ஜிஸுவதே |ப|

ஸ்ரீதேவியான லட்சுமியின் கணவனான ஸ்ரீஹரியின் நற்குணங்களை அறிந்து, அதைப் புகழ்ந்து பாடுவதே நாம் வாழும் வாழ்க்கைக்கு நல் அர்த்தத்தைக் கொண்டு தரும் என்கிறார். ஸ்ரீஹரியின் செயல்கள் ஏராளம். அவற்றில் அஷ்ட-கர்த்ருத்வ என்று பெயர் பெற்றவை - ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த மற்றும் மோட்ச. இவற்றைப் பற்றி நாம் தொடர்ந்து தெரிந்து கொள்ள முயலவேண்டும். ஸ்ரீஹரியின் நற்குணங்களை தெரிந்துகொள்வதே அவருக்கு நான் செய்யும் பஜனை எனலாம்.

ஸ்வோசித1 கர்மக3ளாசரிஸுத ப3லு நீசரல்லிகெ3 போ1கி3 யாசிஸதெ3
கே1சரவாஹ சராசர பந்த4க1 மோசக1னஹுதெந்து3 யோசிஸுதிப்புதே3 |1|

நாம் எந்த செயல்களை செய்ய வேண்டும், எவற்றை செய்யக்கூடாது என்று சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதை தெரிந்து கொள்ள வேண்டும். அதன் அடிப்படையில் செய்யப்படும் செயல்களே 'ஸ்வோசித' (உசிதமான) செயல்கள் ஆகும். வாழ்க்கை என்னும் நம் ரதத்தை ஓட்டுவதற்கு, நீசர்களின் உதவியை நாடக்கூடாது. அத்தகையவர்களின் உதவியுடன் செய்யப்படும் செயல்களின் பலன்களும் நீசமாகவே இருக்கிறது.

கருடவாகனான ஸ்ரீஹரியே அனைத்து ஜீவர்களுக்கும் அவர்களின் பிறப்பு / இறப்பு ஆகிய வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து விடுபட வைக்கக்கூடிய தகுதி உள்ளவன் என்ற அறிவு நமக்கு எப்போதும் இருக்கவேண்டும். அப்படிப்பட்ட சிந்தனையே நல்வாழ்க்கை வாழ்வதின் பலன் ஆகும்.

நிச்சஸுப4குதி1யொள் அச்சுத1னங்க்ரிக3ளர்ச்சிஸி மெச்சிஸு தெ1ச்சரதி3
து1ச்ச விஷயக3ள இச்செயிஸதே3 யத3ருச்சா லாப4தி3ம் ப்ரோச்சனாகு3வுதே3 |2|

ஸ்ரீஹரி ஒருவரே சர்வோத்தமன் என்ற அறிவுடன், எப்போதும் அவர் பாதாரவிந்தங்களை வணங்கியவாறு இருக்கவேண்டும். ஸ்ரீஹரியே பாராட்டுவதைப் போல வாழவேண்டும். என்றென்றும் சம்சாரிக / தாற்காலிக விஷயங்களில் மனதை பறிகொடுக்கக் கூடாது. இந்த விஷயங்களில் ஈடுபடாமல், ஸ்ரீஹரியின் விருப்பப்படி, கிடைத்ததை வைத்துக்கொண்டு திருப்தியுடன் வாழவேண்டும். அதிலேயே மகிழ்ச்சியடைய வேண்டும். இதுவே நல்வாழ்க்கை வாழ்வதின் பலன் ஆகும்.

மனோவாக் கா1யத3னுப4விஸுவ தி3னதி3னத விஷய ஸாதனக3ளனு
அனிலாந்த1ர்க3த1 வனருஹ த3ளலோசனக3ர்ப்பி1ஸி தா3ஸனு நானெம்புதே3 |3|

ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள் மற்றும் மனம் என மொத்தம் பதினோரு இந்திரியங்களால் ஆனது நம் தேகம். இந்த இந்திரியங்களின் மூலமாகவே நாம் அனைத்து

விஷயங்களையும் அனுபவிக்கிறோம். ஒவ்வொரு இந்திரியங்களுக்கும் ஒவ்வொரு அபிமானி தேவதைகள் இருக்கிறார்கள். அந்த தேவதைகளுக்குள் அந்தர்யாமியாக ஒரு பகவத்ரூபமும் இருக்கின்றது.

நாம் அனுபவிக்கும் விஷயங்களை, அந்த இந்திரியங்களுக்குள் இருக்கும் அபிமானி தேவதையை, அந்த தேவதைக்குள் அந்தர்யாமியாக இருக்கும் வாயுதேவரை, அந்த வாயுதேவருக்குள் அந்தர்யாமியாக இருக்கும் பகவத்ரூபத்தை நாம் எப்போதும் நினைத்து வணங்க வேண்டும்.

மேலும் அந்தந்த விஷயங்களை அந்தந்த பகவத் ரூபத்திற்கு சமர்ப்பிக்க வேண்டும். நாம் ஸ்ரீஹரியின் தாசன் என்னும் எண்ணம் எப்போதும் நமக்குள் இருக்க வேண்டும். முக்யபிராணாந்தர்கத ஸ்ரீகிருஷ்ணனுக்கு, அந்தந்த விஷயங்களின் அனுபவத்தை சமர்ப்பிப்பதே, நாம் வாழும் நல்வாழ்க்கையின் பலன் ஆகும்.

வாஸவமுக$^{2}$ விபு$^{3}$தா$^{4}$ஸுர நிசயகெ$^{1}$ வாசுதேவனெ ஷுபா$^{4}$ஷுப$^{4}$த$^{3}$
ஈ ஸமஸ்த ஜக$^{3}$கீ$^{1}$ஷ கேசவ ஈசஜீவரெம்ப சுஞ்ஞானவே |4|

இந்திரன் முதலான தேவர்களுக்கு நற்பலன்களையும், அசுரர்களுக்கு கெட்ட பலன்களையும் கொடுப்பவர் ஸ்ரீஹரியே. வாசுதேவ ரூபியான ஸ்ரீஹரியே அனைத்து உலகத்திற்கும் சுக-துக்கங்களைக் கொடுப்பவராக இருக்கிறார். இந்த உலகத்திற்கு தலைவன் - ஸ்ரீகேசவன். அனைத்து ஜீவர்களும் சுதந்திரம் இல்லாதவர்கள் (தானே முடிவெடுக்கும் திறன் இல்லாதவர்கள்). ஸ்ரீஹரியின் ஆணைப்படியே அனைவரும் நடக்கிறார்கள் என்று அறிந்துகொள்வதே நாம் வாழும் வாழ்க்கையின் பலன் ஆகும்.
பஞ்சபே$^{4}$த$^{3}$யுத$^{1}$ பிரபஞ்ச ஸுசத்ய விரிஞ்சி ப$^{4}$வமுக2ப$^{3}$லி வஞ்சக$^{1}$கே$^{3}$
ஸஞ்சல பிரதிமெ அஸஞ்சல பிரக்ருதியு சஞ்சிந்திஸி முத$^{3}$லாஞ்சன நஹுதே$^{3}$ |5|

உலகம் பஞ்ச-பேதங்களால் ஆனது. ஜீவ-ஜீவ, ஜீவ-ஜட, ஜீவ-ஈச, ஜட-ஜட, ஜட-ஈச - இவையே பஞ்ச-பேதங்கள் ஆகும். இவைகளால் ஆன இவ்வுலகம் மாயை இல்லை. உண்மையானது. 'சத்ய ஜகதிது பஞ்சபேதவு' என்னும் புரந்தரதாசரின் பாடல் இதற்கு சாட்சி. ஸ்ரீஹரியின் ரூபங்கள் இரு விதமானவை - சேதன & அசேதன (அசையும் & அசையா). பலிச்சக்ரவர்த்தியை முதலில் ஏமாற்றி, பின் அவருக்கு அருளிய வாமனரூபி ஸ்ரீஹரிக்கு, பிரம்மன் முதலான அனைத்து ஜீவர்களும் சேதன பிரதிமை என்று சொன்னால், ஜடப்பொருட்களே ஸ்ரீஹரிக்கு அசேதன என்று அழைக்கப்படுகின்றன. இத்தகைய நற்சிந்தனையை எந்நேரமும் செய்தவாறு, வைஷ்ணவ சின்னங்களை எப்போதும் ஆனந்தமாக தரித்தவாறு இருப்பதே, நாம் வாழும் வாழ்க்கையின் நற்பலன் ஆகும்.

பஞ்சருது$^{1}$க$^{3}$ளலி பஞ்சாக்னிக$^{3}$ளலி பஞ்சபஞ்சரூபவ தி$^{1}$ளிது$^{3}$
பஞ்ச ஸுசம்ஸ்கா$^{1}$ராஞ்சித$^{1}$னாகி$^{3}$ த்$^{3}$விபஞ்சக$^{1}$ரணத$^{3}$லி பஞ்சக$^{1}$னரிவுதே |6|

வசந்த, க்ரீஷ்ம, வர்ஷ, ஹேமந்த, ஷரத் & ஷிஷிர என்று ஆறு ருதுக்கள் உள்ளன. இதில் ஹேமந்த மற்றும் ஷரத் இவ்விரண்டிலும் ஒரே மாதிரியான சீதோஷ்ண நிலை இருப்பதால், இவற்றை ஒரே ருதுவாகக் கருதி, மொத்தம் ஐந்து ருதுக்கள் என்று சொல்வது வழக்கமாக இருக்கிறது.

ஹீங்கார, பிரஸ்தாவ, உத்கீத, ப்ரதீஹார மற்றும் நிதன என்று இந்த ஐந்து ஸ்ரீஹரியின் ரூபங்களும், இந்த ஐந்து ருதுக்களில் அந்தர்யாமியாக இருக்கிறார் என்று நினைக்க வேண்டும்.

# 19. பலவிது பாள்துதக்கே

ஹரிகதாம்ருதசார பஞ்சமஹாயக்ஞ சந்தியில் சொல்லியிருப்பதைப் போல, பஞ்சாக்னி எனப்படும், ஆகாயம், மழை, பூமி, புருஷ மற்றும் ஸ்த்ரீயில், ஸ்ரீஹரியின் ஐந்து ரூபங்களை நினைக்க வேண்டும். பஞ்ச ருதுகள் மற்றும் பஞ்ச அக்னியில் அந்தர்யாமியாக இருக்கும் பத்து ஸ்ரீஹரியின் ரூபங்களின் சிந்தனை மிகவும் முக்கியம்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் மற்றும் அந்தக்கரணம் என்னும் பஞ்ச-மனோவிருத்திகளை சுத்தப்படுத்தும் பஞ்ச-சம்ஸ்காரங்களை செய்யும் ஸ்ரீஹரியையும் மற்றும் பஞ்ச-கர்மேந்திரியங்கள் மற்றும் பஞ்ச-ஞானேந்திரியங்களில் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீஹரியையும் அறிந்து கொள்வதே, நாம் வாழும் இந்த வாழ்க்கையின் நற்பலன் ஆகும்.

ஹ்ருத3யதி3 ரூபவு வத3னதி3 நாமவு உத3ரதி3 நைவேத்3யவு ஷிரதி3
பத3ஜல நிர்மால்யவனே த4ரிஸி கோ1வித3ர ஸதன ஹெக்க3த்3வ கா1யுவுதே3 |7|

அனந்தகல்யாண குணபரிபூர்ணனான ஸ்ரீஹரியின் ரூபத்தை நம் மனதில் எப்போதும் காணவேண்டும். அப்படிக் காண்பதற்கான சாத்விக முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். மனதில் ஸ்ரீஹரியின் சிந்தனையை எப்போதும் இருத்திக்கொண்டால், நம் இதயத்தில் அவரின் தரிசனம் நமக்குக் கிடைக்கும்.

வாயினால் ஸ்ரீஹரியின் நாமங்களை எப்போதும் உச்சரித்தவாறு இருக்கவேண்டும். அவருக்கு நிவேதனம் செய்த சுத்தமான ஆகாரங்களையே நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். அவருக்கு சமர்ப்பிக்கப்பட்ட பொருட்களையே நாம் பயன்படுத்த வேண்டும். ஞானிகளின் வீட்டு வாசற்படியை காத்தவாறு இருக்கவேண்டும். என்றால் ஞானிகளின் உதவியாளராக எப்போதும் அவர்களின் பார்வையிலேயே / பழக்கத்திலேயே இருக்கவேண்டும் என்று பொருள். இப்படி செய்தால், அதுவே நாம் வாழும் நல்வாழ்க்கையின் நற்பலன் ஆகும்.

பா1த்1ரர ஸங்க3ட3 யாத்1ரெய சரிஸுத1 விதா4த்1ருபி1த1ன கு3ணஸ்தோ1மகள |
ஸ்ரோத்ரதி3 ஸவிது விசித்1ரானந்த3தி3 கா3த்1ரவ மரெது3 ப1ரத்1ரவ ப1டெவுதே3 |8|

ஸ்ரீஹரியின் பக்தர்களுடன் தீர்த்தயாத்திரை செல்லவேண்டும். அப்படிச் செல்லும்போது, அவர்கள் மூலமாக ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிந்து, அவற்றை மனதில் அசைபோட்டவாறு, விசேஷமான ஆனந்தத்தைப் பெறவேண்டும். கர்வத்தைத் துறந்து, மோட்சத்திற்குத் தேவையான ஞானம், பக்தி, வைராக்கியம் ஆகியவற்றை வளர்த்துக் கொள்வதற்கு முயல வேண்டும். இதுவே நாம் வாழும் நல்வாழ்க்கையின் நற்பலன் ஆகும்.

ஹம்ஸமொத3லு ஹதினெண்டு ரூப1க3ள சம்ஸ்தா1னவ தி1ளித3னுதி3னதி3
சம்ஸேவிஸுவ மஹாபுருஷர ப1த3 பா1ம்ஸுவ த4ரிஸி அசம்ஷயனப்பு1தே3 |9|

ஹம்ஸத்திலிருந்து துவங்கி ப்ருஹத் வரையிலான ஸ்ரீஹரியின் பதினெட்டு ரூபங்களை, அவற்றின் தாரதம்ய இடங்களை அறிந்து கொள்வரே மகாபுருஷர் எனப்படுவர். அத்தகைய பாகவதர்களின் சேவையை நாம் செய்யவேண்டும். அவர்களின் காலடி மண்ணினை நம் தலையில் இட்டுக்கொள்ள வேண்டும். அவர்களுடனான பழக்கத்தின் மூலம், சந்தேகம் அற்ற, தூய்மையான ஞானத்தைப் பெற்று வாழ்வதே, நம் வாழும் வாழ்க்கைக்கான நிஜமான பொருள் ஆகும்.

வரகா3யத்ரி நாமக1 ஹரிகீ3ரெரடங்க்ரிக3ள விவரவ தி1ளிது3
த1ருவாயதி3 ஷட்வித4ரூப1வ சாத3னத3லி அனுதின தி3யானிசுதி1ப்புதே3 |10|

வேதங்களின் சாரம் என்று அழைக்கப்படும் காயத்ரி மந்திரத்திற்கு, ஸ்ரீமன் நாராயணனே பிரதிநிதியாக இருக்கிறார். அத்தகைய காயத்ரி மந்திரத்தின் சிறப்புகளை கற்றறிந்த

ஞானிகளிடமிருந்து தெரிந்து கொள்ளவேண்டும். அந்த காயத்ரி மந்திரத்தின் பிரதிநிதியான ஸ்ரீஹரியின் ஆறு வித ரூபங்களை அறிந்து, அவற்றை தினமும் பக்தியுடன் வணங்கவேண்டும். இப்படி வாழ்வதே, நாம் வாழும் வாழ்க்கைக்கான நிஜமான பொருள் ஆகும்.

பி3கித3 க1ண்ட2தி3ம் த்3ருக்1பா4ஷ்பக1ளிம் நகெ3மொக3தி3ம் ரோமக3ளொகெ3து3
மிகெ3 ஸந்தோ1ஷதி3ம் நெகெ3தா3டுத1 நான்மொக3னய்யன கு3ண பொ1க3ளி ஹிக்கு3வுதே3 ||11||

சில ஹரிபக்தர்கள், ஸ்ரீஹரியின் குணங்களையே எப்போதும் சிந்தித்தவாறு, மிகுந்த மகிழ்ச்சியில் தொண்டை அடைத்து, வாயிலிருந்து சொற்களே வராதவாறு, கண்களில் நீர் பெருகி, வெட்கத்தை விட்டு குதித்திருப்பார்கள். பிரம்மதேவனின் தந்தையான ஸ்ரீஹரியை எப்போதும் புகழ்ந்து பாடுபவர்களாக இருக்கிறார்கள். பக்தர்களின் இத்தகைய குணநலன்கள் இங்கு விவரிக்கப்பட்டிருக்கிறது. இப்படி ஸ்ரீஹரியிடமே மனதை வைத்து வாழ்வது, நாம் வாழும் இந்த வாழ்க்கையின் நிஜமான பொருள் ஆகும்.

க்3ருஹக1ர்மவ பே3ஸரத3லெ ப1ரமோத்ஸஹத3லி மாடுத1 மூர்ஜக3த3
மஹித1ன ஸேவேயிதெ3யெனுத1லி மோத3தி3 அஹரஹர்மனதி3 சமர்ப்பிசுதி1ப்புதே3 |12|

பக்தர்கள் தங்களின் வர்ணாஸ்ரமத்திற்கேற்ப விதிக்கப்பட்ட தினப்படியான கர்மங்களை எந்தவொரு வெறுப்பும் இல்லாமல், உற்சாகத்துடன், தாம் செய்யும் செயல்கள் அனைத்தும் மூன்று லோகங்களுக்கு அதிபதியான ஸ்ரீஹரியின் சேவை என்று நினைத்து செய்யவேண்டும். அந்த அனைத்து கர்மங்களையும் எல்லா இடத்திலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்து வாழ்வதே, நம் இந்த வாழ்க்கையின் உன்னதமான பலன் ஆகும்.

க்1ளேஷாந்தக3ள் ஈசாதீ3ன சமாசம பிரம்ம சதாஷிவரு
ஈஷித1வ்ய ருபரேஷனல்லதே3 ஸ்வாஸபிடுவ சக்தி லேசில்லெம்புதெ |13|

நமக்குக் கிடைக்கும் சுக துக்கங்கள் என அனைத்தும் ஸ்ரீஹரிக்கு கட்டுப்பட்டவையே ஆகும். மகாலட்சுமியானவர், ஸ்ரீஹரிக்கு - தேச, காலத்திற்கேற்ப சமமாக இருந்தாலும், அவருக்குக் கட்டுப்பட்டு தாரதம்யத்தில் கீழ் இருப்பதால், சமாசம என்று அழைக்கப்படுகிறார். இவருடன், பிரம்மா, ருத்ரர் ஆகியோர் ஸ்ரீஹரியின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர்களே ஆவர். ஸ்ரீஹரியின் விருப்பம் இல்லையென்றால், ஜீவர்களுக்கு மூச்சு விடும் சக்திகூட இருப்பதில்லை. சுதந்திரமும் இருப்பதில்லை. இவற்றை தெளிவாக அறிந்து வாழ்வதே இந்த வாழ்க்கையின் சிறந்த பலன் ஆகும்.

ஆ பரமாத்மகே3 ரூபத்3யவவு ப1ராப1ர த1த்வக3ளித3ரொளகே3
ஸ்த்1ரீபும்பே4த3தி3 ஈ பத்3மஜாண்ட3வ வியாபி1ஸிஹனெந்தீ3 ப1ரி தி1ளிவுதே3 |14|

பர மற்றும் அபர என்ற இந்த இரு தத்வங்களில் ஸ்ரீஹரி இரு ரூபங்களில் வியாபித்திருக்கிறார். வைகுண்டம் முதலான மூன்று இடங்கள் பரதத்வங்கள் எனப்பட்டால், பூர்-முதலான பதினான்கு லோகங்கள் அபரதத்வங்கள் எனப்படுகின்றன. ஸ்த்ரி மற்றும் புருஷர்களில் (பெண் & ஆண்களில்) ஸ்ரீஹரி அந்தர்யாமியாக இருக்கிறார். ஸ்த்ரியர்களில் ஸ்த்ரி ரூபமாகவும்; புருஷர்களில் புருஷ ரூபமாகவும் இருக்கிறார் என்று அறியவேண்டும். பற்பல ஸ்த்ரி மற்றும் புருஷ ஜீவர்களில் - இந்த மொத்த பிரம்மாண்டத்தையே உருவாக்கிய ஸ்ரீஹரி இருக்கிறார் என்று நினைப்பதே இந்த வாழ்க்கையின் சிறந்த பலன் ஆகும்.

ஏகோ1த்த1ர பஞ்சாஷத் வர்ணக3ள் ஏகா1த்மன நாமங்க3ளிகு3

மா க1மலாஸன மொத3லாத3மரரு சாக1ல்யதி3 இவனரியனெம்பு3தே |15|

அ முதல் க்ஷ வரையிலான ஐம்பத்தி ஒன்று எழுத்துக்களின் அபிமானியாக ஸ்ரீஹரியே இருக்கிறார். அனைத்து எழுத்துகளும் ஸ்ரீஹரியையே புகழ்கின்றன. ரமாதேவி (மா), பிரம்மதேவர் (கமலாசன) முதலானோர் ஸ்ரீஹரியின் நற்குணங்களை முழுமையாக அறியாதோர். இந்த விஷயங்களை அறிந்து வாழ்வதே நம் வாழ்க்கையின் பலன் ஆகும்.

ஒந்து3 ரூப1தொ3ள் அனந்த1ரூப1வு ஒந்தி3ப்ப1வு கு3ணக3ணஸஹித1
ஹிந்தே3 முந்து3 எந்தெ3ந்தி3கு3 கோ3விந்த3கெ3 ஸரிமிகி3 இல்லெந்தெ1ம்புதே3 |16|

அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியின் ரூபமானது அனந்தமாக இருக்கிறது. அவரின் ஒவ்வொரு ரூபத்திற்கு உள்ளும் பல ரூபங்கள் உள்ளன. ஒவ்வொரு ரூபமும் ஒரே நேரத்தில் பற்பல செயல்களை செய்யவல்லன. அனைத்து ரூபங்களும் ஒன்றே என்றும் அவை அனைத்திலும் ஸ்ரீஹரியின் அனைத்து நற்குணங்களும் நிரம்பியுள்ளன என்றும் அறியவேண்டும். எந்த காலத்திலும் கோவிந்தனுக்கு சமமானவர் என்று யாருமே இல்லை என்று தெரிந்து கொள்வதே நாம் வாழும் வாழ்க்கையின் சிறந்த பலன் ஆகும்.

ஹரிக1தெ பரமாத3ரத3லி கே1ளுத1 மரெது3 த1னுவ ஸுக1 ஸூரியுத1லி
உருகா3யன ஸந்த3ருசன ஹாரைசிருளு ஹக3லு ஜரிஜரிது பா3ளுதே |17|

ஸ்ரீஹரியின் கதைகளை மிகவும் பக்தியுடன் கேட்கவேண்டும். இந்த தேகத்தின் மேல் உள்ள பற்றை விடுத்து, ஸ்ரீஹரியின் கதைகளை மகிழ்ச்சியுடன் கேட்டுக்கொண்டே இருக்கவேண்டும். முக்தர்களால் என்றென்றும் புகழப்பட்டு பாடப்பட்டு வரும் ஸ்ரீஹரியின் தரிசனம் எனக்கு என்று கிடைக்குமோ என்று இரவும் பகலும் எண்ணியவாறு வாழ்வதே, இந்த வாழ்க்கையின் நோக்கம் ஆகும்.

விஷயேந்தி3ரயக3ளலி த1த3பி4மானி ஸுமனசரொளு நிந்து1 நியாமிசுத1
ஷ்வசனாந்தர்க3த1 வாசுதேவ தா1 விஷயங்க3ள போ4கிசுவனெந்த3ரிவுதே3 |18|

மூன்று உலகங்களிலும் இருக்கும் நீர், நிலம் மற்றும் ஆகாயத்தில் வாழும் அனைத்து ஜீவராசிகளில், வாயுதேவரில் அந்தர்யாமியாக இருக்கும், மிகவும் அற்புதமான சக்திகளையுடைய ஸ்ரீஹரியின் பல விதமான விபூதி (சிறப்பு வாய்ந்த) ரூபங்களை நினைத்தவாறு, பூஜித்தவாறு வாழ்வதே நாம் வாழும் இந்த வாழ்க்கையின் பலன் ஆகும்.

மூஜக3தொ3ளகி3ஹ பூ4ஜல கே2சர ஈ ஜீவரொளு மஹெளஜசன
சோஜிக3 ப3ஹுவித3 நைஜவிபூ4திய பூ1ஜிசுத1னுதி3ன ராஜிசுதிப்புதே |19|

மே3தி4னி ப1ரமாணாம்பு3 க3ணங்க3ள நைத3ப3ஹுது ப1ரிக3ணனெயனு
மாத4வனானந்தாதி3 கு3ணங்க3ள நாதி3கா1லத3லி அக3ணித வெம்புதே |20|

எண்ணிக்கையற்ற பற்பல அணுவினால் இந்த பூமியானது உருவாகியிருக்கிறது. அந்த அணுக்களை எண்ணுவது நம்மால் சாத்தியமில்லை. இந்த பூமியில் உள்ள நீர்த்துளிகளை எண்ணுவதும் யாராலும் சாத்தியம் இல்லை. ஆனால் அந்தந்த தத்வாபிமானி தேவதைகளுக்கும், அவர்களுக்குள் அந்தர்யாமியாக இருக்கும் வாயுதேவருக்கும் இது (எண்ணுவது) சாத்தியமே. ஆனால் அவர்களாலும், ஸ்ரீஹரியின் நற்குணங்களை – அவை எண்ணிக்கையற்ற அனேகமாக இருப்பதால் – எண்ணுவது சாத்தியமில்லை. அனாதி காலத்திலிருந்து அந்த குணங்களை முழுவதுமாக தெரிந்துகொள்ள முற்படும் ரமாதேவிக்கும் இது இன்னும் சாத்தியப்படவில்லை. எக்காலத்திலும் அது சாத்தியம்

ஆவதும் இல்லை. அவரின் குணங்கள் எண்ணிக்கையில் அடங்காமல் உள்ளன என்று தெரிந்து வாழ்வதே நம் வாழ்க்கையின் நோக்கமாக இருக்கவேண்டும்.

கு3ணகா1லாஹ்வய ஆக3மார்ணவ கு1ம்பி3ணி ப1ரமாண்வாம்பு3தி3களலி
வனகி3ரிநிதி3 மொத3லாத3த3ரொரள கிம்தன க3தபா1வக1னந்திஹ நெம்புதே |21|

மூன்று குணங்களில், மூன்று காலங்களில், எல்லா கடல்களிலும், பூமியின் ஒவ்வொரு துகள்களிலும், காடுகளில், மலைகளில் என அனைத்து இடங்களிலும் அந்தர்யாமியாக ஸ்ரீஹரி இருக்கிறார். விறகுக்கட்டையில் மறைந்திருக்கும் நெருப்பினைப் போல, ஸ்ரீஹரி இந்த இடங்களில் அந்தர்யாமியாக இருக்கிறார். ‘அனலனு அரணியொளக்கிப்பந்தெ தாமோதரனு பிரம்மாதிகள மனதலி தோரி தோரதலெ’ என்ற ஹரிகதாம்ருதசார ஸ்லோகத்தில் சொல்லியிருப்பதைப் போல சிந்தித்திருப்பதே நம் வாழ்க்கையின் நோக்கமாக இருக்கவேண்டும்.

அனளாங்கா3ரனொள்ளித்தோ3 பா1தியொள் அனிருத்த3னு சேத1னரொளகெ3
க்1ஷண பிட்டக3லதே3 ஏகோ1 நாராயண ஸ்ருதி1 பி1ரதி1பாத்3யனு இஹனெம்புதே3 |22|

நெருப்பு கங்கில், நெருப்பானது எப்படி மறைந்திருக்கிறதோ, அதைப் போலவே அனிருத்த நாமக ஸ்ரீஹரியானவர், அனைத்து சேதனர்களுக்குள்ளும், ஒரே ஒரு நொடியும்கூட அவர்களை விட்டு அகலாமல் மறைந்து இருக்கிறார். ‘ஏகோ நாராயண ஆஸீத்’ என்று வேதங்களால் புகழப்படும் சர்வோத்தமன் இவனே என்று அறிந்து வாழ்வதே நாம் பெற்ற இவ்வாழ்க்கையின் முக்கிய பலன் ஆகும்.

ப1க்1ஷக3ளக்1ஷிக3ளக3லத3 லிப்ப1ந்தே1 அக்1ஷர பு1ருஷன பே1க்ஷெயலி
கு1க்ஷியொளப்ஜஜ த்ர்யக்ஷாத்3யமரர ஈக்1ஷிஸி க1ருணதி ரக்1ஷிபனெம்புதே |23|

கண்களை கண் இமைகள் எந்நேரமும் காத்து வருவதைப் போல, அக்ஷர-நாமக என்று அழைக்கப்படும் ஸ்ரீஹரி, எந்தவொரு விருப்பமும் இல்லாமல், தன் வயிற்றில், பிரம்மன், ருத்ரர், முதலான தேவதைகளை இருத்திக்கொண்டு, அவர்களை கருணையுடன் அருள்கிறார் என்று தெரிந்து வாழ்வதே இந்த வாழ்க்கையின் நற்பலன் ஆகும்.

ப1வனமதா1னுக3 நவனானகு3தெ3ன் அவனியொளகெ3 சத்யவிஜனர
ப4வனங்க3ளலி ஸஞ்சரிசுத1 ஸுக1தா1 ஸ்ரவணவ மாடுத1லி பிரவரனாகு3வுதே3 |24|

வாயுதேவரின் அவதாரமான ஸ்ரீமத்வரின் சித்தாந்தத்தை பின்பற்றுபவர்களாகிய நாம் இந்த உலகத்தில், ஞானிகளின் வீடுகளுக்கு அடிக்கடி சென்று வரவேண்டும். அவர்களுடன் தொடர்பில் இருக்கவேண்டும். அவர்களிடமிருந்து ஸ்ரீஹரியின் கதைகளைக் கேட்டு, நற்குணங்களைப் பெறுவதே, நாம் வாழும் இந்த வாழ்க்கையின் சிறந்த பலன் ஆகும்.

கா1ரணகா1ர்யாந்த1ர்க3த1 அம்சவதா1ரா வேஷவிஹித1 ஸஹஜ
ப்1ரேரக1 ப்1ரேர்யாஹ்வய ஸர்வத்1ர விகா1ரவில்லதெலெ தோ1ருவனெம்பு3தே3 |25|

ஸ்ரீஹரிக்கு பற்பல (எண்ணிக்கையற்ற) ரூபங்கள் உள்ளன. அவற்றில் பத்து அவதாரங்கள் மிகப் புகழ்பெற்றவை. காரண-காரியங்களின் அந்தர்யாமியாத ரூபங்கள், அம்சாவதாரங்கள், ஆவேசரூபங்கள், அஹித, சஹஜ, ப்ரேரக, ப்ரேர்யாஹ்வய என்று பல பெயர்களால் ஸ்ரீஹரி அழைக்கப்படுகிறார். அந்தந்த பெயர்களினால் அழைக்கப்பட்டு, எந்தவொரு குறைகளும் இல்லாமல், அந்த அவதாரங்களில் நிலைத்திருக்கிறார். இந்த வகையில் ஸ்ரீஹரியானவர் உலகத்திற்கு தன்னை காட்டிக்கொள்கிறார் என்று அறிந்துகொள்வதே நாம் வாழும் இந்த வாழ்க்கையின் சிறந்த பலன் ஆகும்.

## 19. பலவிது பாள்துதக்கே

பிரதி1தி3வசதி ஸ்ருதி ஸ்ம்ருதிக3ளிந்த3 சம்ஸ்துதி1சுத1 லட்சுமி பதி1கு3ணவ
க்1ருதிப1தி ஸ்ருஷ்டிஸ்தி1தி1 லய கா1ரண இத1ர சர்வதே3வதெ1க3ளிகி3ல்லெம்பு3தே |26|

வேதபுராணங்களில் வர்ணிக்கப்படும் ஸ்ரீஹரியின் மகிமைகளைப் பற்றி அறிந்து, அவரை வணங்கவேண்டும். க்ருதிபதியான பிரத்யும்னன், அனிருத்தன், வாசுதேவ ரூபங்களே - படைத்தல், காத்தல், அழித்தல்களுக்கு காரணம் என்று அறியவேண்டும். பிற தேவதைகள் எந்தவொரு செயலை சுதந்திரமாகச் செய்வதற்கு சாத்தியம் இல்லை. அனைத்திற்கும் ஸ்ரீஹரியே காரணம். மற்றவர்களுக்கு அத்தகைய சாமர்த்தியம் இல்லை என்று அறிந்து வாழ்வதே, இந்த வாழ்க்கையின் நோக்கமாக இருக்கவேண்டும்.

பன்னகா3சல ஸுஸன்னிவாஸ பா1வன்னசரித1 சத்கு3ணப4ரித1 |
ஜன்ய ஜனக1 லாவண்யேக1 நிதி4 ஜகன்னாத1விட்டலா நான்யப1 நெம்புதே |27|

சேஷாசலவாச, அழகான கோயிலில் வசிப்பவர், மிகப் புனிதமான சரித்திரத்தைக் கொண்டவர், கல்யாண குணங்களால் நிரம்பியவர், இந்த உலகத்திற்கும் / படைத்தலுக்கும் காரணமானவர், அழகிய வடிவத்தைக் கொண்டவனான ஜகன்னாதவிட்டலனே, என்னை வேறு யாரோ என்று நினைக்காதே - நான் உன்னுடையவனே என்று அவரை வணங்கி, அவருக்கு சரணடைந்து வாழ்வதே நாம் வாழும் இந்த வாழ்க்கைக்கு சிறந்த பலன் ஆகும்.

***

# 20. ஹரிகதாம்ருதசாரம்

## திரு. லட்சுமிபதிராஜா

ஸ்ரீஜகன்னாததாசரால் ரசனை செய்யப்பட்ட ‘கன்னட நியாய சுதா’ எனப் போற்றப்படும் மேரு க்ருதியே ‘ஹரிகதாம்ருத சாரம்’ ஆகும். விஜயதாசரின் ஆணைக்கிணங்க கோபாலதாசர் மூலம் தானமாகப் பெறப்பட்ட 40 வருட ஆயுட்காலத்தை முழுவதுமாக தாசமார்க்கத்தில் அர்ப்பணித்து, ஜகன்னாத தாசரால் படைக்கப்பட்ட அற்புத படைப்பு இது. ஹரிகதாம்ருத சாரம் என்றால் பகவான் ஸ்ரீஹரியின் மகிமையை உரைக்கும் சார கிரந்தமாகும். பகவானிடம் வினயம், பக்தி, சலுகை, ஹாஸ்யம், சரணாகதி, த்ருட நம்பிக்கை முதலான நவரசங்களில் மூழ்கி, நிறைந்த மனத்தினராய், மெய் மறந்த நிலையில் தானாகவே தாசரின் மூலம் வெளிவந்த ஆசு கவிதையே இந்த ஹரிகதாம்ருதசாரம்.

பாற்கடலில் கிடைத்தது அமிர்தம் எனில், பக்திக்கடலில் கிடைத்தது ஹரிகதாம்ருதம். அந்த அமிருதத்தினால் ரோகம், மரண பயம் நீங்கும் எனில், இந்த அமிர்தத்தினால் பவரோகமே நீங்கி, மோட்ச மார்க்கம் சித்திக்கும்.

சாதாரணமாக ஒவ்வொரு கிரந்தத்திலும் ஒவ்வொரு விஷயம் கூறப்பட்டிருக்கும். இந்த ஹரிகதாம்ருத சாரத்தில் பகவத் விஷயமான சகல தத்வங்களும், ரகசியமான பிரமேயங்களும், பகவத் மகிமைகளும், மிகவும் ஸ்பஷ்டமாக ஸ்ருதி, ஸ்ம்ருதிகளுக்கு அனுகூலமாக கூறப்பட்டுள்ளது. சகல வேத, உபநிஷத்கள், புராண, இதிகாசங்கள் முதலான மூல பிரமாண கிரந்தங்களை ஹரிகதா எனக்கொண்டால், சர்வமூல கிரந்தங்கள், டீகா, டிப்பணி, கிரந்தங்களை அதன் அர்த்தங்களை அளிக்கும் கிரந்தங்கள் எனக் கொண்டால், ‘ஹரிகதாம்ருத சாரம்’ மேற்கூறிய அனைத்து கிரந்தங்களின் சாரமாக திகழ்கிறது.

32 சந்திகளில், பாமினி ஷட்பதி அமைப்பில் இயற்றப்பட்ட கிரந்தம் இது. ஸ்ரீஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர் மற்றும் ஸ்ரீபுரந்தரதாசர் ஆகியோர் இவரது கனவில் தோன்றி அளித்த ஆசிர்வாதத்தால் இயற்றப்பட்ட கன்னட மேரு கிருதி இது. ஜகன்னாததாசர் கிரந்தத்தை இயற்றியபோது, வர்ணாபிமானி தேவதைகள், இவர் முன்னே ‘நான், நீ’ என்று போட்டியிட்டு நர்த்தனமாடி, நின்று அருளிய கிரந்தம் இது.

தாசரே ஓரிடத்தில் ஸ்பஷ்டமாக ‘லௌகிக வார்த்தை அல்ல, பரலோக நாதனின் வார்த்தை’ என்று பொருள்படும்படியாக ‘லோக வார்த்தெ இதல்ல, பரலோகைக நாதன வார்த்தெ’ என உரைத்துள்ளார். எனவே, இந்த கிரந்தம் ‘சகல வேத, புராண, இதிகாச, உபநிஷத் ஆகியவற்றின் சாரமாக ரகசிய பிரமேயங்களுடன் உள்ளது என்று தெரிகிறது. எளிமையான நடை, அனைவரும் புரிந்து கொள்ளும் வண்ணம் உதாரணங்கள், ஆழமான பகவத் விஷயங்கள் இதில் நிரம்பியுள்ளன. அங்கங்கு சம்ஸ்கிருத பதங்கள் இருப்பினும், அது கன்னடத்தில் நிழலில் அனுசரித்து இருக்கும்படி தாசர், தன் கவித்துவத்தையும் நிரூபணம் செய்துள்ளார்.

மனிதன் எப்படி இருக்க வேண்டும்? பகவானின் கருணைக்கு பாத்திரராவது எவ்விதம்? பகவானின் கருணை எத்தகையது? பித்ரு காரியங்களை செய்வது எப்படி? எதுவும் அறியாத பாமரன் எவ்விதம் சாதனை செய்யவேண்டும்? எப்படி அனுசந்தானம் செய்வது? இவ்வளவு ஏன்? எப்படி போஜனம் செய்ய வேண்டும் என்பதுகூட இதில் விவரிக்கப்பட்டுள்ளது.

32 சந்திகளில் முறையே, மங்களாசரண சந்தி, கருணா சந்தி, வியாப்தி சந்தி, போஜன ரசவிபாக சந்தி, விபூதி சந்தி, பஞ்ச மஹாயக்ஞ சந்தி, பஞ்ச தன்மாத்ர சந்தி, மாத்ருகா சந்தி, ஜீவப்ரகரண சந்தி, சர்வ ப்ரதீக சந்தி (அல்லது) சர்வ சமர்ப்பண சந்தி, தியான க்ரியா (அல்லது) தியான ப்ரக்ரியா சந்தி, நாடி பிரகரண சந்தி, நாமஸ்மரண சந்தி, பித்ருகண சந்தி,

ஸ்வாஸ சந்தி, தத்த ஸ்வாதந்த்ர்ய சந்தி, ஸ்வகத ஸ்வாதந்த்ர்ய சந்தி, க்ரீடா விலாச சந்தி, கர்ம விமோசன சந்தி, குணதாரதம்ய சந்தி, ப்ருஹத் தாரதம்ய சந்தி, பக்தாபராத சஹிஷ்ணு சந்தி, கல்ப சாதன சந்தி, பிம்பாபரோக்ஷ சந்தி, ஆரோகண தாரதம்ய சந்தி, அவரோகண தாரதம்ய சந்தி, அனுக்ரமணிகா சந்தி, கணபதி ஸ்தோத்திர சந்தி (அல்லது) விக்னேஷ்வர சந்தி, அணுதாரதம்ய சந்தி, தைத்ய தாரதம்ய சந்தி என பிரித்து, பகவத் விஷயங்களை கொடுத்துள்ளார் தாசர். கிரந்தத்தின் சந்தி விபாக கர்மங்களை, ஸ்ரீபீமேச தாசர், 'சந்தி மாலா சந்தி' என்ற கிருதியில் தனியாக விளக்கியுள்ளார்.

இத்தகைய உயரிய கிரந்தத்தின் பலஸ்ருதியை ஸ்ரீஜகன்னாத தாசரின் சிஷ்யர் ஸ்ரீதவிட்டல தாசர், விசேஷமாக 33-வது சந்தியாக கொடுத்துள்ளார். அதில், இந்த நூலின் ஒரு எழுத்தைக்கூட எழுதி, படித்தாலும், ஒருவன் தேவதைகளால் வேண்டப்பட்டவனாய், ஸ்ரீஹரியின் பக்தி என்னும் உயர்வான செல்வத்தைப் பெறுவான். இதைப் படிப்பவர்களுக்கு அகால மரணம் இல்லை, யம பயம் விலகும், சர்வ மனோபீஷ்டங்களும் நிறைவேறும் எனக்கூறி, மேலும் இந்த கிரந்தத்தின் ஒரு சந்தியாவது பாராயணம் செய்வதால்கூட, ஆயுள், ஆரோக்யம், புகழ், வலிமை, விசேஷ ஞானம், வீரம் மற்றும் நல்ல குணங்கள் சித்திக்கும் என விவரித்துள்ளார். ஸ்ரீதவிட்டல தாசர் மேலும் விவரிக்கும்படியான இந்த கிரந்தத்தை கேட்டாலே, குருடன் கண் பார்வை பெறுவான், செவிடனுக்கு காதுகள் கேட்கும், வளர்ச்சி குறைபாடு உள்ளவர்கள், மன்மதனைப் போல ரூப சௌந்தர்யம் அடைவார்கள், மலட்டுப் பசுக்கள் கூட ஈன்றெடுக்கும் பாக்கியம் பெறும், பட்டம் மரம் கூட துளிர்க்கும் என பலன்களை வரிசைப்படுத்துகிறார்.

இந்த கிரந்தத்தின் பாராயணத்தால் காம, க்ரோதங்கள் முதலான கெட்ட சிந்தனைகள் நீங்கும், நித்ய தீர்த்த ஸ்னானம் மற்றும் தானங்கள் அளிக்கும் பலன்கள் கிட்டும். பத்னியரிடம் பதிபக்தியும், கணவனிடத்தில் ஏகபத்னி விரதமும், தம்பதிகளிடையே அன்யோன்ய பாவமும் அதிகரித்து, சந்தோஷத்துடன் நல்வாழ்வு வாழ்வர், நற்கதியைப் பெறுவர் என தாசர் பலஸ்ருதியில் விளக்குகிறார்.

எல்லாவற்றிற்கும் மேலாக, ஸ்ரீஜகன்னாததாசர், வைகுண்ட யாத்திரைக்குக் கிளம்ப எத்தனித்தபோது, சூக்ஷ்ம ரூபத்தில் தன்னை காண்பித்து, தன்னுடைய ஒரு அம்சம் தான் வாழ்ந்த மானவியில் உள்ள தன் கிருஹத்தில் ஒரு கம்பத்திலும், தான் மீட்டிவந்த வீணையிலும், விசேஷமாக தான் இயற்றிய ஹரிகதாம்ருத சாரத்திலும் இருப்பதாக உரைத்து, ஹரிவாயு மற்றும் குருகளின் அருள் இதில் பரிபூர்ணமாக உள்ளது என்பதை காட்டியுள்ளார்.

கன்னடத்தில் இயற்றப்பட்ட ஹரிகதாம்ருத சாரத்திற்கு அனேக பண்டிதர்களும், தாசர்களும், ஸ்ரீசங்கர்ஷண ஒடெயரு போன்ற யதி ஸ்ரேஷ்டர்களும் வெவ்வேறு காலங்களில், அனேக வியாக்யானங்களை அளிப்பத்திருப்பதனாலேயே, இந்த கிரந்தத்தின் மகிமை மற்றும் கருத்துக்களின் ஆழம் புலப்படுகின்றது. இத்தகைய மேரு கிருதியான ஹரிகதாம்ருதசார கிரந்தத்தை படித்து, எழுதி, கேட்டு, பாராயணம் செய்து, பிறருக்கும் கற்பித்து ஸ்ரீஜகன்னாத விட்டலனின் அருளுக்கு பாத்திரர் ஆவோமாக என பிரார்த்திக்கின்றோம்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.**

***

# 21. மானவி பகுதியின்

## ஹரிதாசர்கள் -

## திருமதி. வித்யா கஸபே

பாரதத்தின் ஆன்மிக வரலாற்றில் கர்னாடகம் ஒரு மிகச்சிறந்த இடத்தைப் பிடித்திருக்கிறது. இங்கிருக்கும் ராய்ச்சூர், ஹரிதாசர்களின் மையப்புள்ளி எனலாம். ஹரிதாசர்கள் ஏற்றிய தாச-விளக்கு இன்று வரை மிகவும் பிரகாசமாக ஒளிர்ந்து கொண்டே இருக்கிறது. ராய்ச்சூர் ஜில்லாவின் மானவி, தாசர்களின் காசி என்று அழைக்கப்படுகிறது.

தாச சதுஷ்டயர்களான நால்வரில், இருவர் மானவி பகுதி யிலிருந்து வந்தவர்களே ஆவர். அவர்கள் ஸ்ரீவிஜயதாசர் மற்றும் ஸ்ரீஜகன்னாததாசர். ஸ்ரீவிஜயதாசர், அபரோக்ஷ ஞானிகள். உலக மேம்பாட்டிற்காக, பாரதத்தை முழுவதுமாக சுற்றுப்பயணம் செய்து, மக்களின் மனதில் பக்தியின் விதையை விதைத்தவர்.

இவரது இன்னொரு சிறப்பு என்னவெனில், விலைமதிப்பில்லாத சிஷ்யர்களைப் பெற்றதே. ஸ்ரீஜகன்னாததாசர் மகாமகிமர். அவரது பெயரே சொல்வதைப் போல, அவர் ஜகன்னாதனின் தாசர். உலகத்தைக் காப்பவனான ஜகன்னாதனையே நம்பியிருப்பவராகையால், ஸ்ரீஜகன்னாதன் அவருக்குள் நின்று, அனைத்து சாஸ்திரங்களின் பொருளை விளக்கக்கூடிய ஒரு மிகச்சிறந்த கிரந்தத்தை அவர் மூலமாக இயற்றுவதற்கான அருள் செய்தார். இவர்கள் மட்டுமல்லாமல் இன்னும் பல ஹரிதாசர்கள் மானவி பகுதியில் பிறந்து, அந்த இடத்தின் சூழ்நிலையை, பவித்ரமாக்கினர். அவர்களில் சிலரை மட்டும் இந்தக் கட்டுரையில் பார்க்கலாம்.

**<u>ஸ்ரீவிஜயதாசர்</u>**

அஞ்ஞான திமிரச்சேதம் புத்தி சம்பத்ப்ரதாயகம் |
விக்ஞான விமலம் ஷாந்தம் விஜயாக்ய குரும்பஜே ||

ஹரிதாச சாகித்யத்தில் இரண்டாம் கட்டத்தில் முதலாமவர் ஸ்ரீவிஜயதாசர். ப்ருகு முனிவரின் அம்சம் இவர் என்று சொல்லி, இவரின் முந்தைய பிறவிகளை அறிஞர்கள் இப்படியாக சொல்கின்றனர். த்ரேதாயுகத்தில் சுரலீலா என்னும் கபியாக ஸ்ரீராமரின் சேவை செய்தவர். த்வாபர யுகத்தில் நிகம்ப என்னும் யாதவனாக ஸ்ரீகிருஷ்ணனின் சேவையை செய்தவர். கலியுகத்தில் புரந்தரதாசரின் வீட்டில் பசுவின் ரூபத்தில் பிறந்து, பிறகு தாசரின் மகன் மத்வபதியாக அவதரித்தவர். மத்வபதியே ஸ்ரீவிஜயதாசராக அவதரித்தார்.

உத்தர கர்னாடகத்தின் ராய்ச்சூர் ஜில்லா மானவி தாலுக்கின் சிகலபரவி (சிக்கபதரி) இவரது பிறந்த இடம். அங்கிருந்த வைஷ்ணவ குடும்பத்தின் ஸ்ரீனிவாசப்ப மற்றும் கூசம்மா தம்பதிகளுக்கு அஸ்வத்த நாரசிம்ம தேவரின் அருளால் பிறந்தார். கூசி மக தாச என்றே பெயர் பெற்றார். எழ்மைச் சூழ்நிலையில் வாழ்க்கை சென்றாலும், தக்க வயதில் உபநயனம் நடைபெற்றது.

தாய்மாமன் வீட்டில் வாழ்ந்து, அவரால் அவமானப்படுத்தப்பட்டு, மனம் வெறுத்து, வீட்டை விட்டு வெளியேறி கால் போன போக்கில் நடந்தார். காசி யாத்திரைக்கு சென்றார். காசியில் ஸ்ரீஹரி, புரந்தரதாசரைப் போல காட்டிக்கொண்டு அருளினார். அங்கிருந்து வியாசகாசிக்கு சென்று, வேதவியாசரின் தரிசனத்தைப் பெற்று, நாரதரிடமிருந்து 'விஜய' என்னும் பீஜாக்ஷர அங்கிதத்தைப் பெற்றார். கண் திறந்து பார்க்கையில் மனதிலிருந்து கவலைகள்

மறைந்திருந்தன. தாள, கெஜ்ஜெ, தம்புரி பிடித்து, அச்யுதனின் பெருமையைக் கொண்டாடினார்.

'அந்தரங்கத கதவு தெரெயிதிந்து' என்று அந்தரங்கத்தில் இறைவனைக் கண்டார். பல முறை காசியாத்திரையை செய்தார். பல க்ஷேத்திரங்களைப் பற்றிய சுளாதி, கீர்த்தனை, உகாபோகங்களை இயற்றினார். அங்கிருந்து சிகலபரவிக்கு வந்தார். பல ஹரிதாசர்களுக்கு தீக்ஷை அளித்தார். சிஷ்ய பரம்பரையை உருவாக்கி, அவர்களை மேம்படுத்தினார்.

குருகளின் மேல் அபாரமான பக்தியை வைத்திருந்தார். புரந்தரதாசரைக் குறித்து பல்வேறு கிருதிகளை இயற்றினார். உபாசனா சுளாதிகள், க்ஷேத்ர சுளாதிகள், ஸ்தோத்திர சுளாதிகள், ப்ரமேய சுளாதிகள் ஆகியவற்றை இயற்றி, சுளாதி தாசர் என்றே பெயர் பெற்றார்.

ஸ்ரீவிஜயதாசர், ஒரு சாதாரண ஹரிதாசரைப் போல் இருக்கவில்லை. தத்வஞானத்தை முழுவதுமாக அறிந்திருந்தார். அவர் பார்த்த அனைத்துமே கமலநாபனின் மூர்த்தி. உண்டு உடுத்தியதெல்லாமே விஷ்ணுபூஜை என்னும் அனுசந்தானம் (நற்சிந்தனை) பெற்றிருந்தார். பணிவு, பொறுமை, மன்னிக்கும் திறன் ஆகியவையே இவரது குணங்களாக இருந்தன. அனைவரையும் மேம்படுத்த வேண்டும் என்பதே இவரது குறிக்கோளாக இருந்தது.

ஸ்ரீவிஜயதாசர் தமது 73ம் வயதில் 1755ம் ஆண்டு கார்த்திக சுத்த தசமியன்று சிப்பகிரியில் ஸ்ரீஹரிபாதத்தை அடைந்தார். 'சிப்பகிரிய தபோமூர்த்தி' என்றே அவர் பெயர் பெற்றார்.

**<u>ஸ்ரீஜகன்னாததாசர்</u>**

ஜலஜேஷ்ட நிபாகாரம் ஜகதீஷ பதாஸ்ரயம் |
ஜகதீதல விக்யாதம் ஜகன்னாத குரும்பஜே ||

ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர் இவர்களின் பரிபூர்ண அருளைப் பெற்றவர் ஸ்ரீஜகன்னாததாசர். தாச சதுஷ்டயர் என்று அழைக்கப்படுபவர்களில் இவர் நான்காமவர்.

ராய்ச்சூர் ஜில்லா மானவி தாலுகா பாக்யவட கிராமத்தில் வசித்துவந்த நரசிம்மாசார்ய மற்றும் லட்சமம்மா தம்பதியினருக்கு, திருப்பதி திம்மப்பனின் அருளால் பிறந்தார். குழந்தைக்கு ஸ்ரீனிவாச என்று பெயரிட்டனர். ஸ்ரீராகவேந்திர மடத்தின் குருபரம்பரையில் வந்த ஸ்ரீவரதேந்திர தீர்த்தரிடம் பாடம் பயின்றார்.

சிறு வயதிலிருந்தே ஆசு-கவியாக திகழ்ந்தார். கவிதை, சாஸ்திரம் இவற்றுடன் சங்கீதம், சம்ஸ்கிருதம், மத்வ சாஸ்திரம் என அனைத்தையும் கற்றுத் தேர்ந்தார் ஸ்ரீனிவாச. தமது 18வது வயதிலேயே 'வியாச-த்ரய' கிரந்தங்களை பிறருக்கு பாடம் சொல்லும் திறன் பெற்று, பண்டிதராக திகழ்ந்தார். குருகளால் 'ஆசார்ய' என்னும் பட்டத்தைப் பெற்றார்.

இப்படியான கற்றறிந்த ஞானிகளும்கூட பிறவிப்பயனை அனுபவிக்காமல் இருப்பதில்லை என்பது இவரின் வாழ்க்கையிலிருந்து தெரியவருகிறது. அத்தகைய பிறவிப்பயனால், தீராத வயிற்றுவலிக்கு ஆளானார். அதுவே அவரை ஹரிதாசராகவும் மாற்றியது. ஸ்ரீஹரிகதாம்ருதசாரம் என்னும் மிகச்சிறந்த கிரந்தத்தை இயற்றுவதற்கும் அதுவே காரணமாக இருந்தது.

ஒரு முறை, ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீனிவாசாசார்யரின் வீட்டிற்கு வந்து, தாம் பிராணதேவருக்கு நைவேத்தியம் சமர்ப்பிக்கப் போவதாகவும், அதனை ஏற்றுக்கொள்ள ஆசார்யர் வரவேண்டுமென்றும் அழைப்பு விடுத்தார்.

சஸ்கிருதக்கெ புரஸ்கார
ப்ராக்ருதக்கெ திரஸ்கார
கன்னடதல்லி பத ஹாடுவ தாசரன்னு கண்டரெ திரஸ்கார
தாசரு மாடித நைவேத்திய க்ராஹ்யவல்ல எம்ப மனோவிஹார

(சம்ஸ்கிருதத்திற்கு புகழ்ச்சி பேசுமொழிக்கு இகழ்ச்சி. கன்னடத்தில் பதம் இயற்றும் தாசரைக் கண்டால் ஏளனம். தாசர் செய்த நைவேத்தியம் ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல என்னும் மனோபாவம்)

என்பதே ஆசார்யரின் நினைப்பாக இருந்தது. ஆசார்யர், தாசரை புறக்கணித்தார். தாசர் வீட்டு போஜனம் தம் அந்தஸ்திற்கு குறைவு என்று எண்ணினார். தாம் சரியான நேரத்திற்கு உணவு உண்ணவில்லையெனில், வயிற்றுவலி வந்துவிடும் என்று கூறினார். ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யரான கோபாலதாசர் அங்கு இருந்தார். தம் குருகளுக்கு ஏற்பட்ட அவமானத்தை அவரால் தாங்கமுடியவில்லை. ‘அப்படியே ஆகட்டும்’ என்றார். அன்று துவங்கிய வயிற்றுவலி ஆசார்யருக்கு குணமாகும் வழியே தெரியவில்லை.

மந்திராலயம், திருப்பதி ஆகிய இடங்களில் சேவை செய்து, பின் விஜயதாசரிடமே வந்து சரணடைந்தார் ஆசார்யர். ஸ்ரீவிஜயதாசர், அவரை தம் சிஷ்யரான கோபாலதாசரிடம் அனுப்பினார். ஆசார்யரும் கோபாலதாசரிடம் வந்து முறையிட்டார். அவரும், ஸ்ரீவிஜயதாசரின் ஆணைப்படி, சோளரொட்டியை சமைத்து, அதனை தன்வந்திரி மந்திரத்தினால் அபிமந்திரித்து, தம் 40 ஆண்டு கால ஆயுளை தானம் செய்தார். அதனால் ஆசார்யரின் வயிற்றுவலி குறைந்து அவரில் இருந்த கர்வம் பங்கமாகி கரைந்தது. ஹரிதாசராக வாழ்வதற்கு அங்கிதம் தரவேண்டி குருகளை வேண்டினார்.

’நீங்கள் பண்டரிபுரத்தில் பாண்டுரங்கனின் தரிசனத்தைப் பெறுங்கள். உங்களுக்கு அங்கேயே அங்கிதம் கிடைக்கும்’ என்று கூறி அனுப்பிவைத்தார் கோபாலதாசர். அதன்படியே பண்டரிபுரத்திற்கு வந்த ஆசார்யர், அங்கு சந்திரபாகா நதியில் ஸ்னானம் செய்யும்போது, ஒரு மரப்பலகையைக் கண்டார். அதில் ‘ஜகன்னாதவிட்டலா’ என்று எழுதியிருந்ததைக் கண்டு, அதுவே பாண்டுரங்கனின் ஆணை என்று எண்ணி, அதையே தனது அங்கிதமாக வைத்துக்கொண்டார். ஸ்ரீஹரியின் தாசானுதாசராகவே இறுதிவரை வாழ்ந்தார்.

பின் பண்டரிபுரத்திலிருந்து நேராக மந்திராலயத்திற்கு வந்தார். குருகளை மனம் நெகிழ்ந்து பல்வேறு பாடல்களை இயற்றி வணங்கிப் போற்றினார். குருவான கோபாலதாசர் மற்றும் விஜயதாசரைக் குறித்து ஸ்தோத்திரங்கள் இயற்றினார். அனைத்து வேத சாஸ்திர ரகசியங்களை, எளிய கன்னடத்தில் மொழிபெயர்த்தார். அதுவே ‘ஹரிகதாம்ருதசாரம்’ எனப்பட்டது.

ஹரிபக்தர்களுக்கு தாசர், தங்கத் தாம்பாளத்தில், பரிமாறிய சுவை மிகுந்த போஜனம் இந்த கிரந்தம். இது மட்டுமல்லாமல், பல தேவ தேவதைகளின் ஸ்தோத்திரம், நதி, ஆசார விசார ஆகியவற்றைப் பற்றியும் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார் தாசர். சுளாதிகள், உகாபோகங்கள், தத்வசுவ்வாலி மற்றும் அனுபவதரங்கிணி என்னும் தீர்க்க கிருதியையும் இயற்றியிருக்கிறார். ரங்கோலியை சிறப்பாக வரைந்து ‘ரங்க வலித தாசர்’ என்று புகழ் பெற்றார். மானவியில் இவர் வசித்த வீடே இன்றைக்கு ஆலயமாகியிருக்கிறது.

<u>**ஸ்ரீகல்லூர் சுப்பண்ணாசார்யர்**</u>

கல்லூரு புர வாசஸ்தம் சுதாப்ரவசனேபடு:
விஜயார்யானு க்ருஹீதம் வேணுகோபால சிஷ்யகம் |

சேவிதம் த்விஜ வ்ருந்தேஷ்வ சிஷ்ய சம்பத்விபூஷிதம்
சிஷ்ய முக்யோ ரகுபதிம் வந்தேஹம் வ்யாசவிட்டலம் ||

ராய்ச்சூர் மாவட்ட மானவி தாலுக் கல்லூர் கிராமமானது, பழைய அக்ரஹாரம் மற்றும் பல பாடசாலைகளைக் கொண்டிருந்தது. பாஸ்கர க்ஷேத்திரம் என்றும் பெயர் பெற்றிருந்தது.

அங்கிருந்த ஒரு மாத்வ ஆன்மிக தம்பதிகளிடம், ஸ்ரீஹரியின் அருளால் பிறந்த குழந்தையான சுப்பண்ணனே, பின்னர் சுப்பண்ணர் ஆனார். ஸ்ரீமன் நியாயசுதா கிரந்தத்தில் மிகச்சிறந்த பண்டிதராக இருந்தார். ஒவ்வொரு ஆண்டும் கல்லூரில் ஸ்ரீமன் நியாயசுதா மங்களத்தை செய்துவந்தார். அங்கு பல பண்டிதர்கள், வித்வாம்சர்கள் வந்துகொண்டிருந்தனர். அங்கு விஜயதாசரும் இருந்தார் ஆனால் யாருக்கும் அவரை அடையாளம் தெரியவில்லை.

ஒருமுறை மானவிக்குச் சென்ற சுப்பண்ணாசார்யர், அந்த முறை நடக்கும் சுதா மங்களத்திற்கு அனைவரையும் அழைத்தார். அங்கிருந்த விஜயதாசரையும் அழைத்தார். மனதில் இவரல்லவா 'கூசி மக தாச' என்னும் நினைப்பும் இருந்தது.

சுதா மங்கள நிகழ்ச்சியில் பற்பல பண்டிதர்கள் வந்து இருந்தனர். ஆனால் சமையல் செய்பவர் மட்டும் வந்திருக்கவில்லை. ஆசார்யர் கவலைப்பட்டிருந்தார். அப்போது விஜயதாசர், சமையல்காரர் வேடத்தில் வந்து பக்ஷ்யத்தை தயாரித்தார். சரியான விதத்தில் சுதா பாடத்தைக் கூறினார். இதனைக் கண்ட அனைவரும், விஜயதாசரின் மகிமைகளை அறிந்தனர். ஆசார்யர், அவரின் காலில் விழுந்து, மன்னிப்பு கேட்டு தம்மை காப்பாற்றும்படி கேட்டுக்கொண்டார். ஸ்ரீவிஜயதாசர் மகா கருணாசாலிகள். அவரை அரவணைத்து 'வியாசவிட்டலா' என்னும் அங்கிதத்தை வழங்கினார்.

ஹரிபக்தர்களின் மகிமைகளை அறிந்து, அவர்களின் நட்பிலேயே இருக்கவேண்டும் என்று வியாசவிட்டலருக்கு உபதேசித்து, ஆசிர்வதித்தார். குருகளைக் கொண்டாடும் விதத்தில் 'விஜயகவச'த்தை இயற்றி அர்ப்பித்தார் வியாசவிட்டலர். இது நட்சத்திர மாலிகா ஸ்தோத்திரம் என்றும் அழைக்கப்படுகிறது. பின்னர், குருகளின் அருளால் பல்வேறு கீர்த்தனை, சுளாதி, உகாபோகங்களை இயற்றினார் வியாசவிட்டலர்.

<u>**புத்தின்னி மனோஹரதாசர் (1703-1772)**</u>

மானவி தாலுக்காவின் பூரலதின்னி (புத்தின்னி) கிராமத்தின் கணக்காயர் வீட்டைச் சேர்ந்தவர். கௌதம கோத்திரத்தில் தேஷ்பாண்டே திருமலராயரின் மகனே இவர். இவரை நாராயண, மோனப்ப என்றும் அழைத்து வந்தனர். இவர் ஜகன்னாததாசரின் சிஷ்யராகி, அவரிடமிருந்து 'மனோஹரவிட்டலா' என்னும் அங்கிதத்தைப் பெற்றார். ஹரிகதாம்ருதசாரத்திற்கு பல ஸ்ருதியை எழுதியவர் இவர். பல கிருதிகளை இயற்றியவரானாலும், மிகச்சில கிருதிகளே நமக்குக் கிடைத்துள்ளன.

இவரின் 'ஸ்ரீ அனந்தகதெ' மற்றும் 'மன்மதவிலாஸ' ஆகியவை புகழ்பெற்ற கிருதிகள். ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளைக் குறித்து பல கிருதிகளை இயற்றியிருக்கிறார். அந்த காலத்தில் இவரை 'கவிபிரம்ம' என்று அழைத்து வந்தனர்.

<u>**ஸ்ரீஷ்யாம சுந்தர தாசர், மானவி (1903-1956)**</u>

மானவி தாலுக்கில் பல்லடகி கிராமத்தவர். இவர் அஸ்திஹாள கோவிந்த ராயரின் சிஷ்யர். தாச தீக்ஷையைப் பெற்று, ஷ்யாமசுந்தர விட்டலா என்னும் அங்கிதத்தில் பல்வேறு கிருதிகளை இயற்றியிருக்கிறார். இவர் தமது அனுபவத்தால், ஆசு-கவி என்று புகழ் பெற்று,

சித்தாந்தத்தின் பிரமேயங்களைக் குறித்து தங்குதடையின்று பாடும் திறனைப் பெற்றிருந்தாராம்.

மானவியின் ஜகன்னாததாசரிடம் மிகுந்த பக்தி நம்பிக்கையை வைத்து சாதனை செய்துவந்த மகாபுருஷர் இவர். 'நின்ன அனுக்ரஹ பூர்ணபடெது தன்யரெனிஸித மான்ய மானவி கன்ன குரு ஜகன்னாததாசர சன்னிதானதி பந்தெ தந்தெ' என்று தாசரின் அந்தர்கதனான பகவந்தனின் கருணையை தான் சம்பாதித்த விதத்தைக் கூறியிருக்கிறார்.

<u>ஸ்ரீராகவேந்திராசார்யர். அங்கிதம் : ஸ்ரீரகுபதி விட்டலா.</u>
காலம் 1730-1815

இவர் மானவி தாலுக்காவின் கல்லூர் கிராமத்தைச் சேர்ந்தவர். பரம வைராக்யசாலி. 'வைராக்யசாலி தம்மண்ண' என்றே அழைக்கப்பட்டார். இவர் தமது 22ம் வயதில் ஸ்ரீவியாச விட்டலரிடம் 'ரகுபதி விட்டலா' என்னும் அங்கிதத்தைப் பெற்றார். 'ஆத்யாத்ம மாலா' மற்றும் 'பராபர விட்டலா' என்னும் கிரந்தங்களை, 23 சுளாதிகளை மற்றும் 5 உகாபோகங்களை இயற்றியிருக்கிறார். இவருக்கு ஸ்ரீனிவாச பூவராக ரகுபதி என்னும் சிஷ்யர் இருந்தார் என்று தெரியவருகிறது.

<u>ஸ்ரீசிங்கப்பா படவாரி. அங்கிதம்: ஸ்ரீஷ விட்டலா.</u>
காலம்: 1850-1910.

மானவி தாலுக்கின் கோர்கல்லு இவரது பிறப்பிடம். இங்கிருக்கும் வெங்கடரமணனே இவரது ஆராத்ய தெய்வம். இவர், ராமபஜனாம்ருத என்னும் ஷதாஷ்டகத்தை இயற்றியிருக்கிறார். பற்பல கிருதிகள், சுளாதி, பயலாடங்களை இவர் இயற்றியிருக்கிறார். இவரின் சந்திரஹாஸ சரிதை மிகவும் புகழ் பெற்றது.

<u>ஸ்ரீகிஷனராவ் தேசாய். அங்கிதம் : விஜயசாரதி.</u>
காலம்: 1904-1989.

மானவி தாலுக்கின் மரகந்தின்னி கிராமத்தின் தேசாய் குடும்பத்தவர். ஸ்ரீஷ்யாம சுந்தர தாசரிடமிருந்து 'விஜயசாரதி' என்னும் அங்கிதத்தைப் பெற்றவர். பல்வேறு திறமைகளைப் பெற்றிருந்த இவர், 50 கலைகளில் தேர்ந்தவராக இருந்தார். அரிசியில், சந்தன துண்டுகளில், ஸ்ரீராமரை, ஸ்ரீஜகன்னாததாசரை வரையும் திறன் பெற்றிருந்தார். ஓவியத்திலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். தம் உற்றார் உறவினர்களுக்கு கடிதம் எழுதும்போது, அதையும் பத்ய ரூபத்திலேயே எழுதியது இவரது திறனாகும்.

<u>குருடி ராகவேந்திராசார்யர்</u>
அங்கிதம்: ஸ்ரீலகுமீச. காலம் : 1928-2007

இவர் மானவி தாலுக்கின் குருடி கிராமத்தில் ஜோயிஸ குடும்பத்தவர். ஸ்ரீஷ்யாம சுந்தர தாசரின் உறவினரான இவர், அவரையே குருகளாகப் பெற்றவர். இவர் சம்ஸ்கிருத சாகித்யம், தாச சாகித்யம், கன்னடத்தின் குமார வியாச பாரத ஆகிய மகா காவியங்களை நன்கு படித்தவர். பயலாடங்களை இயற்றியிருக்கிறார். தேவகக்ஷ, யதிகக்ஷ, தாச கக்ஷங்களைக் குறித்து பல கிருதிகளை இயற்றியிருக்கிறார். தம் சுளாதி, உகாபோகங்களில் மிகவும் அற்புதமான மொழி நடையை பயன்படுத்தியிருக்கிறார். இவரின் 'ஸ்ரீலகுமீச கீர்த்தன மஞ்சரி' புகழ் பெற்றிருக்கிறது.

<u>ஸ்ரீகிருஷ்ணாசார்யர். அங்கிதம்: வேங்கடவிட்டலா.</u>
காலம்: 1888 - 1965

மானவி தாலுக்கின் கல்லூர் கிராமத்து மகாலட்சுமி ஆலயத்தில் பூஜை செய்யும் பூஜகரின் குடும்பத்தவர். இவரது குரு - யளமேலி விட்டலாசார்யர். இவரும் பற்பல கிருதிகளை இயற்றியிருக்கிறார்.

மேற்கூறியவர்களைத் தவிர, ஸ்ரீகர விட்டலா (ஜகன்னாதாசார்யர்) மற்றும் ரங்கனாத விட்டலா (ஸ்ரீராமபத்ராசார்யர்) என்று இன்னும் பற்பல ஹரிதாசர்கள் மானவி பகுதியில் பிறந்து, அந்த பகுதியையே பவித்ரமாக்கி இருக்கின்றனர்.

***

# 22. பித்ரு கண சந்தி

## வித்வான் பெம்மத்தி வெங்கடேஷாச்சார்

மனிதர்கள் தினம் செய்யவேண்டிய யக்ஞுங்கள் ஐந்து.
1. தேவ யக்ஞும் 2. ரிஷி யக்ஞும் 3. பித்ரு யக்ஞும்
4. பூத யக்ஞும் 5. மனுஷ்ய யக்ஞும்

இவற்றில் பித்ரு யக்ஞும் என்பது மிகவும் முக்கியமானது. ஆகவே, ஜகன்னாததாசர், ஹரிகதாம்ருதசாரத்தில், பித்ருகண சந்தி என்று ஒரு தனி சந்தியையே இயற்றினார். இந்த சந்தியிலிருந்து அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் பல உள்ளன. பித்ரு தேவதைகள், சிரார்த்த கர்மம், சிரார்த்தம் செய்யும்போது செய்யவேண்டிய அனுசந்தானம் (சிந்தனை), பித்ரு தேவதைகளில் இருக்கும் பகவத் ரூபங்கள் - என பல முக்கிய விஷயங்கள் இந்த சந்தியில் விளக்கப்பட்டுள்ளன.

நம் வாழ்க்கையில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதைக்கூட இந்த சந்தியில் தாசர் விளக்கியிருப்பதால், இதை 'ஜீவன ப்ரக்ரியா சந்தி' என்றும்கூட சொல்லலாம். அதுமட்டுமல்லாமல், பகவந்தனைப் பற்றி, அம்ச ரூபங்களைப் பற்றி, உபநிஷத்களில் விளக்கப்பட்டிருக்கும் சப்தான்ன ப்ரகரணங்களைப் பற்றி மற்றும் 'இதமித்தம்' என்னும் நிர்ணயத்தை சுலபமாக புரிந்துகொள்ள இந்த சந்தியை நன்றாக படிக்கவேண்டும்.

தந்தெ தாய்கள ப்ரீதிகோசுக2
நிந்த்யகர்மவ தொரெது விஹிதக
ளொந்து மீரத சாங்க கர்மகளாசரிசுவவரு |
வந்தனியராகி இளெயொளு தை
நந்தினதி தைஷிக தஹிக சுக2
திந்த பாள்வரு பஹுதிவஸதலி கீர்த்தியுதராகி ||
(பித்ருகண சந்தி ஸ்லோகம் #5)

மகனானவன், தன் பெற்றோருக்கு மிகவும் அன்புடன் சேவை செய்யவேண்டும். சத்கர்மங்களை விதிமுறைகளின்படி அனுசரிக்க வேண்டும். பெற்றோரின் அன்பினைப் பெறுவதே மிகவும் முக்கியமான பித்ரு யக்ஞும். பெற்றோர் இறந்த பிறகு, அவர்களின் திருப்திக்காக சிரார்த்த கர்மங்களை செய்யவேண்டும்.

**சிரார்த்தம் என்றால் என்ன?**

'ஸ்ரத்தயா க்ரியதே கர்ம இதி சிரார்த்தம்'. மிகவும் சிரத்தையுடன் செய்யப்படும் காரியமே சிரார்த்தம் என்று அழைக்கப்படுகிறது. மிகவும் பக்தியுடன் பிண்டப் பிரதானம் செய்து, பித்ரு தேவதைகளின் அந்தர்யாமியான ஜனார்த்தன ரூபி பகவந்தனை திருப்தி செய்யவேண்டும். இதனால் தன் பித்ருகளுக்கு சத்கதி கிடைக்கட்டும் என்று வணங்கவேண்டும்.

நெனவவில்லதெ நித்யதலி த
ந்னவரு மாடுவ சேவெகைகொ
ண்டவர பித்ருகளிகீவ நந்தானந்த சுக2களனு ||

பக்தர்கள் செய்யும் சிரார்த்த கர்மங்களை, பகவந்தன் தன் சேவையாகவே கருதுகிறான். மிகவும் அன்புடன் அந்த கர்மங்களை பெற்றுக்கொள்ளும் பகவந்தன், பித்ருகளுக்கு மற்றும் அந்த சிரார்த்தத்தை செய்த பக்தர்களுக்கு அனந்தானந்த சுகங்களையே தருகிறான்.

## 22. பித்ரு கண சந்தி

இந்த மிகவும் பவித்ரமான பித்ருயக்ஞத்தில், ஜனார்த்தனரூபி பரமாத்மனையே சிரார்த்த ஸ்வாமி என்று சிந்திக்க வேண்டும். சிரார்த்தத்தில் பயன்படுத்தப்படும் எள், தர்ப்பை ஆகிய பதார்த்தங்களில் ஜனார்த்தனன் தன் ரூபங்களினால் வியாபித்திருக்கிறான். விஸ்வேதேவர்களின் அந்தர்யாமியாக 3555 ரூபங்களால் வியாபித்து, ஜனார்த்தனரூபி பகவந்தன், சிரார்த்த கர்மத்திற்கு எவ்வித தடங்கல்களும் வராமல் காப்பாற்றுவான். ஜனார்த்தனன் என்னும் பெயரே இதை தெளிவாக விளக்குகிறது. ஜ3-னா5-ர்த-5-ன5 என்று அவனின் 3555 ரூபங்களின் சிந்தனையை தாசர் மிகச்சுலபமாக நமக்கு புரியவைக்கிறார்.

பித்ரு தேவதைகளின் அந்தர்யாமியான ஜனார்த்தனனை சிந்தனை செய்யாமல் செய்யப்படும் சிரார்த்த கர்மமானது வீண் எனப்படுகிறது. ஆகையால் ‘ஜனார்த்தன ப்ரேரணயா ஜனார்த்தன ப்ரீத்யர்த்தம்’ என்ற சிந்தனையுடன் மிகவும் சிரத்தையுடன் செய்யப்படும் சிரார்த்த கர்மம், நற்பலன்களையே தருகிறது.

**பகவந்தனின் 96 ரூபங்கள்.**

1. பித்ரு 2. பிதாமஹ 3. பிரபிதாமஹ - ஆகியோருக்கு சிரார்த்த காலத்தில் பிண்ட பிரதானம் செய்யவேண்டும். இந்த பிண்டங்களை அந்தந்த பித்ரு தேவதைகளுக்குக் கொண்டு சேர்ப்பவர்கள் வசு, ருத்ர மற்றும் ஆதித்ய தேவதைகள். இவர்களின் அந்தர்யாமியாக பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் பகவந்தனின் மூன்று ரூபங்களை சிந்திக்க வேண்டும். பகவந்தன் ஒவ்வொருவரிலும் வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் ரூபங்களால் 93 ரூபங்களால் நிலைத்திருக்கிறான். இதன் விவரம் பின்வருமாறு.

மொத்த வசு’க்கள் எட்டு பேர். இவர்களில் வைகாரிக, தைஜஸ, தாமஸ என்னும் அஹங்காரத்தின் மூன்று ரூபங்களால் பகவந்தன் நிலைத்திருக்கிறான். ஏகாதச (11) ருத்ரரில், த்வாதச (12) ஆதித்யரிலும் மூன்று ரூபங்களால் நிலைத்திருக்கிறான்.

அஷ்ட வசுக்களில் : 8x3 = 24
ஏகாதச ருத்ரர்களில் 11x3 = 33
த்வாதச ஆதித்யர்களில் 12x3 = 36
என, மொத்தம் 24+33+36=93 ரூபங்களில் பகவந்தன் இவர்களில் நிலைத்திருக்கிறான்.
1. சிரார்த்தம் (செய்யப்படும் காரியம்). 2. சிரார்த்தம் செய்பவர்
3. சிரார்த்தம் (செய்யும் வழிமுறை)

இதை மேற்கூறிய 93 ரூபங்களுடன் சேர்த்தால், மொத்தம் வருவது 96 ரூபங்கள். இந்த 96 ரூபங்களே பகவந்தனின் ஷண்ணவதி ரூபங்கள் என்று சொல்லப்படுகின்றன. ஓர் ஆண்டில் வரும் ஷண்ணவதி சிரார்த்தங்களின் நாட்களில் இது பொருந்திப் போகிறது.

அஷ்டவசு தேவதைகளுக்காக, கிருதிரமண – பிரத்யும்னன், சிரார்த்தங்களில் தயாரிக்கப்படும் போஜ்ய பதார்த்தங்களில் 24 ரூபங்களில் நிலைத்திருக்கிறார்கள். ஏகாதச ருத்ரர்களில், ஜயாபதி சங்கர்ஷணன், 33 ரூபங்களில் நிலைத்திருக்கிறார்கள். சிரார்த்தங்களில் பித்ருகளை ஆவாகனம் செய்திருக்கும் பிராமணரில் நிலைத்திருந்து போக்த்ரு என்று பெயர் பெருகிறான் பகவந்தன். இப்படியாக த்வாதச ஆதித்யரில் வாசுதேவன் 36 ரூபங்களில் சிரார்த்த காலத்தில் நிலைத்திருக்கிறான்.

ஷாந்திபதியான அனிருத்தன் சிரார்த்தம் செய்யும் கர்த்ருவிடம் மற்றும் சிரார்த்த கர்மத்தில் மற்றும் பிண்ட பிரதானங்களில் நிலைத்திருக்கிறான். பக்தர்கள் செய்யும் சிரார்த்த கர்மங்களை நாராயணன் தன் சேவையாகக் கருதி, அவர்களின் பித்ருகளுக்கு அனந்த சுகங்களைக் கொடுத்து அவர்களை மேம்படுத்துகிறான்.

இவ்விதமாக, சிரார்த்த காலங்களில் பகவந்தனின் பஞ்ச ரூபங்களையும், 96 ரூபங்களையும் சிந்தித்து ஆராதனை செய்யவேண்டும். இதையே இந்த சந்தியில் தாசர் மிகச்சுலபமாக நமக்குப் புரியவைக்கிறார்.

**பித்ருகண சந்தி படிப்பதன் பலன்.**

ஜகன்னாததாசர் சொல்லியிருப்பதைப் போல, சிரார்த்தத்தின் அபிமானி தேவதைகளையும், அவர்களின் அந்தயர்யாமியாக இருக்கும் பிராணபதியான பகவந்தனின் வியாபாரங்களையும் (செயல்களையும்) அறிந்து புரிந்து, பித்ருகாரியங்களை யார் செய்கிறார்களோ அவர்கள், இஹ லோகத்தில் (இங்கு) மற்றும் பரலோகத்தில் (அங்கு), அபரிமிதமான சுகங்களையே பெறுகிறார்கள். பித்ரு சிரார்த்த காலத்தில், பித்ருகண சந்தியை மிகவும் பக்தியுடன் பாராயணம் செய்தால், அவர்களது தோஷங்களை பகவந்தன் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. அவன் நம்மை தவறாமல் காக்கிறான் என்று தாசர் நம்பிக்கையை / தைரியத்தைக் கொடுக்கிறார்.

**சப்தான்ன பிரகரணத்தைப் பற்றி:**

இவ்வுலகில் பிறக்க வைத்து, தேகத்தைக் கொடுக்கும் பகவந்தனே, வாழ்வதற்குத் தேவையான அன்னத்தையும் கொடுக்கிறான். ஆகையாலேயே, அவனுக்கு ‘அன்ன’ என்று பெயர் வந்திருக்கிறது. அன்னத்தைக் கொடுப்பவன் மட்டுமல்ல, அவனே அன்ன-போக்த்ருவும் (அன்னத்தை உண்பவன்) ஆகியிருக்கிறான். இதை தாசர், ஆறு நுடிகளில் வர்ணித்திருக்கிறார். தலைமைப் பொறுப்பில் இருந்து, தினமும் ஏழு விதமான அன்னத்தை உட்கொள்கிறான். இந்த ஏழு வகையான அன்னத்தை பகவந்தனுக்கு நாம் சமர்ப்பிக்க வேண்டும். பிருஹதாரண்யக உபநிஷத்தில் வரும் மிகச்சிறந்த இந்த விஷயத்தின் சிந்தனையை தெள்ளத் தெளிவாக விளக்கியிருக்கிறார் தாசர்.

**ஏழு வித அன்னங்களின் பெயர் என்ன?**

1. வைஸ்வதேவத்தின் மூலமாக வாசுதேவ ரூபியான ‘ஸ்வாஹா’ என்னும் ரூபத்தினால் பிரம்மாதி தேவதைகளை திருப்திப்படுத்துகிறான்.
2. பலிஹரணத்தின் மூலமாக சங்கர்ஷண ரூபி பகவந்தன் ‘ஸ்வதா’ என்னும் பெயரைப் பெற்று, பித்ருதேவதைகளை திருப்திப்படுத்துகிறான்.

3. போஜன யக்ஞத்தின் மூலம், ப்ரத்யும்ன ரூபியான பகவந்தன் அன்னமயனாகி, மனிதர்களை திருப்திப்படுத்துகிறான்.

4. பூத யக்ஞத்தின் மூலம், அனிருத்த ரூபியான பகவந்தன், பாலின் ரூபத்தில் இருந்து பசு, பறவைகளை திருப்திப் படுத்துகிறான். நான்கு வித அன்னத்தை, சதுர்மூர்த்திகளுக்கு சமர்ப்பணம் செய்யும்போது தினமும் இப்படியாக அனுசந்தானம் (சிந்தனை) செய்யவேண்டும். இந்த ஏழு வித அன்னங்களை மட்டுமல்ல, நாம் செய்யும் அனைத்து செயல்களையும் நாராயணரூபி பகவந்தனுக்கு சமர்ப்பணம் செய்யவேண்டும்.

5. மானசிக யக்ஞத்தின் மூலம், மனோமய ரூபத்தில் இருந்து பக்தர்களை திருப்திப்படுத்துகிறான்.

6. வாசனிக யக்ஞத்தின் மூலம், நாராயணன் வாங்மய (வேத புராணங்கள் முதலிய) ரூபத்தில் இருந்து, பேச்சுகளால் திருப்திப்படுத்துகிறான்.

7. காலிக யக்ஞத்தின் மூலம் நாராயணன் தேகத்தில் நிலைத்திருந்து, தேகத்தினால் செய்யப்படும் செயல்களிலிருந்து திருப்திப்படுத்துகிறான்.

**புண்ய பாவ செயல்களை சமர்ப்பணம் செய்யும் விதம்.**

'பாபகர்மவு பாதுகெகளு அனுலேபவனு சத்புண்ய' என்று தாசர் சொல்லியிருப்பதைப் போல, பாப கர்மங்களை, பச்சாதாபத்துடன் பகவந்தனின் பாதுகைகளாக நினைத்து சமர்ப்பணம் செய்யவேண்டும். புண்ய கர்மங்களை எவ்வித பலன்களையும் எதிர்பார்க்காமல், பகவந்தனுக்கு சந்தனத்தைப் போல சமர்ப்பிக்க வேண்டும். புண்ணியம் மற்றும் பாவங்களை நான் ஸ்வதந்திரனாக செய்வதில்லை. பகவந்தனே இதை செய்விக்கிறான் என்று நினைத்து, அந்த இரண்டு வித கர்மங்களிலும், நம் அஸ்வதந்த்ரத்தையும், பகவந்தனின் ஸ்வதந்த்ரத்தையும் நினைக்க வேண்டும். இதுவே சமர்ப்பணம் ஆகும்.

எந்தரிது சப்தான்னகள தை
நந்தினதி மரெயதெ சதா கோ
விந்தகர்ப்பிஸு நிர்பயதி மஹயக்ஞவிதுயெந்து || (14-15)

இப்படியான சப்தான்னங்களின் விஷயத்தை ஞானிகளிடமிருந்து அறிபவர்களுக்கு, பகவந்தன் பரம மங்களமான மோட்ச பதவியையே கொடுக்கிறான். இத்தகைய மோட்ச மார்க்கத்திற்கான சுலபமான வழியை தாசர் சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

பகவந்தனின் பல்வேறு ரூபங்களின் சிறப்புகளை தாசர் இங்கு விவரிக்கிறார். வைகுண்டாதி இடங்களில் மூலரூபம், காரண ரூபம், அம்ச ரூபங்களினால், அசையும் மற்றும் அசையாப் பொருட்களைக் கொண்ட இவ்வுலகில் நிலைத்திருக்கிறார். பாலில் தயிர் மறைந்திருப்பதைப் போல எல்லா இடங்களிலும் இருக்கிறார். பாலில் இருக்கும் நெய் தெரியவேண்டுமெனில், அதனை காய்ச்சி, தயிர் செய்து, வெண்ணெய் எடுத்து, அதையும் காய்ச்சினால் நெய் வருகிறது. அதுபோலவே, பால் போன்ற நம் மனதை பக்தியால் நிரப்பி, பகவந்தனின் மகிமைகள் என்னும் ஞானத்தினால் தயிராக்கி, கடினமான தியானத்தினால் மனதினை கடைந்தால், அங்கு மறைந்திருக்கும் பகவந்தன் காட்சி அளிக்கிறான்.

பகவந்தனின் ரூபங்கள், முக்கியமாக மூன்று விதங்கள்:
1. மூலரூபம் 2. காரணரூபம் 3. அம்ச ரூபம்.

**1.மூல ரூபம்:**

மூல ரூபியான பகவந்தன், தனது பக்தர்களின் நலனுக்காக தைத்யர்களைக் கொன்று, பக்தர்களை காப்பாற்றுவான். க்ருத யுக, த்ரேதா யுக, த்வாபர யுகங்களில், மத்ஸ்ய, கூர்ம, வராக, நாரசிம்ம முதலான அவதாரங்களை எடுத்தார். தன் பரிவார தேவதைகளுடன் அவதாரம் செய்த, சச்சிதானந்த ஸ்வரூபியான பகவந்தன், தன் உண்மையான சரீரத்தைக் காட்டாமல், மனிதரைப் போல இருந்து, செயல்களை செய்பவன். இந்த அவதாரங்களில் அவரின் மூல ரூபங்களிலிருந்து வேறுபாடு இல்லாதவை.

**2. காரண ரூபம்:**

இந்த உலகத்திற்கு காரணனான பகவந்தன், மூல பிரக்ருதியில் ஐக்கியமாகிறார். இதனால், பிரம்மாண்டத்தையே நிர்மாணம் செய்து, அதில் காரண ரூபத்தினால் அணுரேணு த்ருண காஷ்ட பரிபூர்ணனாகி (சிறியதிலிருந்து பெரியது வரை அனைத்திலும்) நிலைத்திருக்கிறான்.

**3. அம்ச ரூபம்:**

அம்ச ரூபத்தினால், பகவந்தன் ஜீவர்களின் இதயங்களில் மற்றும் இந்திரியங்களில் இருந்து, அவர்களின் செயல்களுக்கு தக்கவாறு சுக துக்கங்களை அவர்களுக்குக் கொடுக்கிறான்.

இப்படியாக, பகவந்தன் தனக்கு எந்தவொரு பிரதிபலனும் இன்றி, இந்த மூன்று ரூபங்களினால், ஜகத்தினைப் படைத்து, அதில் ஜீவராசிகளைப் படைத்து, அவர்களில் நின்று அவர்களின் சுபாவத்திற்குத் தக்கவாறு செயல்களை செய்து செய்விக்கிறான். மூன்று விதமான ஜீவராசிகளுக்கு அவரவர்களுக்கு தகுந்த இடத்தைக் கொடுக்கிறான்.

**விஷ்ணுவே சர்வோத்தமன்**

ஜட மற்றும் சேதனர்களால் நிரம்பிய இந்த உலகத்திலிருந்து பகவந்தன் வேறுபட்டிருக்கிறான். க்ஷர- அக்ஷரர்களைவிட சிறந்தவனான 'புருஷோத்தமன்' என்று அழைக்கப்படுகிறான். பிரம்மாதி தேவதைகளுக்கும்கூட தேக நாசம் இருப்பதால், அவர்கள் க்ஷர புருஷர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். லட்சுமிதேவி அக்ஷர புருஷள். நித்ய முக்தளான காரணத்தினால், ஈச- கோடியில் சேர்ந்தவள். ஆனாலும், பகவந்தனின் கட்டுப்பாட்டில் இருக்கும் காரணத்தினால், அஸ்வதந்த்ரள் ஆகிறாள். ஆகையால், தாசர், 'அக்ஷரதொளு ரமாமதுசூதனரு' என்று ரமாதேவியை 'ஈச கோடி பிரவிஷ்யள்' என்று தெரிவிக்கிறார்.

க்ஷரஜீவராசிகளில் விலிங்க, சலிங்க என்று இரண்டு விதங்களை சொல்லும்போது, விலிங்க கோடியில் லட்சுமிதேவியை சேர்த்திருக்கிறார். விலிங்க என்றால் முக்தஜீவிகள். சலிங்க என்றால் அ-முக்த ஜீவிகள். சலிங்கத்தில் ஸ்ருஜ்யர் மற்றும் அ-ஸ்ருஜ்யர் என்று இரு வகை உள்ளது. ஸ்ருஷ்டிக்கு வந்தவர்கள் ஸ்ருஜ்யர் என்று அழைக்கப்படுகின்றனர். ஸ்ருஷ்டிக்கு வராதவர்கள் அஸ்ருஜர் என்று அழைக்கப்படுகின்றனர். ஸ்ருஜ்யரில் சாத்விகர், ராஜசர், தாமஸர் என்று மூன்று விதங்கள் உண்டு. இத்தகைய விஷயங்களை தாசர் இதயபூர்வமாக வர்ணித்திருக்கிறார்.

தான் படைத்த ஜீவராசிகளில் பகவந்தன் அந்தர்யாமியாக இருக்கும் காரணத்தால், அவர்களிடமிருந்து வேறுபட்டே இருக்கிறான். இந்த சிந்தனை மிகவும் முக்கியம். அனைவருமே பகவந்தனின் பிரதிபிம்பம் என்னும் நிலையிலேயே இருக்கின்றனர். சூரியனின் பிரதிபிம்பமாக எப்படி வானவில் இருக்கிறதோ, அதுபோலவே ஜீவர்களும் பரமாத்மனின் கட்டுப்பாட்டில் அவனது பிரதிபிம்பமாகவே இருக்கின்றனர். அவனின் கட்டுப்பாட்டில் நாம் நம் செயல்களை செய்து, அவனிடமே நம் மனதைக் கொடுத்து, அனைத்து செயல்களையும் அவனுக்கே சமர்ப்பணம் செய்ய வேண்டும். இத்தகைய சிந்தனை இருந்தால், எந்தவொரு பாவச் செயல்களின் பலனும் நம்மை சேர்வதில்லை.

ஹரிகதாம்ருதசார கிரந்தமானது, பேசுமொழியான கன்னடத்தில் இருந்தாலும், இது பகவந்தனை கொண்டாடுவதால் ஞானிகள் இதனை புறக்கணிக்கக்கூடாது. அவிவேகிகள் இதனை ஒதுக்கினால் என்ன? சூரியோதயத்தைக் கண்டு ஆந்தை அலறினால் அதனால் சூரியனுக்கு ஏதேனும் களங்கம் வருமா? வராது. அதுபோலவே, பக்தர்கள் இல்லாத முட்டாள்கள் இதனை பேசுமொழியில் இருக்கும் நூல் என்று கூறினால், அதனால் பகவந்தனின் மகிமைகளுக்கு ஏதேனும் களங்கம் வருமோ?

இந்த பித்ருகண சந்தியில் தெரிவித்ததைப் போல, பகவந்தன், தன் குண, செயல்களினால் அனைத்து இடங்களிலும் வியாபித்து நிலைத்திருக்கிறார். அந்த பகவந்தனுக்கு நம் அனைத்து விதமான செயல்களை, யக்ஞ ரூபத்தினால் சமர்ப்பணம் செய்ய வேண்டும்.

இதனால் பகவந்தன் நம்மை வாழ்க்கை சுழற்சியிலிருந்து விடுவித்து, நம்மையும் நித்யானந்த ஸ்வரூபராக மாற்றுகிறார்.

**சேதனாசேதனகளலி குரு**
மதரிஸ்வாந்தர்கத ஜக
ந்னாதவிட்டல நிரந்தரதி வியாபிஸி திளிசிகொளதெ |
காதரவ புட்டிஸி விஷயதலி
யாதுதானர மோதிசுவ நி
ர்பீத நித்யானந்தமய நிர்தோஷ நிரவத்ய || (14-31)

***

# 23. ஸ்தம்பமந்திரவாசி

## ஸ்ரீஜகன்னாததாசரு –
## திருமதி. வித்யாஸ்ரீ கட்டி

திருப்பதி திம்மப்பனின் பிரசாதத்தின் ரூபமே ஸ்ரீஜகன்னாத தாசர். ஹரிதாசர்களின் ஊற்றுக்கண்ணான ராய்ச்சூர் ஜில்லா மானவி என்னும் புண்யக்ஷேத்திரத்தில் பிறந்தவர் ஸ்ரீஜகன்னாததாசர். ராய்ச்சூர் ஜில்லாவானது, ஹரிதாசர்களின் தொட்டில் என்றே பிரசித்தமானது. இந்த தொட்டிலானது வெறும் ஒரு குழந்தைக்கு மட்டும் சொந்தமல்ல. இந்த தொட்டிலில் படுத்து, தவழ்ந்து, ஹரிதாசராகி, மனு குலத்தை மேம்படுத்திய ஹரிதாசர்கள் அனேகர். மானவியின் சுற்றுப்புறங்கள், தாசத்வத்தின் உண்மையான அர்த்தத்தை விளக்கிய க்ஷேத்திரங்களாகும். பணிவு நிரம்பிய க்ஷேத்திரம். பரம பவித்ரமான ஹரிதாசர்கள் நிலைபெற்று, வாழ்ந்த புண்ணிய க்ஷேத்திரம். அதனாலேயே ஒரு தாசர் தனது கிருதியில் இவ்வாறு சொல்லியிருக்கிறார். ஜகன்னாததாசர் இங்கு நிலைத்திருக்கும் காரணத்தால், மானவி க்ஷேத்திரம் காசி க்ஷேத்திரத்திற்கு சமம் என்கிறார்.

ஸ்ரீஜகன்னாததாசர் பிறந்தது, மானவியிலிருந்து சுமார் 14கிமீ தூரத்தில் இருக்கும் பாக்யவாட என்னும் கிராமம். அங்கு அவர் பிறந்த வீடு இன்னும் இருக்கிறது. அவரது வீடு தற்போது மிகவும் பாழடைந்திருந்தாலும், அதை சீரமைக்கும் வேலையும் நடந்து கொண்டிருக்கிறது. அங்கு தாசர் தினமும் பூஜித்துவந்த மிகப் பழமையான அனுமந்தனின் கோயில் ஒன்றும் இருக்கிறது.

ராமசீதையர்கள் நடமாடிய புண்ணிய க்ஷேத்திரம் மானவி:

மானவி க்ஷேத்திரம் பரம புண்ணிய க்ஷேத்திரம். ஸ்ரீராமர் தனது வனவாசத்திற்கு சென்றபோது, மானவியின் மலைகளில் தங்கியிருந்தார். இதே வழியில் இன்னும் காணப்படும் பல குறிப்புகளை இன்றும் காணலாம். சீதை ஸ்னானம் செய்த இடம், அவர் சூடிக்கொண்ட மஞ்சள், குங்குமம் ஆகியவற்றை வைத்த அம்மிக்கல் இன்னும் இருக்கிறது. அவர்கள் குளிப்பதற்காக லட்சுமணன் அம்பு எய்தி நீரைக் கொண்டு வந்த கிணறு 'லட்சுமண தீர்த்தம்' என்று அழைக்கப்படுகிறது. இந்த கிணற்றில் ஆண்டு முழுக்க நீர் நிரம்பியிருக்கிறது. சீதை தன்னுடைய பால் பாத்திரத்தைக் கழுவிய கிணற்றிற்கு, 'ஹாலு பாவி' (பால் கிணறு) என்றே பெயர் பெற்றிருக்கிறது. அந்தக் கிணற்றில் இருக்கும் நீர், இன்னமும் மிகச்சுவையாக இருக்கிறது. மொத்த மானவி க்ஷேத்திரமே பயன்படுத்துவதற்குத் தேவையான தண்ணீர் இந்த கிணறுகளிலிருந்து ஆண்டு முழுக்க கிடைக்கிறது என்பது வியப்பான விஷயம்.

மேலும் இந்த தண்ணீர் பல மூலிகை விசேஷங்களைக் கொண்டது. இந்த தண்ணீரைக் குடித்தால் எந்தவொரு நோயும் நம்மை அண்டுவதில்லை என்னும் நம்பிக்கை இருக்கிறது. பல கிமீ தூரங்களைக் கடந்து, இன்றும் இந்த ஹாலுபாவியின் தண்ணீரையே இன்றும் மக்கள் பயன்படுத்துகின்றனர். அது மட்டுமல்ல, ராமசீதையர்கள் பயன்படுத்தியதால், இந்த கிணறுகளின் தண்ணீர் இனிப்பாகவே இருக்கிறது. இதே கிணற்றில் ஒரு வயதான பிராமணர் அவ்வப்போது வந்து, குளித்து, கண்மூடி திறப்பதற்குள் மாயமாவதை பலமுறை பெரியவர்கள் கண்டுள்ளனர். அவர் வேறு யாருமல்ல, சாட்சாத், ஜகன்னாததாசரே வந்திருக்கிறார் என்னும் நம்பிக்கை கிராம மக்களிடையே இருக்கிறது.

**ரங்கவலித தாசர்:**

# 23. ஸ்தம்பமந்திரவாசி

நான் என்னும் அகங்காரம், என்னுடையது என்னும் மமகாரம் முழுமையாக கழிந்தபிறகே அங்கு தாசத்வத்தின் விதை முளைப்பதற்கு சாத்தியம். ஒரு பண்டிதருக்கு நான் என்னும் கர்வம் மிகுந்திருந்தது. ஹரிதாசர்களைக் கண்டால் தோன்றும் ஏளனம், புறக்கணிப்பு ஆகியவை யாருக்கும் இருக்கக்கூடாது என்று மானவியின் ஜகன்னாததாசரின் வாழ்விலிருந்து பாடத்தைக் கற்பித்தான் அந்த ஜகன்னாதன்.

சலங்கை கட்டி, கோபாள புட்டியைப் பிடித்து, ஹரிநாம ஸ்மரணை செய்யும் தாசர்களை நிந்தனை செய்ததன் விளைவு, ஸ்ரீனிவாசாசார்யருக்கு வந்தது தீராத வயிற்றுவலி. செய்த தவறுகளை மன்னித்து, அவருக்கு ஒரு நிரந்தர தீர்வினைத் தருவதற்கு, வந்த அபரோக்ஷஞானி ஸ்ரீவிஜயதாசர், முக்காலும் உணர்ந்த ஸ்ரீகோபாலதாசர் மற்றும் கலியுகத்தின் காமதேனு என்றே அழைக்கப்படும் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள். இவர்கள் அனைவரின் பரமானுக்கிரகம் ஸ்ரீனிவாசாசார்யருக்குக் கிடைத்தது.

இறைவனின் விருப்பப்படி, நம்மை மேம்படுத்துவதற்கு இந்த பூமியில் பிறந்தவர்களே ஹரிதாசர்கள். பாகவத தர்மத்திற்கு மறுமலர்ச்சியை உண்டாக்கிய ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீனிவாசரின் அருளால் பிறந்தவர். ஸ்ரீனிவாசனின் பரமபக்தரான நரசிம்ம தாசர் மற்றும் லட்சுமம்மா என்னும் சாத்விக தம்பதிகளுக்கு பிறந்தார் (1727-1809). எட்டாம் வயதிலேயே அவர் 'வரதேந்திர பஞ்சரத்ன'

என்னும் ஐந்து ஸ்லோகங்களை இயற்றி, ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் ப்ரிய சிஷ்யரானார். புனேயில் நடந்த ஒரு அறிஞர்களின் சபையில், பிரதிவாதிகளை வென்று 'ஆசார்ய' என்னும் பட்டத்தைப் பெற்று, அன்றிலிருந்து, ஸ்ரீனிவாசாசார்யர் ஆனார்.

அவரிடம் சில சமயங்களில் கர்வம் தலைதூக்கியது. தாள தம்பூரியுடன் சலங்கையைக் கட்டி ஆடிப்பாடியவாறு, தேவர நாமங்களைப் பாடியவாறு, வீதிகளில் வருபவர்களைக் கண்டாலே அவருக்கு சரிப்படவில்லை. அப்படியிருக்கும்போது, ஒரு நாள், ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீனிவாசாசார்யரை, போஜனத்திற்காக மிகவும் அன்புடன் அழைத்தார். அதற்கு ஸ்ரீனிவாசாசார்யர், 'கூசி மக தாசனும், அவருடைய கீர்த்தனையும்' என்று கேலி பேசி, எனக்கு நேரத்தில் உண்ணாவிடில் வயிற்றுவலி வந்துவிடும்' என்று கூறி அங்கு போகவில்லை. இதனால் ஸ்ரீவிஜயதாசரை அவமானம் செய்தது போலாயிற்று. குழந்தையைப் போல மனதுடையவரான ஸ்ரீவிஜயதாசருக்கு இச்செயல் எந்தவித விளைவையும் உண்டாக்கவில்லை என்றாலும், அங்கிருந்த அவரது சிஷ்யரான கோபாலதாசருக்கு மிகவும் வலி ஏற்பட்டது. அதை அவமானமாகக் கருதினார். 'நான் உணவிற்கு வரவில்லை. பந்தி நடக்கட்டும்' என்று சொன்ன ஸ்ரீனிவாசாசார்யருக்கு, கோபாலதாசர், 'நீங்கள் சொன்னபடியே ஆகட்டும்' என்றார். விஜயதாசர் அன்றைய உணவினை முடித்தார். அவர் எந்தவித கோபமும், வருத்தமும் படவில்லை. ஆனால், கணேச அம்சம் என்று கருதப்படுபவரான கோபாலதாசர், தமது குருவிற்கு நேர்ந்த அவமானத்திற்காக, அன்றைய தினம் உபவாசம் இருந்தார்.

அத்தகைய மகாமகிமரை நிந்தித்ததற்காக, ஸ்ரீனிவாசாசார் யருக்கு உண்மையாகவே வயிற்றுவலி துவங்கியது. தினமும் அது வளர்ந்தது. எந்த உணவும் உள்ளே போகவில்லை. எந்த இறையிடம் முறையிட்டாலும் வலி குறையவில்லை. இறுதியாக, கலியுகத்து கல்பதரு, காமதேனு என்று இருக்கும் ஸ்ரீகுரு ராகவேந்திர ஸ்வாமிகளிடம் சென்று முறையிட்டார். 'குருவே, இந்த நோய் தீர்ந்தால் மானவிக்குச் செல்கிறேன். இல்லையெனில், இதே துங்கபத்ராவில் மூழ்குவேன்' என்று வேண்டினார்.

க்ருதயுகத்தில் அண்ணனாக இருந்த பிரகலாதராஜர், தன் தம்பியின் நிலையைக் கண்டு 'அன்யதா ஷரணம் நாஸ்தி' என்று சொல்லி, நீ ஸ்ரீவிஜயதாசரை நிந்தித்திருக்கிறாய்.

அவரிடம் போய் சரணாகதி அடைவதைத் தவிர வேறு வழியில்லை' என்று மந்திராட்சதை கொடுத்து ஆசிர்வதித்து அருளி மறைந்தார். மனைவியின் மடியில் அசதியுடன் படுத்திருந்த ஆசார்யரின் கைகளில் மந்திராட்சதை. விவரத்தை விளக்கினார். ஆசார்யர் தம் தவறினை உணர்ந்தார். அன்றே உடனடியாக சிகலபரவிக்குச் சென்று ஸ்ரீவிஜயதாசரைக் கண்டு 'விஜயராய பாஹிமாம். விஜயராய ரக்ஷமாம்' என்று அவரின் பாதாரவிந்தங்களை சரணடைந்தார். கண்ணீர் சொரிந்து முறையிட்டார்.

மிகவும் மெலிருந்திருந்த ஆசார்யரைக் கண்ட ஸ்ரீவிஜயதாசரின் மனது மிகவும் கஷ்டப்பட்டது. அவரை மிகவும் அன்புடன் பிடித்து எழுப்பி, 'இந்த துன்பத்திலிருந்து விடுதலை பெறவேண்டுமெனில், நீங்கள் உடனே உத்தனூருக்குச் செல்லுங்கள். அங்கு என் ப்ரிய சிஷ்யர் இருக்கிறார். அவர் சாதாரணமானவர் அல்ல. கணாதிபனின் அம்சமாகிய அவரே உங்களை இந்தத் துன்பத்திலிருந்து விடுவிப்பார்' என்று சொல்லி அனுப்பினார். உத்தனூரில் இருந்தவர் வேறு யாருமல்ல, முக்காலும் உணர்ந்தவரான, விஜயதாசரின் ப்ரிய சிஷ்யரான ஸ்ரீகோபாலதாசரே அவர். ஸ்ரீவிஜயதாசர் ஏற்கனவே ஸ்ரீகோபாலதாசருக்கு செய்தி சொல்லியிருந்தார். 'தற்போது உங்களிடம் வரும் ஆசார்யருக்கு துர்மரணம் நிகழவிருக்கிறது. அதனை போக்குங்கள். சோள ரொட்டியில் அவருக்கு 40 ஆண்டு கால ஆயுளை தானம் செய்து அவருக்கு அருளுங்கள்' என்று கூறியிருந்தார்.

குருவின் ஆணைக்கேற்பவே, தன்வந்திரிரூபி பகவந்தனை நினைத்தவாறே, ஸ்ரீனிவாசாசார்யருக்கு தமது ஆயுளில் 40 ஆண்டுகளை தானம் செய்து, அவரது வயிற்றுவலியை பரிகரித்தார் ஸ்ரீகோபாலதாசர். ஸ்ரீவிஜயதாசர், தமது சிஷ்யருக்கு ஆயுள்தானம் கொடு என்று சொல்வது என்றால் என்ன? குருகளின் ஆணைக்கேற்ப தனது ஆயுளையே தானம் கொடுப்பது என்றால் என்ன? அந்த ஆயுள்தானத்தைப் பெற்று ஸ்ரீஜகன்னாததாசர் ஹரிதாசராகி, 'ஹரிகதாம்ருதசார' என்னும் அமிர்தத்தை நமக்குக் கொடுப்பது என்றால் என்ன? இவை அனைத்தும் பகவந்தனின் ஆணை மற்றும் அவனது விருப்பத்தின்படியே அனைத்தும் நடக்கின்றன என்பது சத்தியம்.

பின், ஸ்ரீனிவாசாசார்யர் மிகவும் வருத்தத்துடன் உண்மையை உணர்ந்து, தன் கர்வத்தை விட்டொழிந்து, தமக்காக இவர்கள் அனைவரும் செய்த உதவிகளையும், தியாகங்களையும் நினைவு கூர்ந்து, அன்றிலிருந்து வைராக்யசாலிகளாக வாழ வேண்டும் என்று தீர்மானித்து, தன்னை சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளும்படி ஸ்ரீகோபாலதாசரிடம் வேண்டினார். அதற்கு கோபாலதாசர், ' நீங்கள் சாதாரணமானவரல்ல. உங்களால் பல பெரிய செயல்கள் ஆகவேண்டியிருக்கின்றன. முதலில் நீங்கள் பண்டரிபுரத்திற்குச் செல்லுங்கள். அங்கு பாண்டுரங்கள் உங்களுக்கு அங்கிதத்தைக் கொடுப்பார்' என்று சொல்லி அருளினார்.

வியப்புடன் இதைக் கேட்ட ஆசார்யர், அவரின் ஆணைப்படி அங்கிருந்து புறப்பட்டு பண்டரிபுரத்துக்குச் சென்றார். 'எந்து காம்பெனோ பாண்டுரங்க மூர்த்திய' என்று பாடியவாறு சந்திரபாகா ஆற்றில் ஸ்னானம் செய்தபோது 'ஜகன்னாதவிட்டலா' என்று பொறிக்கப்பட்ட ஒரு மரப்பலகை தண்ணீரில் வந்து அவரிடம் சேர்ந்தது. பக்தியுடன் அதை தலை மேல் ஏந்தி, மகிழ்ச்சியில் ஆனந்தக்கண்ணீரை வடித்து 'எந்து காம்பெனோ பாண்டுரங்க மூருதிய, இந்துபாகனிவாஸ நரனா ஸாரதியா' என்று பாடியவாறு, தமக்குக் கிடைத்த அங்கிதத்தினால் பாடலை இயற்றினார்.

ஸ்ரீஜகன்னாததாசர் சாட்சாத் பாண்டுரங்க ருக்மிணியிடம் உணவைப் பெற்று உண்டார். ஏழுமலைவாசன் ஸ்ரீனிவாச னிடமிருந்தே இரு முறை அமிர்தத்தைப் பெற்று மகிழ்ந்தார். பகவந்தனின் மகிமைகளை கோலங்களில் அழகாக வடித்து வந்த இவர், ரங்கோலி தாசர், ரங்கவலித தாசர் என்று பெயர் பெற்றார். இன்றும் மானவி மலையில் ஒரு பகுதியில் இவர்

வரைந்த கோலங்கள் அழியாமல் இருக்க, அதை 'ரங்கோலி குட்டா' (கோல மலை) என்று அழைக்கின்றனர்.

ராயரின் பிருந்தாவனத்திற்கு முன் தாசர் நின்றால், ராயர் அவருக்கு பிரத்யட்சமாக தரிசனம் அளித்து வந்தார். இது சிலருக்குத் தெரிந்து, இவர் ராயரின் தரிசனம் பெறும்போது தாமும் பார்க்கவேண்டும் என்று ரகசியமாக மறைந்திருந்து பார்க்கையில், அன்று ராயர் வெளியே வந்து தரிசனம் தரவேயில்லை. தாசருடன் பேசவும் இல்லை. அதற்காக வருத்தப்பட்ட ஸ்ரீஜகன்னாததாசர் –

'யாகே மூகனாத்யோ குருவே நீ யாகே மூகனாத்யோ' என்னும் கீர்த்தனையை இயற்றி குருராயருக்கு அர்ப்பித்தார். பின்னர் பற்பல கீர்த்தனைகள், சுளாதிகள், உகாபோகங்களை இயற்றினார். பின் ஹரிதாச சாகித்யத்திலேயே மிகச்சிறந்த கிருதியான ஹரிகதாம்ருதசாரத்தை இயற்றினார். இதில் வேத சாஸ்திரம், மீமாம்ஸ சாஸ்திரம், தர்ம சாஸ்திரம், பாகவதாதி புராண சாஸ்திரம், மகாபாரத, ராமாயண, மத்வமுனிகளின் சர்வமூல கிரந்தங்கள் என்று அனைத்தும் உள்ளன. 988 நுடிகளில், பாமினி ஷட்பதி நுடியில், 32 சந்திகளில் இயற்றப்பட்ட பெரிய கிரந்தமாக இது இருக்கிறது. வேணிசோமபுரத்தின் ஸ்ரீவியாச தத்வக்ஞர் இந்த கிருதியை 'அணுசுதா' என்று பெயரிட்டு அழைத்தார்.

ஒருமுறை ஸ்ரீஜகன்னாததாசரின் தாய், திருப்பதி பிரம்மோத்ஸவத்தைக் காண விரும்பினார். ஆனால் அப்போது ஏற்கனவே பிரம்மோத்ஸவம் துவங்கிவிட்டிருந்த நேரம். இனி பாதயாத்திரை செய்து போனால், உற்சவத்தைக் காண்பது சாத்தியமில்லை.

இதனால் தாய் வருத்தமடைந்தத்தை கவனித்த ஸ்ரீஜகன்னாத தாசர், கண் மூடியவாறு தன் தோள் மேல் அமருமாறு கூறினார். பின் கண் திறக்குமாறு கூறியவர், தன் தாய்க்கு அங்கிருந்தே திருப்பதி பிரம்மோத்ஸவத்தைக் காட்டினார். ஆனால், இதை வேறு யாருக்கும் சொல்லக்கூடாது. அப்படி சொல்லிவிட்டால் நான் இனி வீட்டில் இருக்கவே மாட்டேன் என்றாராம்.

ஆனால் பெண்களிடம் ரகசியம் இருக்குமா? ஒருமுறை உறவினர்கள் ஒன்று சேர்ந்த வேளையில், தாய் தான் பிரம்மோத்ஸவத்தை எப்படி பார்த்தேன் என்று அனைவரிடமும் கூறிவிட்டார். அதன் பின் வீட்டில் தாசர் இல்லாததைக் கண்ட தாய், அழுது புலம்பினார். அப்போது தாசர் – நான் இனி இந்த வீட்டில் ஒரு அம்சத்துடன் இருப்பேன். ஹரிசேவை செய்தவாறு, ஹரிபக்தர்களின் விருப்பங்களை பூர்த்தி செய்தவாறு இங்கே இருப்பேன் – என்றார். இத்தகைய ஒரு கதையை முன்னோர் சொல்லி வந்தனர்.

ஆன்மிகம் தவழும் அந்த இடத்தில், ஒரு கம்பத்தில் நிலைத்திருந்து, இன்றும் பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார் தாசர். ஸ்தம்பத்தில் வசித்துவரும் ஜகன்னாததாசரின் புகழ் எல்லா திசைகளிலும் பரவியிருக்கிறது.

***

# ஸ்ரீஜகன்னாததாசர் கண்ட

## 24. அக-உலகம்

### திரு. ஸ்ரீநிதி ஆசார்ய ப்யாடி

இந்த தேகத்தை மாமிசத்தால் இணைக்கப்பட்ட ஒரு அமைப்பு என்று சொல்வது வழக்கமாக இருக்கிறது. ஆனால், இந்த தேகத்துக்குள் ஒரு அற்புதமான உலகமே இருக்கிறது. இதை ஒரு ஆலயம் என்றும் சொல்கின்றனர். இதைப் பற்றி உபநிஷத் சொல்வதாவது. 'ஆவ்ருத்த சக்ஷு: அம்ருதத்வமிச்சன்'. இதையே புரந்தரதாசர், 'கண்ணினொளகெ நோடோ ஹரிய' என்னும் பாடலில் கன்னடத்தில் மொழிபெயர்த்தார். புறக்கண்களினால் பார்ப்பது மட்டுமே உண்மையல்ல. அது சார்வாகரின் வாதம். புறக்கண்களால் கண்டதைவிட ஞானிகள் அகக்கண்களால் கண்டது அதிகம். தாம் கண்டவற்றை எழுதிவைத்தும் போயிருக்கின்றனர். தந்திரசாரத்தில் ஆசார்யர் எழுதியிருப்பதை, தமது அனுபவத்தால் இன்னும் விளக்கமாக எழுதியிருக்கிறார் ஜகன்னாததாசர், விஜயதாசர் முதலான ஞானிகள். ஹரிகதாம்ருதசாரத்தின் நாடிபிரகரண சந்தி இதற்கொரு சரியான உதாரணம்.

நம் உடலில் முக்கியமான ஆறு சக்கரங்கள் உள்ளன. புரந்தரதாசர் இந்த சக்கரங்களைப் பற்றி விவரித்துள்ளார். சாதகர்கள் இந்த சக்கரங்களை தியானித்து, சாதனைப் படிகளில் ஏறியவாறு, இறுதியில் ஸ்ரீஹரியின் தரிசனத்தைப் பெறவேண்டும். இதுவே தியானத்தின் குறிக்கோள் / இலக்கு ஆகும்.

கீழ்க்கண்ட பட்டியலிலிருந்து, சக்கரங்களின் பெயர்கள், அவை இருக்கும் இடங்கள் ஆகியவற்றை தெரிந்து கொள்ளலாம்.

சக்ரத்தின் பெயர் - இருக்கும் இடம்

சஹஸ்ரார - தேகத்தை விட ஒரு அங்குலம் மேலே
ஆக்ஞா - ஆக்ஞா
விருத்த - விருத்த
அனாஹத - ஹ்ருதய
மணிபுர - நாபிக்கு இரு புறமும்
ஸ்வாதிஷ்டான - நாபிபிரதேசம்
மூலாதார - சுஷும்னா, பிருஷ்டபாகம், வஜ்ரிகா நாடிக்கு நடுவில்

இந்த அனைத்து நாடிகளும், சுஷும்னா நாடியில் இணைந்துள்ளன. சுஷும்னா நாடியை முக்கியமாக வைத்துக்கொண்டே இந்த தேகத்தில் 72,000 நாடிகளும் ஓடுகின்றன. தேகத்தின் வலதுபாகத்தில் 36,000 நாடிகளும், இடதுபாகத்தில் 36,000 நாடிகளும் ஓடுகின்றன.

துர்ய நாமகனான புருஷரூபி வாசுதேவன், ஸ்ரீதேவி பூதேவி சகிதமாக தத்வாபிமானி தேவதைகளிடம் சேவை பெற்றுக்கொள்கிறார். அவரே உடலிலுள்ள அனைத்து நாடிகளிலும் வியாபித்திருக்கிறார் என்று தெரிவிக்கிறார் தாசர். இந்த நாடிகள் உடலிலுள்ள பல உறுப்புகளில் / இடங்களில் வெவ்வேறு எண்ணிக்கையில் நிறைந்திருக்கின்றன. வாயுபுராணம் இதை விவரித்துள்ளது.

பாதே த்விஷட் சஹஸ்ரந்து மத்யசைவ சதுர்தஷி |
பாஹௌ சதஸ்ஸஹஸ்ரந்து ஷிரஸி ஷட்ரகீர்திதா: ||

கால்களில் 12,000 நாடிகள், தேகத்தின் நடுப்பாகத்தில் 14,000 நாடிகள், கைகளில் 4,000 நாடிகள், தலையில் 6,000 நாடிகள் என்று மொத்தம் 36,000 வலது பக்கத்திலும், அதே போல் இடது பக்கத்திலும் உள்ளன. இடது பக்க நாடிகளில் பெண் ரூபத்திலும், வலது பக்க நாடிகளில் ஆண் ருபத்திலும் நிலைத்திருந்து, தன்னுடைய தாம்பத்தியத்திற்கு லட்சுமியின் தேவை இல்லை என்று உலகத்திற்குத் தெரியப்படுத்துகிறார் ஸ்ரீஹரி. இந்த 36,000 எண்ணிக்கை என்பது நம் வாழ்க்கைக்கும் சம்பந்தப்பட்டதே ஆகும். ஆண்டிற்கு 360 நாட்கள். நம் ஆயுள் 100 ஆண்டுகள் எனக் கணக்கிடப்படுகிறது. அப்படியென்றால் மொத்தம் 36,000 பகல்கள் மற்றும் 36,000 இரவுகள் வருகின்றன. இதற்கு சமமாகவே உடலின் வலது பாகத்தில் 36,000 நாடிகள் இருக்கின்றன. இந்த சிந்தனையினால் ஒரு பிராமணரை வீட்டிற்கு அழைத்து உணவளித்தால், மொத்தம் 36,000 தம்பதிகளுக்கு உணவளித்தற்கான பலன் கிடைக்கும் என்று ஜகன்னாததாசர் சொல்கிறார். இதையே நினைத்து மேற்சொன்ன செயலை செய்தால், அதிக பலன் கிடைக்கும்.

இந்த 72,000 நாடிகளிலும், 24 தத்வாபிமானி தேவதைகள் தங்கள் மனைவியருடன் இருக்கின்றனர். அப்படியென்றால், மொத்தம் 34,56,000 ரூபங்களில் (72,000 * 24 * 2) ஸ்ரீஹரி இந்த தேகத்தில் நிலைத்திருக்கிறார். ஆகவே இந்த தேகமானது, ஸ்ரீஹரி இவ்வளவு ரூபங்களில் நிலைத்திருக்கும் ஆலயம் என்றாகிறது. இந்த பிண்டாண்டத்தின் (உடல்) பிரதியான பிரம்மாண்டத்திலும் (உலகம்) ஸ்ரீஹரி பற்பல ரூபங்களில் வியாபித்திருந்து, உலகத்திற்கு ஆதாரமாக இருக்கிறார். இதையே ஸ்ரீகிருஷ்ணர் கீதையில் 'மயி ஸர்வமிதம் ப்ரோதம் சூத்ரே மணிகணா இவ' என்று உபதேசித்தார்.

இந்த அனைத்து நாடிகளுக்கும் முக்கியமான நாடி சுஷும்னா ஆகும். இதை பிரம்ம நாடி, ருஜு நாடி என்றும் அழைக்கின்றனர்.

ஈ சுஷும்னாத்$^{4}$யகி2ள நாடி$^{3}$
கோ$^{3}$ஷனாபிமூலத$^{3}$லி வ்ருஷ
ணாஸனத மத்$^{4}$யத$^{3}$ல்லி இப்பது$^{3}$ து1ந்தி$^{3}$னாமத$^{3}$லி ||

என்னும் ஸ்லோகத்தில் ஜகன்னாததாசர், இந்த சுஷும்னா நாடியானது, நாபியிலிருந்து சிறிது கீழ் பாகத்திலிருந்து, எந்தவித வளைவும் இல்லாமல் நேர்ப்பாதையில் தலை வரை சென்று அங்கு முடிகிறது என்கிறார்.

தந்த்ரசாரத்தில் ஆசார்யர்:

மூலாதாரம் ஸமாரப்யத்வா மூர்தானாம்ருசஸ்திதா
மத்யே ஸுஷும்னா விஞ்ஞெயா வஜ்ரெகார்யா விபாஸினீ
வைத்யுதா ப்ரஹ்மனாடிதீ ஸைவ பஞ்சப்ரபேதினி

என்று சுஷும்னா நாடியைப் பற்றி கூறியிருக்கிறார். இந்த சுஷும்னா நாடியே, வர்ஜிகா, ஆர்யா, அவபாஸினி, வைத்யுதா, பிரம்ம நாடி என்று பிரிந்திருக்கிறது. பிரம்ம நாடியும், சுஷும்னா நாடியும் ஒன்றே ஆகும். அதன் நான்கு பிரிவுகளும் மேலும் 25 பிரிவுகளாகப் பிரிகின்றன. இப்படியாக மொத்தம் 101 நாடிகள் ஆகின்றன. பிறகு இந்த நாடிகள் மறுபடி நூறாகப் பிரிகின்றன. ஆக, மொத்தம் 10,000 நாடிகளில், 100 நாடிகள் ஒவ்வொன்றிலும் 20 கிளைகளாகப் பிரிந்து, வேறு முன்னூறு நாடிகள் எட்டு கிளைகளாகப் பிரிந்து, மிச்ச 9600 நாடிகள் ஆறு கிளைகளாகப் பிரிந்து மொத்தம் 72,000 நாடிகள் என்று ஆகின்றன.

மூல நாடிகள் = 10,000
100 நாடிகள் 20 கிளைகள் = 100 * 20 = 2000

முன்னூறு நாடிகள் எட்டு கிளைகளில் = 300 * 8 = 2400
மீத 9600 நாடிகள் ஆறு கிளைகளில் = 9600 * 6 = 57,600
மொத்தம் : 72000

இந்த 72,000 நாடிகளுக்கு முக்கிய ஆதாரமாக இருக்கும் சுஷும்னா நாடிக்கு அபிமானி தேவதையாக பிரம்மன் இருப்பதால், அதை பிரம்ம நாடி என்றும்கூட அழைக்கின்றனர். இந்த 72,000 நாடிகளில், 72,000 ஆறுகள் (நதிகள்) மற்றும் நதி-அபிமானி தேவதைகள் இருக்கிறார்கள் என்று நினைக்க வேண்டும் என்று தாசர் சொல்கிறார்.

சூரிகளு சித்தை[1]ஸுவுது[3] பா[4]
கீ[3]ரதி[1]யெ மொத[3]லாத[3] தீ[1]ர்த[1]க[3]
ளீரதிக[1] எப்பத்து[1] சாவிர நாடி[3]யொளகி[3]ஹவு |
(சந்தி 12 ஸ்லோகம் 19)

ஞானிகள் தங்களின் இந்த அனுபவங்களை, அஞ்ஞானிகளுக்கு / சிரத்தை இல்லாதவர்களுக்கு உபதேசிப்பதில்லை. ஆனால் அவர்கள் மட்டும் தேகத்திற்குள் உள்ளே ஓடும் பற்பல நதிகளை தினந்தோறும் சிந்தித்து அனுபவிக்கின்றனர்.

ஆக, பிரம்மாண்டத்தில் இருப்பவை அனைத்தும் பிண்டாண்டத்திலும் உள்ளன. பிரம்மாண்டத்தில் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரி இந்த பிண்டாண்டத்திலும் வியாபித்திருக்கிறார். கஸ்தூரி மானானது தனது உடலிலிருந்து வரும் நறுமணத்தை காடு முழுவதுமாக தேடுகிறது. அப்படியே, மனிதனும் ஸ்ரீஹரியை உலகத்தில் அனைத்து இடங்களிலும் தேடுகிறான். தன் உடலுக்குள் இருக்கும் உலகத்தையே மறந்துவிடுகிறான். தாசர் உடலுக்குள் இருக்கும் உலகத்தைக் கண்டார், மற்றவர்களை அப்படியே காணுங்கள் என்றும் வேண்டினார். அந்தரங்கத்தில் ஸ்ரீஹரியைக் கண்ட ஜகன்னாததாசர், நம் அகக்-கண்களைத் திறப்பாயாக என்று அவரிடம் வேண்டிக்கொள்கிறார்.

***

# ஹரிகதாம்ருதசாரத்தில்

# 25. முக்யபிராணர்

## திரு.சக்ரி ராகவேந்திர உபாத்யாய

ஹரிதாசர்கள் அனைவரும் மாத்வ சித்தாந்தத்தைப் பின்பற்றுபவர்களாக இருப்பதால், இத்தகைய சித்தாந்தத்தில் ஒப்புக் கொண்டதைப் போல முக்யபிராணனை தம் மூலகுருகளாக நம்பியவர்கள் / அவரையே பின்பற்றியவர்கள். ஆகையாலேயே ஹரிதாச சாகித்யத்தில், பகவந்தனின் விஷயத்திற்குப் பிறகு, முக்யபிராண தேவரின் மற்றும் அவரின் அவதாரங்களைப் பற்றி குறிப்பு அதிகமாக வந்திருக்கிறது. பெரும்பாலும் அனைத்து ஹரிதாசர்களும், முக்யபிராணனின் மூலரூபத்தினைக் குறித்து, அவதார ரூபங்களைப் பற்றி பாடல்களை இயற்றியுள்ளனர். ஹரிகதாம்ருதசாரத்தில் 32 சந்திகளின் 988 பத்யங்களில் 100க்கும் மேற்பட்ட பத்யங்களில், பிராணதேவரின் பரிச்சயம், ஸ்துதி, விளக்கம் ஆகியவை வந்திருக்கின்றன. அங்கங்கு மேற்கோள் காட்டப்பட்டிருக்கும் பிராணதேவனின் விஷயங்களை சிந்திப்பதற்கு, அனுசந்தானம் செய்வதற்கு பயன்படுமாறு

ஸ்ரீபிராணதேவரின்

1. வியக்தித்வ
2. தாரதம்யத்தின் கக்ஷை மற்றும் தத்த ஸ்வாதந்த்ர்ய
3. ஸாதனை
4. ஸ்வாஸ ஜப
5. ஸாதகரின் ஸாதனையில் இவரது பங்கு
6. ரூபங்கள்
7. இவரில் இருக்கும் பகவத் ரூபங்கள்

என ஏழு தலைப்புகளில் இங்கு விளக்கியுள்ளோம். மிகவும் விரிவாக பார்க்கவேண்டுமெனில் கட்டுரை பெரியதாகிவிடும் என்பதால், ஒவ்வொன்றையும் ஒன்றிரண்டு உதாரணங்களுடன் மட்டுமே பார்ப்போம்.

**1. ஸ்ரீபிராணதேவரின் வ்யக்தித்வ**

கமலசம்பவ பவனரீர்வரு
சமரு சமவர்த்திகளு ருத்ரா
த்யமரகணசேவிதரு அபரபிரம்ம நாமகரு |
யமளரிகெ மஹலகுமி தானு
த்தமளு கோடி சஜாதிகுணதி
ந்தமித சுவிஜாத்ய தமரெனிபரு பிரம்ம வாயுகளு ||
(குண தாரதம்ய சந்தி #5)

வாயுதேவரே அடுத்த கல்பத்தில் பிரம்மபதவிக்கு வரப்போகிறார். பிரம்மதேவரிடம் இருக்கும் குணங்கள் அனைத்தும் வாயுதேவரிடமும் இருக்கிறது. ஆனால், ருஜுகணத்தில் சேர்ந்தவர்களில், 99ம் கல்பத்தில் வாயுதேவராகி அவதார த்ரயத்தினால், பகவத் சேவாதிகளை செய்து, 100வது கல்பத்தில் பிரம்ம பதவியை அடைவார். முந்தைய கல்பத்து வாயுதேவரே தற்போது பிரம்மதேவராக இருக்கிறார். ஆகையால், வாயுதேவர் பிரம்மதேவரைவிட ஒரு கல்ப சாதனை மட்டுமே குறைவானவர்; மற்ற அனைத்து குணங்களிலும் பிரம்மதேவருக்கு சமமானவரே ஆவார்.

மாதரிஷ்வ ப்ரம்ஹரு ஜக

ந்மாதெகதமாதீன ரெனிபரு
ஸ்ரீதருணி வல்லபனு ஈர்வரொளாவ காலதலி |
நீதபக்தி ஞான பல ரூ
பாதிஷயதிந்தித்து சேதன
சேதனகளொளு வ்யாப்தனெனிசுவ தத்ததாஹ்வயதி ||
(ப்ருஹத் தாரதம்ய சந்தி #8)

பிரம்ம வாயுகள் இருவரும், லட்சுமிதேவியரைவிட கோடி குணங்கள் குறைவானவர்கள். அவரின் அதீனத்திலேயே இருப்பவர்கள். லட்சுமிபதியான ஸ்ரீபரமாத்மன் அனைத்து காலங்களிலும் ஒரே மாதிரியான ஞான பக்தி பலங்களில், ருத்ராதி அனைத்து தேவதைகளைவிட அதிகமான பக்தி ஞான பலரூபத்தினால் இவர்கள் இருவரும் இருந்து, சேதன அசேதனாத்மகமான இந்த பிரபஞ்சத்தில், அனைத்து இடங்களிலும் அந்தந்த பெயர்களில் நிலைத்திருந்து, இவர்கள் இருவரும் பரமாத்மனைப் போல அனைத்து இடங்களிலும் இருப்பவர்கள் என்ற பெயரைப் பெற்றுத் தருகிறான். ஸம்பூர்ணா னுக்ரஹாத் விஷ்ணோ: வாயு: பூர்ணகுணாத்மக: | - என்னும் 11ம் ஸ்கந்த தாத்பர்யத்திற்கேற்ப பரமாத்மனின் சம்பூர்ண அனுக்கிரகத்தின்படியே, இவர்கள் இருவரும் வியாப்த முதலான சம்பூர்ண குணங்களைப் பெற்றிருக்கின்றனர் என்பது கருத்து.

**2. முக்யபிராணரின் தாரதம்யத்தின் கக்ஷை மற்றும் தத்த ஸ்வாதந்த்ர்ய**

விஷ்ணு சர்வோத்தமனு ப்ரக்ருதி க
நிஷ்டளெனிபள நந்தகுண பர
மேஷ்டி பவனரு கடிமெ வாணி பாரதிகளதம |
விஷ்ணு வஹன பணீந்த்ர ம்ருடரிகெ
க்ருஷ்ண மஹிஷி யரதம ரிவரொளு
ஸ்ரேஷ்டளெனிபளு ஜாம்பவதி யாவேஷ பலதிந்த ||
(அணு தாரதம்ய சந்தி #1)

கோடகாஸ்யன மடதிகிந்தலி
ஹாடகோதர பவனரீர்வரு
கோடி குணதிந்ததமரெனிபரு ஆவகாலதலி |
கேடபதி சேஷாமரேந்த்ரர
சாடிமாடதெ ஸ்ரீஷன க்ருபா
நோடதிந்தலி சர்வரொளு வ்யாபார மாடுவரு ||5

லட்சுமிதேவியரைவிட, பிரம்ம வாயுதேவர்கள், எந்த காலத்திலும், அதாவது, முக்தர்கள் ஆனபிறகும்கூட, ஒரு கோடி குணங்களால் குறைவானவர்கள். கருட, சேஷ, இந்திராதிகளை, லட்சியம் செய்யாமல், ஸ்ரீபரமாத்மனின் கடைக்கண் பார்வையின் பலத்தினால், அனைத்து பிராணிகளிலும் இருந்து, அனைத்து இந்திரியங்களின் செயல்களையும் செய்விக்கிறார்.

ஸ்வதந்த்ரமஸ்வதந்த்ரம் ச த்விதிதம் தத்வமித்யதே = ஸ்வதந்த்ரத்வ அஸ்வதந்த்ரத்வ என்று தத்வத்தில் இரு வகைகள் உண்டு என்று காட்டிய ஸ்ரீ மத்வகுருகள் அடுத்து 'ஸ்வதந்த்ரோ பகவான் விஷ்ணு' என்று ஸ்வதந்த்ரத்வ ஸ்ரீவிஷ்ணுவிற்கு மட்டுமே என்று வலியிறுத்துகிறார்.

ஸ்வரூப ப்ரமிதி ப்ரவ்ருத்தி லட்சணஸத்தாத்ரைவித்யே பரானபேக்ஷம் ஸ்வதந்த்ரம் – ஸ்வரூப, ஞானம் மற்றும் நடவடிக்கைகளின் விஷயத்தில் வேறு யாரையும் எதிர்பார்க்காமல் இருப்பதே ஸ்வதந்த்ர எனப்படுகிறது. எந்தவொரு விஷயத்திலும்

யாரையும் எதிர்பார்க்காமல் இருக்கும் பகவான் ஒருவனே ஸ்வதந்த்ரன் என்பதற்கு சாத்தியமே தவிர, தம் ஸ்வரூப, ஞானம், நடவடிக்கைகள் – இவற்றின் விஷயத்தில் பகவந்தனை சேர்ந்திருக்கும் லட்சுமிதேவியே முதலான வேறு யாரும் ஸ்வதந்த்ர எனப்படுவதற்கு சாத்தியமே இல்லை என்பதை ஸ்ரீஜயதீர்த்தர் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

ஸ்வரூபத்தின் விஷயத்தில் இன்னொருவரை சார்ந்திருக்கும் விஷயத்தில் – சார்ந்திருக்கிறார், சார்ந்திருக்கவில்லை என்று இரு விதங்களாக சொல்லலாமே தவிர, சிறிது சார்ந்திருக்கிறார், சிறிது சார்ந்திருக்கவில்லை என்று சொல்வதற்கு சாத்தியம் இல்லை.

இவ்வாறு பகவந்தனின் அஸாதாரண தர்மமான ஸ்வாதந்த்ர்ய த்தை மற்றவர்களுக்கு பகிர்ந்தளிக்க வருவதில்லை என்று ஸ்ரீமத்வர் தெளிவாக விளக்கியிருப்பதால், ஹரிகதாம்ருத சாரத்தில் ‘தத்த ஸ்வாதந்த்ர்ய’ ஆகிய சந்திகளில், ஸ்வாதந்த்ர்ய தானம் சொல்லப்படுவது இல்லை. மாறாக, ஸ்வாதந்த்ர்ய பூர்வகமான கடமை முக்கியமாக பகவந்தனிடமே இருக்கிறது என்றாலும், பிரம்மசூத்ரத்தின் கர்த்ருத்வாதி கரணத்தில் (2-3-17) விளக்கப்பட்டிருப்பதைப் போல, பகவந்தன் கர்த்ருத்வத்தை பகிர்கிறான்.

கருட சேஷ பவாதி நாமவ
தரிஸி பவன ஸ்வரூபதேஹதி
கரண நிய்யாமகனு தானாகிப்ப ஹரியந்தெ ।
சரசிஜாசன வாணி பாரதி
பரதனிந்தொடகூடி லிங்கத
லிருதிஹரு மிக்காதி தேயரிகில்லவாஸ்தான ||12

**ஸ்வரூப தேகத்திலும் லிங்க தேகத்திலும் வாயுதேவர்:**

இந்த நுடியில் சொல்வதைப் போல, வாயுதேவர் அனைத்து ஜீவர்களின் ஸ்வரூப தேகத்திலும் இருக்கிறார். ஸ்வரூப தேகத்தில் பகவந்தனைத் தவிர வேறு எந்த தேவதைகளும் இருப்பதில்லை. ஆனால் வாயுதேவர் இருக்கிறார். ந்யாய விவரணையில் (4-2-2) உதாரணம் கொடுக்கப்பட்டுள்ள ஒரு ஸ்ருதி – ‘ஜீவஸ்திதேன ரூபேண வேதயத்வஹமித்யபி । பிராண ஏகேவஷீ’ என்று முக்யபிராணன் ஜீவனின் ஸ்வரூபத்தில் இருக்கும் தன் ரூபத்தினால் அவன் ‘அஹம்’ சிந்தனைக்கு உட்படுமாறு செய்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பாகவத தாத்பர்ய நிர்ணயத்தில் (7-2-45) உதாரணம் கொடுக்கப்பட்டுள்ள ‘ப்ரகாஷிகா’ - ‘சக்ஷுராத்யம் மனோ ஜீவோ த்ருஷ்ட்யாதிஸ்சாபி யத்யஷே । ஸ ப்ராண இதி விக்ஞேயோ ஞாதா மந்தா ச ஸ ப்ரபு: । -- கண்கள் முதலான இந்திரியங்களைப் போல ஜீவ ஸ்வரூபமும் முக்யபிராணனின் அதீனம். அவனே முக்கியமாக ஞாதா, மந்தா. அவனாலேயே அனைத்தும் நடக்கின்றன என்று சொன்னதால், ஜீவனின் ஸ்வரூபம், முக்யபிராணனின் அதீனம் என்று குறிப்பிடப்படுகிறது.

இவ்வாறு வாயுதேவர், ஜீவரின் ஸ்வரூப தேகத்தில் இருப்பது மட்டுமல்லாமல், பகவந்தன் எப்படி ‘பிரம்மணி பிரம்ம ரூபோஸௌ..’ என்று இருக்கிறானோ, அந்தந்த ஜீவர்களின் பிம்பரூபியாக அந்தந்த பெயரால் இருக்கிறானோ, அதைப் போல வாயுதேவனும் ‘கருடசேஷ பவாதி நாமவ தரிஸி’ இருக்கிறான். ஆபாஸகோsஸ்ய பவன: பவனஸ்ய ருத்ர: – (ம.பார.தாத்.நிர் 1-14) என்று இருப்பதைப் போல ருத்ராதிகளின் பிம்பரூபத்தில் இருக்கும் பவன, அவர்களின் ரூபம், நாமங்களை பெற்றிருக்கிறான் என்பது சொல்லப்பட்டிருக்கிறது.

லிங்கதேகத்திலாவது மற்ற தேவதைகள் அபிமானிகளாக இருப்பதில்லை என்றாலும், சதுர்முக, சரஸ்வதி, பாரதி - இவர்கள் வாயுதேவருடன் இருக்கிறார்கள்.

* இவ்வாறு வாயுதேவர், ஜீவாத்மரின் ஸ்வரூப தேக, லிங்கதேக, அனிருத்த தேக மற்றும் ஸ்தூல தேக - இந்த நான்கு சரீரங்களில் இருந்துகொண்டு, பாரதி ப்ராணேஷ, ஹம்ஸ மந்திரத்தை ஜபிக்கிறான் என்று - ஈ ஷரீரசதுஷ்டயகளொளு கோஷதாதுகள பாரதி ப்ராணேஷனு .. (சந்தி 7-5) ; ஈரெரடு தேஹகளொளிர்து ஸமீரதேவனு ஷ்வாஸஜப - (சந்தி 12-44) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**3. பிராணதேவனின் சாதனை:**

ஆ பிதாமஹ நூரு கல்ப ர
மாபதிய குண ஜபிஸி ஒலிஸி ம
ஹாபராக்ரம ஹனும பீமானந்த முனியெனிஸி |
ஆ பரம்ப்ரம்மன சுனாபி
கூபசம்பவ நாமதலி மெரெ
வாபயோஜாசன சமீரரிகபினமிபெ நித்ய ||
(கக்ஷ தாரதம்ய சந்தி - #6)

ருஜு கணஸ்தராக இருந்தபோது (பிரம்ம பதவியைப் பெறுவதற்கு முன்னர்) 100 பிரம்ம கல்பங்களின் சாதனை செய்து, 99ம் கல்பத்தில் வாயு பதவியைப் பெற்று ஹனும, பீம, மத்வ என்னும் மூன்று அவதாரங்களால் ராம, கிருஷ்ண, வேதவியாஸர்களின்

சேவையை செய்து, 100ம் கல்பத்தில் பிரம்ம பதவியைப் பெறுவதற்காக பரமாத்மனின் நாபி கமலத்திலிருந்து பிறந்து, கமலசம்பவ என்னும் பெயரைப் பெற்ற, பிரம்ம வாயுகளை அனைத்து காலங்களிலும் நான் நமஸ்காரம் செய்கிறேன்.

சாதனாத் பூர்வதலி இவரிக
நாதிகால பரோக்ஷவில்ல நி
ஷேதகர்மகளில்ல நரகப்ராப்தி மொதலில்ல |
வேதசாஸ்திரகளல்லி இப்ப வி
ரோதவாக்யவ பரிஹரிஸி மது
சூதனனெ சர்வோத்தமோத்தனெந்து துதிசுவரு ||10

தேவ கந்தர்வர்களில் தொடங்கி, பர்ஜன்ய வரைக்கும் கூறிய சாம்ஷர்களான, ஞான விக்ஞான யோகிகளுக்கு, முந்தைய பத்யத்தில் கூறிய சாதனையை செய்வதற்கு முன்னர், அனாதி காலத்தில் அபரோக்ஷம் இல்லை. விசேஷ கர்மாசரணைகள் இல்லை. நரக பிராப்தியும் இல்லை. வேத சாஸ்திரங்களில் பரஸ்பரம் வரும் விரோத வாக்கியங்களை பரிகரித்து, சந்தேகமற்ற ஞானத்தினால், ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று அறிந்து, மகிழ்ச்சியடைவார்கள்.

**4. பிராணதேவனின் ஷ்வாஸ ஜப:**

ஆரு மூரெரடொந்து சாவிர
மூரெரடு ஷத ஷ்வாஸஜபகள
மூருவித ஜீவரொளகப்ஜஜ கல்பபரியந்த |
தா ரசிஸி சாத்வரிகெ சுக சம்
சார மிஸ்ரரிகதம ஜனரிக
பார துக்ககளீவ குருபவமான சலஹெம்ம ||

(மங்களாசரண சந்தி #4)

ஹே பவமானனே. ஸாத்விக, ராஜஸ, தாமஸ என்னும் மூன்று வித ஜீவர்களுக்குள்ளும் இருந்து, தினந்தோறும் 21,600 ஷ்வாஸ ஜபம் என்னும் ஹம்ஸ மந்திர ஜபங்களை, பிரம்ம கல்பத்தின் முடிவு வரைக்கும் செய்து, ஸாத்விகர்களுக்கு முக்தியையும், ராஜஸர்களுக்கு சம்சாரத்தையும், தாமஸர்களுக்கு அந்தந்தமஸ்ஸையும் வழங்குவதற்கு காரணமாக இருக்கிறாய். அத்தகைய நீ எமக்கு அருள்வாயாக.

குப்தனாகித்தனிலதேவ த்வி
சப்தலோகத ஜீவரொளகெ த்ரி
சப்த சாவிரதாருனூரு ஷ்வாஸஜபகளனு |
சுப்தி ஸ்வப்ன சுஜாக்ரதிகளலி
ஆப்தனந்ததி மாடி மாடிஸி
க்லுப்தபோககளீவ ப்ராந்தகெ த்ருதிய ரூபதலி ||17
(கல்ப சாதன சந்தி #17)

வாயுதேவர், 14 உலகத்தில் இருக்கும் பிராணிகளில், அவர்களுக்குத் தெரியாமல் இருந்து, ஸ்வப்ன நிலை, முழித்திருக்கும் நிலை, தூக்க நிலை என்னும் மூன்று நிலைகளிலும் இருந்து; அதாவது எப்போதும் என்று அர்த்தம். அவர்களின் நெருங்கிய நண்பனைப் போல இருந்து, ஒரு நாளுக்கு 21,600 ஷ்வாஸ ஜபங்களை செய்து, செய்வித்து, தன் மூன்றாம் ரூபத்தினால், இறுதியில் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப போகங்களைக் கொடுக்கிறார்.

**5. சாதகனின் சாதனையில் பிராணதேவனின் பாத்திரம்:**

ப்ராண தேவனு த்ரிவிதரொளகெ ப்ர
வீண தானெந்தெனிஸி அதிகா
ரானுசாரதி கர்மகள தா மாடி மாடிசுவ |
ஞான பக்தி சுரரிகெ மிஸ்ர
ஞான மத்யம ஜீவரிகெ அ
க்ஞான மோஹ த்வேஷகள தைத்யரிகெ கொடுதிப்ப ||15

முக்யபிராணதேவர், தேவ மானவ தானவ என்னும் மூன்று வித ஜீவர்களில் இருந்து, மஹா சாமர்த்தியம் உள்ளவராக அவரவர்களின் யோக்யதைக்கேற்ப கர்மங்களை செய்து, செய்வித்து, தேவதைகளுக்கு ஞான பக்திகளையும், மனுஷ்யருக்கு மிஸ்ர ஞானத்தையும், தைத்யர்களுக்கு அஞ்ஞானம், மோகம், த்வேஷங்களையும் கொடுக்கிறார்.

தஹிக தைஷிக காலிக த்ரய
கஹன கர்மகளுண்டு இதரொளு
விஹித கர்மகளிது நிஷ்காமகனு நீனாகி |
ப்ருஹதி நாமக பாரதீஷன
மஹித ரூபவ நெனெது மனதலி
அஹரஹர் பகவந்தகர்ப்பிஸு பரமபகுதியலி ||
(ஜீவ பிரகரண சந்தி #4)

மனிதர்கள் செய்யவேண்டிய கர்மங்கள் மூன்று விதங்கள். அவை:

* தைஹிக -> தேகத்தால் செய்யவேண்டிய செயல்கள். உதாரணம் நமஸ்காரங்கள்.
* தேஷிக -> தேச சம்பந்தமானவை. உதாரணம் காசி முதலான க்ஷேத்திரங்களுக்கு செல்லும்போது அங்கு செய்யவேண்டிய தீர்த்த ஸ்ரார்த்தம் ஆகியவற்றை செய்வது

* காலிக -> கால சம்பந்தமானவை. உதாரணம்: சந்தியாவந்தனம், சிரார்த்தம், சங்கிரமணங்களில் செய்யும் தர்ப்பணம் ஆகியவை.

இப்படி மூன்று விதமான கர்மங்களில் விதிப்படி அனைத்து கர்மங்களையும் செய்ய வேண்டுமெனில் அது மிகவும் கஷ்டமான காரியமாகும். ஆகையால், இந்த மூன்று வித கர்மங்களில் நமக்குத் தகுதியான கர்மங்கள் என்றால், எந்த செயல்களை நாம் கண்டிப்பாக செய்ய வேண்டுமோ அவற்றை அறிந்து, பலன்களை எதிர்பாக்காமல், பகவத் ப்ரீதிக்காக மட்டும் செய்யவேண்டும்.

மேலும் 72,000 நாடிகளில் இருக்கும் வாயுதேவருக்கு ப்ருஹதி என்று பெயர். இத்தகைய ப்ருஹதி சந்தஸ்ஸிற்கு புகழ்பெற்ற ப்ருஹதி நாமகனாத வாயுதேவரை சிந்தித்து, அவரின் அந்தர்யாமியான பகவந்தனுக்கு, தினந்தோறும் நாம் செய்யும் கர்மங்களை மிகுந்த பக்தியுடன் சமர்ப்பிக்க வேண்டும்.

**6. பிராணதேவனின் ரூபங்கள்**

கேட குக்குட ஜலடபெம்ப த்ரி
கோடி ரூபவ தரிஸி சதத நி
ஷாடரனு சம்ஹரிஸி சலஹுவ சர்வசஜ்ஜனர |
கைடபாரியபுரத ப்ரதம க
வாடனெனிசுவ கருட சேஷ ல
லாடலோசனமுக்ய சுரரிகெ ஆவகாலதலி ||21
(கல்ப சாதன சந்தி #21)

வாயுதேவர் மூன்று கோடி ரூபங்களை தரித்து, அசுரர்களைக் கொன்று, சஜ்ஜனர்களைக் காக்கிறார். ‘மஹாபலோஹம் கபிலாக்ய ரூபஸ்த்ரி கோடிரூப: பவனஸ்ச மேஸுத:’ என்னும் நிர்ணய 8ம் அத்தியாயத்தில் 237ம் ஸ்லோகத்தில், ஸ்ரீராமதேவர் கூறும் வாக்கியத்தால், வாயுதேவர் 3 கோடி ரூபங்கள் கொண்டவர் என்பது தெரிகிறது. அந்த ரூபங்களில் சில, ஆகாயத்தில் பறக்கும் ரூபங்கள். சில பூமியில் சஞ்சரிக்கும் ரூபங்கள். சில, தண்ணீரில் வசிக்கும் ரூபங்கள். இந்த ரூபங்களால், துஷ்டர்களைக் கொன்று, சஜ்ஜனர்களைக் காக்கிறார். கருட, சேஷ, ருத்ராதி தேவதைகளுக்கு, வாயு தேவர் பரமாத்மனின் பட்டணத்தின் வாயிலில் முதலாம் த்வாரபாலகனாக இருக்கிறார்.

அதாவது, இவரது மூலமாக உபாஸனையை செய்து, பரமாத்மனை அடைய வேண்டும் என்பது கருத்து. பாரதிரமண முக்யபிராணாந்தர்கத பரமாத்மனையே வணங்க வேண்டுமே தவிர, நேரடியாக பரமாத்மனை துதிப்பதற்கு அதிகாரம் இல்லை என்று அர்த்தம்.

**7. பிராணதேவனில் இருக்கும் பகவத் ரூபங்கள்**

விதி பவாதி சமஸ்தஜீவர
ஹ்ருததொளகெ காத்மனெனிசுவ
பதுமனாபனு அச்யுதானந்தாதி ரூபதலி |
அதிசுபூதத்யாத்ம அதிதெய்
வதொளு கரெசுவ ப்ராண நாகா
பிதனு தஷரூபதலி தஷவித ப்ராணரொளகித்து ||9

பஞ்சபூதங்களிலும், சரீரங்களிலும், தத்வாபிமானிகளிலும் கூட இருக்கும் பகவத்ரூபங்களை விவரிக்கிறார் தாசராயர்.

## 25. முக்யபிராணர்

பாகவத 3ம் ஸ்கந்தம் 7ம் அத்தியாயத்தில்:

விபபாஜாத்மனாத்மான மேகதாதஷதாத்ரிதா |
ஸாத்யாத்மம் ஸாதிதெய்வஞ்ச ஸாதிபூத மிதித்ரிதா ||
விராட்ப்ராணோதஷவித ஏகதா ஹ்ருதயேனச |

ஆத்யவதார பூதனான பரமாத்மன், தன்னை ஒரு ரூபமாகியும், 10 ரூபங்களாகவும், 3 ரூபங்களாகவும் பிரிக்கிறான். ஆத்யாத்ம, ஆதிதெய்வ, ஆதிபூத என்னும் மூன்றில், மூன்று ரூபங்களாகவும், பிராணாதி 5, நாகாதி 5 என்று பிராணங்களில் 10 ரூபங்களாகவும் இருக்கிறான். இதற்கு ஆதாரம், மேற்சொன்ன ஸ்லோகத்தின் வியாக்யானத்தில்:
ததுக்தம் || பிராணாதி பஞ்சகஞ்சைவ ததா நாகாதி பஞ்சகம் ||
ஏவந்து தஷதாப்ராணா ஆத்யாத்மாதி த்ரிதாகிளா || இதி
பிராணாதி பஞ்சகம் என்றால், பிராண, அபான, வ்யான, உதான, சமான இவையே. நாகாதி பஞ்சகம் என்றால், நாக, க்ருகள, கூர்ம, தேவதத்த, தனஞ்சய என 5. இவையே 10 வகையான பிராணங்கள். ஆத்யாத்மாதி மூன்று பேதங்கள், இந்த 10 பிராணர்களில் இருக்கின்றன என்று பொருள். பிரம்மாதி சேதனர்களின் இதயத்தில், 1 ரூபம். ஆக இப்படியாக, ஒரு ரூபனாகவும், 10 ரூபங்கள் உள்ளவனாகவும் இருக்கிறான் என்கிறார். பிரம்ம ருத்ரர்களின் இதயங்களில் ஏகாத்மனாக, ஆத்யவதார பூதனான ஸ்ரீபத்பனாபன், அச்யுத, அனந்த, கோவிந்த என்னும் மூன்று ரூபங்களின் அனந்தானந்தத்தை ஏற்றுக்கொண்டு, அனைத்து சரீரங்களிலும், அத்யாத்ம, அதிதெய்வ, அதிபூத என்னும் மூன்று வித பிரதேசங்களில் வசிக்கிறான்.

அத்யாத்ம என்றால் சரீரத்தில் இருக்கும் கண், காது ஆகிய இந்திரியங்கள். அதிதெய்வ என்றால், தத்வாபிமானி தேவதைகள். அதிபூத என்றால் பஞ்சபூதங்கள். இவை ஒவ்வொன்றிலும், அச்யுத, அனந்த, கோவிந்த என்னும் மூன்று அகண்ட ரூபங்களிலும், பஞ்சபூத, இந்திரியங்கள், தத்வாபிமானிகளில் கண்டரூபியாகவும், இப்படி அச்யுதாதி அனந்த ரூபங்களால் வியாபித்துக் கொண்டிருக்கிறான். பிராண அபானாதி ஐந்து பிராணங்களிலும், நாகக்ருகள ஆதி 5 உப பிராணங்களிலும், இப்படியாக 10 ரூபங்களால் இருந்து, அந்தந்த பெயர்களால் அழைக்கப்பட்டுக் கொண்டிருக்கிறான்.

மூரதிக ஐவத்து ப்ராண ஷ
ரீர தொளக நிருத்தனிப்பை
நூரு ஹன்னொந்ததிக பானனொளிப்ப ப்ரத்யும்ன |
மூரனெ வ்யானனொளகைதரெ
நூரு ரூபதி சங்கருஷணை
நூருமூவத்தைது தானனொளிப்ப மாயேஷ ||19

பிராண = ப்ரா = 3 ண=5. பிராணிகளின் சரீரத்தில், பஞ்சபிராணனின் உள்ளே, அனிருத்தரூபி பரமாத்மன், பிராண நாமத்தில் 53 ரூபங்களால் இருக்கிறான். அபான = அ=1 பா=1 ன=5. 511 ரூபங்களில் பிரத்யும்னன் அபானனில் இருக்கிறான். மூன்றாவது பிராணனான வ்யான சரீரத்தில் வ்யானன் என்னும் பெயரில் சங்கர்ஷணன் இருக்கிறான். வாசுதேவன் உதான நாமக பிராணனில் – உ=5 த=3 ன=5 என 535 ரூபங்களில் இருக்கிறான்.

***

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**